# குற்றாலக் கோவை.

(கருத்துரை குறிப்பு முதலியவற்றுடன்)

யுனிவர்ஸிற்றிக் காலேஜ் தமிழ் விரிவுரையாளர்,

A. S. முத்தையா முதலியார் M. A.

பதிப்பித்தது.

திருவிதாங்கூர், சர்வ கலாசாலையாரால்

வெளிப்படுத்தப்பட்டது.

கொல்லமாண்டு 1124

# குற்ருலக் கோவை.

## உள்ளுறை

# PREFACE

Kuttala Kovai, now published for the first time, is discovered from the big collection of palm-leaf manuscripts preserved in the University Manuscripts Library, Trivandrum. I was entrusted with the editing of this work by the University of Trivandrum and in the edition the original manuscript is followed faithfully but for the introduction of the necessary editorial recensions inevitable in a critical revisal of an old text from a palm-leaf manuscript.

'Kovai' in Tamil Literature is a type of composition in verse which treats of Aham or Inbam, 'chiefly love furtive at first and devoloping into wedded bliss at the end'. It is the old story of man meeting woman by chance; that leads on to mutual love-shy glances, stealthy visits, and amatory exchanges follow and reach their consummation in marriage. The subject is dealt with under four heads namely Kaikkilai (கைக்கிளை), Kalaviyal (களவியல்), Varaiviyal (வரைவியல்) and Karpiyal (கற்பியல்). The poem gets its name from god Kuttala because in each stanza there is a reference to this god. This work consists of 451 stanzas all in the kattalai kalithurai metre (கட்டளைக்கலித்துறை), except the opening overture stanza invoking god Vinayaka. There are 32 love themes (கிளவித் தொகை) with subdivisions or thurais(துறை) under each theme.

The Tamil world is deeply indebted to the authorities of the University of Travancore for the publication of this rare work. My thanks are due to Mr. T. N. Krishna Iyengar, Tamil Pandit of the Manuscripts Library who helped me in getting the manuscript copied from the palm leaves and in preparing notes etc, and to Mr. S. Sathiavgeeswara Iyer, retired Tamil Pandit of the Model School, for comparing the transcript with the original manuscript. I am also greatly indebted to Rao

Sahib M. Raghava Iyengar, Professer of Tamil for Research, University of Travancore, for giving valuable suggestions. My thanks are also due to the Officer in charge of the University Manuscripts Library for rendering help in the publication of this work.

University College,
Trivandrum.
1st March 1949.

*A. S. Muthiah Mudaliar.*

# முகவுரை.



தமிழ் நூல்களில் அகப்பொருள் நூல்கள் என்றும் புறப்பொருள் நூல்கள் என்றும் இரு பிரிவுகள் உண்டு. அறம், பொருள், இன்பம் என்ற மூன்றில், இன்பத்தைப்பற்றிக் கூறும் நூல்கள் அகப்பொருள் நூல்களாம். அறத்தைப்பற்றியும் பொருளைப்பற்றியும் கூறும் நூல்கள் புறப்பொருள் நூல்களாம். இன்பம், தலைவன் தலைவி ஆகிய இருவர்க்குள் அகத்தே நிகழ்வதாம். அகத்தே நிகழும் இன்பத்தை அகம் என்ப. அகமாவது கல்வி, அறிவு, குலம் முதலியவற்றில் ஒத்த ஒரு தலைவனும் தலைவியும் தம்முட் கூடுகின்ற காலத்துப் பிறந்து, அக்கூட்டத்தின் பின்னர் இவ்வாறு இருந்ததென்று பிறர்க்குச் சொல்லப்படாததாய் உள்ளத்து உணர்வாலேயே நுகரப்படும் இன்பமாம்.

அகத்தைப்பற்றிக் கூறும் பொருள் அகப்பொருளாம். சங்க காலத்தில் அகப்பொருளைப்பற்றித் தெரிவிக்கும் நூல்கள் பலவுண்டு. எட்டுத்தொகையுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு முதலியனவும், பத்துப்பாட்டுள் முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, நெடுநல்வாடை முதலியனவும், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, திணைமொழி ஐம்பது, திணைமாலை நூற்றைம்பது முதலியனவும், இறையனார் அகப்பொருளும் அகப்பொருளைச்சார்ந்த நூல்களாம். பரிபாடலிலும் பல பாடல்கள் அகப்பொருள் அமைதியுடையன. பிற்காலத்து ஆக்கப்பெற்ற பிரபந்தச் செய்யுட்களில் அகப்பொருட்டுறை அமைந்தவை பல. அவற்றுள் சிறப்புடையது கோவை நூல்.

மணிகளை ஓரினமாக ஒழுங்குபடக்கோப்பது கோவை என்று பெயர். அதுபோல அகப்பொருட்கிளவிகளை ஒழுங்குபடக்கோத்து நிற்றலின் கோவை என்று பெயராயிற்று. கோவைப் பிரபந்தங்களை இயற்றுவதற்குச் சீரிய புலமை வேண்டும். "யாவையும் பாடிக் கோவை பாடு" என்று வழங்கும் பழமொழியால், பிற பிரபந்தங்களைப் பாடித் தேர்ந்த புலவர்களே கோவையை இயற்றும் தகுதியுடையார்கள் என்பது விளங்கும். வித்தார கவியாற் செய்யப்படும் நூல்களிற் கோவையும் ஒன்று என்பது கீழ்வரும் யாப்பருங்கல விருத்தியுரைகாரர் கூறும் வித்தார கவியின் இலக்கணத்தினின்றும் அறியலாம்.

'வித்தாரகவி யாவான், மும்மணிக்கோவையும், பன்மணிமாலையும், மறமும், கலிவெண்பாவும், மடலூர்ச்சியும்முதலாகிய நெடும்பாட்டும், **கோவையும்**, பாசண்டமும், கூத்தும், விருத்தமும், கதை முதலாகிய செய்யுளும் இயல்இசை நாடகங்களோடும் கலைநூல்களோடும் பொருந்தப் பாடும் பெருங்கவி யெனக்கொள்க.'

இப்பொழுது அறியப்படும் பழைய கோவை நூல்களுள் மணிவாசகப் பெருமான் இயற்றிய திருச்சிற்றம்பலக்கோவையாரும், பாண்டிக்கோவையும் தொன்மைவாய்ந்தன. இவற்றுள் பாண்டிக்கோவையிலுள்ள பல செய்யுட்கள் இறையனார் அகப்பொருள், களவியற்காரிகை, யாப்பருங்கலவிருத்தி, இலக்கண விளக்கம் என்ற நூல்களின் உரைகளில் மேற்கோளாக எடுத்தாளப்பட்டுள்ளன. நூல் முழுவதும் கிடைக்கவில்லை.

கோவை என்னும் நூல் நானூற்றின் மிக்க கட்டளைக்கலித்துறைச் செய்யுட்களால் ஆக்கப்பெற்றுள்ளது. †திருச்சிற்றம்பலக்கோவையார் அல்லது திருக்கோவையார் நானூறு செய்யுட்களால் ஆகியது வேறு பல கோவைகள் நானூற்றின் மிக்க செய்யுட்களை உடையன. பாண்டிக்கோவையில் ஒரு துறைக்கே பல செய்யுட்கள் இருப்பதாகக் காணப்படுதலின், அதன் கண் ஆயிரத்தின் மிக்க செய்யுட்கள் அமைந்திருத்தல் வேண்டும் என்று எண்ண இடம் உண்டு. கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் காங்கேயன் நாலாயிரக்கோவை என்ற நூலொன்று இயற்றியிருந்தார் என்று அறியப்படுகிறது. நாலாயிரஞ் செய்யுட்களை உடையதாயிருத்தல் வேண்டும் என்று அப்பெயரால் கருதப்படுகிறது.

அகப்பொருள் அமைதியுடைமையின் அகப்பொருட் கோவை எனவும், ஐந்திணை நெறிவழிப்படுதலின் ஐந்திணைக் கோவை எனவும், கோவைநூல் பெயர்பெறும். இன்பத்தைப்பற்றிக் கூறுவதனால் இஃது இன்பநூல் என்றும் வழங்கப்பெறும் பொருட்டொடர்பு உடையதாதலின் இது பொருட்டொடர்நிலைச்செய்யுள் என்னும் பிரிவில் அடங்கும்.

---

† "முதற்பொருள் கருப்பொருள் உரிப்பொருள் முகந்து
களவு கற்பெனும் வரைவுடைத் தாகி
நலனுறு கலித்துறை நானூ றாக
ஆறிரண் டுறுப்பு மூறின்றி விளங்கக்
கூறுவ தகப்பொருட் கோவை யாகும்." (இலக்கண விளக்கம் 816.)

"தூய்ந்த கலித்துறைநா னூ றகப்பொருண்மேல்
வாய்ந்தநற் கோவையாம்" (வெண்பாப் பாட்டியல் சூ 15.)

வருக்கக்கோவை எனவும், ஒரு துறைக்கோவை எனவும் வேறு கோவைகள் உண்டு. வருக்கக்கோவை யாவது மொழிக்கு முதலாகும் உயிரெழுத்துக்களும் உயிர்மெய்யெழுத்துக்களும் தனித்தனியே முதலில் அமைய இயற்றப்படுவதாகும். நெல்லை வருக்கக்கோவை பாம்பலங்காரர் வருக்கக்கோவை முதலியன இவ்வகையைச் சார்ந்தன. ஒரு துறைக்கோவை என்பது ஏதேனும் ஒரு துறையில் நூறு அல்லது அவற்றின் மிக்க கலித்துறைகளால் இயற்றப்படுங் கோவையாம் இரகுநாதசேதுபதி ஒரு துறைக்கோவை, சசிவர்ணன்கோவை, தியாகேசர் கோவை முதலியன இவ்வகையைச் சார்ந்தன. இவை முறையே நாணிக்கண் புதைத்தல், வண்டோச்சி மருங்கணைதல், வெறிவிலக்கு என்னும் துறைகளைக் கொண்டுள்ளன.

நன்றியறிவின் திறத்தினால் புலவர்கள் தங்களை ஆதரித்த பிரபுக்கள் மீது கோவைகள் பாடுவதுண்டு. காங்கேயன் நாலாயிரக் கோவை, அசதிக்கோவை, தஞ்சைவாணன்கோவை முதலியன உதாரணங்களாம் பக்திச்சிறப்பால் தெய்வங்களின் மீதும் பாடப் பெற்ற கோவைகள் பல. தமிழ் நாட்டிலுள்ள பெரிய சிவ தலங்களுக்கும் கோவைநூல்கள் உண்டு. திருக்கோவையார், சிராமலைக்கோவை, திருவாவடுதுறைக்கோவை, கலைசைக்கோவை, குளத்தூர்க்கோவை, சீகாழிக்கோவை, மதுரைக்கோவை, கோடீச்சுரக்கோவை, திருவெங்கைக் கோவை, குற்றாலக்கோவை முதலியன தெய்வங்களைப் பற்றியும், தலங்களைப் பற்றியும் எழுந்தனவாம். பழனி முதலிய முருகன் தலங்களுக்கும் சீரங்கம் முதலிய திருமால் தலங்களுக்கும் கோவைகள் உண்டு.

சிறந்த தலைவன் ஒருவன் சிறந்த தலைவி ஒருத்தியை ஊழின் வலியாற் கண்டு, அன்பு கொண்டு இன்பம் அடைந்து மணந்து இல்லறம் நடத்தும் வாழ்க்கையை முறையே கூறும் நூல் இக்கோவையாம் இதனுள் அகப்பொருள் நிகழ்ச்சித் துறைகள்பலவும், அவைகளைக் கொண்ட கிளவிகளும், அவற்றைக்கொண்ட களவு, கற்பு என்னும் கைகோள்களும் காணப்படும். சில கோவைகளில் துறைகள் விரிந்தும் சிலவற்றில் குறைந்தும், சிலவற்றில் வேறுபட்டும் அமைந்துள்ளன.

திருச்சிற்றம்பலக் கோவையாருக்குப் பின் தோன்றியுள்ள பல கோவைகள் நற்கவிராசநம்பி இயற்றிய அகப்பொருள் விளக்க இலக்கணத்தைப் பின்பற்றிக் கூறுவனவாம். இவற்றில் வந்துள்ள கிளவிகள், கைக்கிளை முதல் பொருள்வயிற் பிரிவு ஈறாக முப்பத்து மூன்றாகும். ஒவ்வொரு கிளவியிலும் பல துறைகள் காணப்படுகின்றன. பாங்கி, நாற்றம், தோற்றம், ஒழுக்கம், உண்டி, செய்வினைமறைப்பு,

செலவு, பயில்வு முதலிய எழுவகையானும் ஐயுறுதலை ஒரு துறையாக்கி, சிலர் ஒரு செய்யுளிற் கூறுவதும் உண்டு. சிலர் அதனை விரித்து ஏழு செய்யுட்களிற் கூறுவதுமுண்டு. முப்பத்து மூன்று கிளவிகளுள் தெளிவு, வரைவு என்ற கிளவிகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு துறையையே உடையது.

கோவை நூல்களுள் மணிவாசகப்பெருமான் பாடி அருளிய "திருச்சிற்றம்பலக்கோவையே" தொன்மையும் சிறப்பும் வாய்ந்தது. இஃது இன்பத்துறைகளால் அமைந்த காமநூல் என்று காமுகர் கருதினும், தலைசிறந்த பேரின்ப நிலையும் ஒருங்கே பொதிந்ததாகும். இக் கோவையைப் பற்றி ஒருவர், "ஆரணங் காணென்பர் அந்தணர் யோகியர் ஆகமத்தின், காரணங் காணென்பர் காமுகர் காமநன் னூலதென்பர், ஏரணங் காணென்பர் எண்ணர் எழுத்தென்பர் இன்புலவோர், சீரணங் காயசிற் றம்பலக் கோவையைச் செப்பிடினே" என்று சிறப்பித்துப் பாராட்டியுள்ளார். இதன்கண் உள்ள சிற்றின்ப வரலாற்றைத் தழுவியே பின் வந்த கோவைகளெல்லாம் ஆக்கப் பெற்றுள்ளன. திருச்சிற்றம்பலக் கோவையில் மாணிக்கவாசகப் பெருமான் தன்னைத் தலைவியாக எண்ணி, பொன்னம்பலவாணனைத் தலைவனாகக் கருதி, அவனை அடைவதற்குரிய முறையைக் கூறியுள்ளார். சிற்றின்ப உணர்ச்சி ததும்பக் கூறப்பட்டிருப்பினும், பேரின்ப நிலையைக்காட்டும் ஓர் ஒப்பற்ற நூலாகும்.

"இகத்துள சுகத்திற்கு அளவு கோலாகி
பரத்துள சுகத்தை வரித்த சித்திரமாய்
இல்லறம் என்பதன் நல்லுயி ரேயாய்
நின்ற காதலின் நிலைமை" என்று

மனோன்மணி ஆசிரியர் கூறுவதற்கேற்ப, அகப்பொருட்டுறைகள் இம்மையின்பத்தைக் கூறுவதோடு, பரத்துள இன்பத்தைக் காட்டுந் தன்மையுடையனவாம்.

கோவைச் செய்யுட்களிற் பாட்டுடைத் தலைவன், கிளவித்தலைவன் என இருவர் கூறப்படுவர். கடவுளரையும், அரசர்கள், வள்ளல்கள் முதலியோர்களையும் பாட்டுடைத் தலைவர்களாக அமைத்துக் கோவை பாடப்படுவதுண்டு.

குற்றாலக் கோவை என்பது பாண்டிநாட்டில் தேவாரம் பெற்ற தலமாகிய குற்றாலத்துத் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள குற்றால நாதரைப் பாட்டுடைத் தலைவராக அமைத்துப் பாடப்பட்ட

கோவையாம். கடவுள் வாழ்த்து நீங்கலாக நானூற்று ஐம்பத்தொன்று செய்யுட்களை உடையது. இது ஆசிரியரின் கற்பனாசக்தியால் கற்போர் உள்ளத்தைக் கவருந் தன்மை வாய்ந்தது.

திருக்குற்றாலம் என்பது பாண்டிநாட்டிலே தமிழ்மறை பெற்ற பதினான்கு சிவத்தலங்களுள் ஒன்று. சம்பந்தர் இந்தத் தலத்தைப் பற்றி இரண்டு பதிகங்கள் அருளியுள்ளார். அப்பர், மாணிக்கவாசகர் ஆகிய இருவரும் இத்தலத்தைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளனர் (இவர்கள் அருளிய பாடல்கள் சேர்க்கப்பெற்றுள்ளன.) நீர்வளம், நிலவளம், மலை வளம் முதலிய பல வளங்களாலும் கண்டவர்கள் கண்ணையும் கருத்தை யும் ஒருங்கே கவரத்தக்க பேரெழில் பெற்றது. சகல பாவங்களையும் போக்குந் தன்மையது. வேண்டுவார்க்கு வீட்டின்பத்தையும் நல்கும் மேன்மையுடையது. இத்தலத்தைப்பற்றிய இக்கோவை இத்தலத்தின் மாண்பையும் வனப்பையும் மிக அழகாக எடுத்துரைக்கின்றது. திருக் குற்றாலத்தின் சிறப்பைக் குற்றாலத்தலபுராணத்திற் காணலாகும். திருக்குற்றாலம் என்ற சீர்பெற்ற தலம் தென்காசியை அடுத்து மூன்று மைல் மேற்கே உள்ளது. சாரற்காலத்தில் சுகத்துக்காகப் பல பேர்கள் பல இடங்களினின்றும் வந்து தங்குவார்கள். பல சத்திரங்க ளும் சாவடிகளும் அமைந்துள்ளன. குற்றால நீர்வீழ்ச்சியில் குளித்துப் பலர் சுகமடைந்து வருகின்றனர். இயற்கை யழகு கண்டு மகிழ்தற் குரியதாம். குற்றால மலையின் எழுச்சியும், சோலைகளின் பொலிவும், மரங்களின் வளர்ச்சியும், அருவிகளின் அமைப்பும் தீர்த்தங்களின் சிறப்பும் யாவரையும் வசப்படுத்தும் இயல்பின.

ஏட்டுச்சுவடியிலிருந்த இந்நூல் இதுகாறும் வெளிவந்திலது. காலஞ்சென்ற K. N. சிவராஜபிள்ளை அவர்கள் திருவிதாங்கூர், பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறையில் தமிழ் விரிவுரையாளராக அமர்ந்து வேலை பார்த்த காலத்தில் இவ்வேட்டுச்சுவடியை எடுத்தெழுதி அச்சேற்ற எண்ணங்கொண்டார்கள். அவர்கள் காலஞ்சென்றதன் பின், ஏட்டுச் சுவடி நூல் நிலையம் (manuscript Library) தமிழ்க் கமிற்றியார், யுனி வர்ஸிற்றிக் கலாசாலை தமிழ் விரிவுரையாளராக வேலைபார்ப்பதோடு குற்றாலக்கோவைப் பணியை மேற்கொள்ளுமாறு என்னைப் பணித்த னர். அதன்படி ஏட்டுச்சுவடியிலுள்ள இந்நூல் பகர்த்தி எழுதப்பட்டது. இவ்வேலையை இனிது இயற்றியவர் ஏட்டுச்சுவடி நூல் நிலையத்தில் வேலை பார்த்துவரும் பண்டிதர் T. N. கிருஷ்ணையங்கார் அவர்கள். அவர் குறிப்புரை முதலியவற்றிற்கும் உதவிபுரிந்தார். எழுதியதை ஒத்துப் பார்த்தவர் 'மாடல் பாடசாலை'யில் தமிழ்ப் பண்டிதராயிருந்து ஓய்வு

பெற்றிருக்கும் S சத்தியவாகீசுவர ஐயர் அவர்கள். அச்சாகும் காலத்தில் சில திருத்தங்கள் செய்து தந்தவர் திருவிதாங்கூர், பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியர், ராவ் சாஹிப் M. இராகவையங்கார் அவர்கள். இதனை நல்ல முறையில் அச்சிட்டு உதவினவர் நாகர்கோவில் தென் இந்தியா அச்சுநிலையத் தலைவர் V மகாராஜ பிள்ளை அவர்கள். இவர்கள் யாவருக்கும் என் நன்றி உரித்தாகிறது. ஏட்டுச்சுவடி நூல் நிலையத் தலைவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்நூல் வெளியாவதற்குத் துணைபுரிந்த திருவிதாங்கூர், பல்கலைக்கழக அதிகாரிகளுக்குத் தமிழுலகம் என்றும் கடப்பாடுடையது.

யுனிவர்ஸிற்றிக் கலாசாலை,
திருவனந்தபுரம்.
1—3—49.

இங்ஙனம்,
A. S. **முத்தையா முதலியார்,**
தமிழ் விரிவுரையாளர்.

# நூலாசிரியர் வரலாறு.

குற்றாலத்தைப்பற்றி இருவர் கோவை நூல் பாடியிருப்பதாக அறியக் கிடக்கின்றது. திருக்குற்றாலத்தலபுராணம், திருக்குற்றாலக் குறவஞ்சி, திருக்குற்றாலப்பிள்ளைத்தமிழ் முதலிய நூல்களை ஆக்கிய திரிகூடராசப்பக் கவிராயமூர்த்தி என்பவர் திருக்குற்றாலத்தைப் பற்றிக் கோவை நூல் ஒன்று இயற்றியுள்ளார் என்பர். அது வெளியானதாகத் தெரியவில்லை. அதன் ஏட்டுப்பிரதி தேடுதற்குரியது. இந்தக் கோவை நூல் ஆக்கியோர் பெயர் தெரிந்திலது. ஆனால் ஓர் அறை குறையான ஏட்டின் புற இதழில் "திரிகூடபதி ஆதிக்கியத்தைச் சேர்ந்த தாதம்பட்டி ஒடுக்கத்து **அருணாசல சுவாமிகளாற்** செய்யப்பட்டது" எனக்காண்கிறது.

கோவை நூல் ஆசிரியர் இருவர் காலமும் வேறாகும். குறஞ்சி மேட்டுத் தாமிரசாசனத்தில் கொல்லம் 891-ம் ஆண்டு (கி. பி 1716) முத்துவிஜயரெங்கசொக்கநாத நாயக்கர், திரிகூட ராசப்பக் கவிராயருக்கு முற்றூட்டாக நன்செய் கொடுத்துள்ள செய்தி குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆகவே இந்தக் கவிராயர் 17-ம் நூற்றாண்டு பிற்பகுதியிலும் 18-ம் நூற்றாண்டு முற்பகுதியிலும் இருந்திருக்கலாம். ஆனால் இந்தக் கோவை நூலின் ஆசிரியர் 943-ல் (கி. பி 1768) இக்கோவை இயற்றியதாக நூலின் இறுதியில் காணப்படும் கீழ்வருஞ் செய்யுளினின்றும் அறியலாகும்.

"மகர மதியினிற் பூசநக் கத்திர மாந்தினத்தில்
அகலுங்கொல் லாயிர நாற்பத்து மூன்றெனும் ஆண்டதனில்
பகர்சதுர் நூற்றைம்பத் தொன்றெனுங் கோவையின் பாடல்கொண்டார்
புகர்முக வேழத்தைப் பெற்றகுற் றாலத்துப் புண்ணியரே."

ஆகவே இவ்வாசிரியர் 18-ம் நூற்றாண்டு முற்பகுதியிலும், பிற்பகுதியிலும் வாழ்ந்திருந்தவராதல் வேண்டும்.

கோவை ஏட்டின் இறுதியில் "கோவைக்கு முன்னமும் செய்யுளும் எழுதி முடிந்தது" என்னும் ஓர் குறிப்பு காணப்படுகிறது இதிலிருந்து கோவை ஏடு எழுதினவர் இவ்வாசிரியரோ பிறரோ என ஐயுறுதற்கு இடனுண்டு. இவ்வாசிரியர் நாற்கவிராஜ நம்பி இயற்றிய அகப்பொருள் நூற்பாக்களை எடுத்தெழுதியுள்ளார். இக்கோவையும், மற்றக் கோவைகள் போலவே, இந்த இலக்கணத்தைத் தழுவியுள்ளது

இவ்வாசிரியர் சிவபக்திச் செல்வரென்றும், செந்தமிழ்ப் புலவரென்றும், வடமொழிப்பயிற்சி யுடையவரென்றும், பல நூல்களைப் பயின்றுள்ளவரென்றும் நூலினின்றும் அறிந்து கொள்ளலாம். திருக்குறளிற் பேரன்புடையவர்; இந்நூலிற் பல இடங்களில் அந்நூற் கருத்துக்களையும் பாக்களையும் எடுத்தாண்டிருப்பதனால் இதனை அறியலாகும்.

இவ்வாசிரியரது வாழ்க்கை வரலாற்றைத் தெளிவாக நாம் அறிய முடியாவிடினும் இவரது புகழைத் தெரிவிக்கும் இக்கோவை இவருடைய புலமையையும் இயல்பையும் எடுத்துக் காட்டும் கண்ணாடியாக விளங்குகின்றது.

நூலினின்றும் இவ்வாசிரியர் குற்றாலநாதர்மேல் மிக்க பக்தி உடையவரென்றும், குற்றாலநாதரின் அருள் பெற்றவர் என்றும் எண்ண இடம் உண்டு. 'குறும்பலா வீசர் பவ வினை தீர்க்கும் பரம தயாளர்' என்றும், 'உயிர்க்கு உறுதி பயக்கும் தண்ணளி உடையவர்' என்றும், 'கருத்தொருமை மனதுடையார்க்கு அருளும் குற்றாலர்' என்றும், பல விதமாக குற்றால நாதரைப் பாராட்டிக் கூறியுள்ளார். இவற்றால் குற்றாலக் கடவுள் மாட்டு எத்துணை அன்புடையவர் இவ்வாசிரியர் என்பது தெள்ளிதிற் புலப்படும்.

குற்றால நாதரே யாவர்க்கும் எல்லா இன்பத்தையும் நல்குபவர் என்ற கொள்கையைக் கொண்டவர். அவரையே நினைத்துக்கொண்டிருப்பார்க்கு இகபரம், பவவினை நீக்கம் முதலியன சித்திக்கும். 'எனை ஆண்டகுற்றாலர்', 'எனது விழைவறி குற்றாலர்,' 'கருவில் இனி என்னை ஏவார் குற்றாலர்' முதலியவை ஆசிரியர் குற்றாலநாதரால் ஆட்கொள்ளப் பெற்றவரோ என்று ஐயங்கொள்ள இடனுண்டு. 'சைவத் தலைவர்' என்னும் சொற்றொடரினின்றும் ஆசிரியரின் சைவப்பற்று இனிது பெறப்படும்.

'வடிவே செயுந்தமிழ் சூடும்குற் றாலம்' என்பது ஆசிரியரின் தமிழ்ப் பற்றைக் காட்டுவதாகும் 'சம்பந்தர் இசைத்த பாட்டார்', 'போதர்இசைப் பாச்சூடும் பாதர்' என்ற சொற்றொடர்கள் சம்பந்தர் குற்றாலநாதரைப் பற்றிப் பாடியருளினர் என்ற உண்மையையும், ஆசிரியர்க்குச் சம்பந்தர் மேலுள்ள பற்றையும் தெளிவுற விளக்குவனவாகும்.

# குற்றாலக்கோவை

## நூலாராய்ச்சி.

இக்கோவையில் நூலாசிரியர் தல சம்பந்தமான செய்திகளையும், புராணக் கதைகளையும், பண்டை நூற் கருத்துக்களையும், மரூஉச்சொற்களையும், உலகவழக்குச்சொற்களையும் ஆண்டுள்ளார். மேலும் ஆசிரியரின் கற்பனா சக்தி பெரிதும் பாராட்டற்பாலது. கற்போர் உள்ளத்தைக் கவரும் பல செய்யுட்கள் காணப்படுகின்றன.

## தலச்செய்திகள்.

சிவன் திருநாமம்—திரிகூடநாதர் (237, 321, 330)

அம்பிகையின் திருநாமம்—குழல்வாய்மொழி நாச்சியார். 23, 33, 43, 55, 58, 63, 94, 103, 105, 114, 115, 116, 123, 130, 132, 153, 175, 185, 186, 188, 191, 199, 265, 276, 295, 309, 344, 358, 392, 402.

குற்றால நாதரின் குழை, ஊர்தி, படைகள், மாலை, உரு, புயம், பறை முதலியன இந்நூலினின்றும் விளங்குகின்றன.

நந்தக்குழையினர்

வெல் விடையார்.

கவரிலைச்சூலத்தர்,

கொன்றைத் தொடையர். ஆரை, தும்பை, என்பு, எருக்கம் முதலியவற்றை அணிந்தவர்.

வன்னி உருவுடையார், அருண வடிவினர்.

சதுப்புயரர்.

துடிப்பறையையுடையவர்.

தீர்த்தங்கள்—சிவமது கங்கை (102, 362), குங்குமாகடல் (74, 76) (இதனைப் பொங்குமாகடல் எனவும் கூறுவதுண்டு) வடவருவி (103), தேனருவி (315), சித்திராநதி (61, 88, 243, 362, 385)

வீதி—சங்கநெடுவீதி (164, 288)

மலை—திரிகூடவரை (167, 252, 353, 405, 411) திரிசிரவரை (238) முக்கூடல்வரை (34, 35, 45, 49, 52, 55, 65, 66, 69, 135, 169, 185, 191, 197, 197, 201, 272.)

அடவி—செண்பகாடவி அல்லது செண்பகக்கா (49, 210, 362)

மரம்—ஆல், பலா. குற்றால் எனவும் குறும்பலா எனவும் பெயர்பெறும். 56, 116, 288, 339)

சபை—சித்திரசபை (22, 59, 149, 217, 255, 289, 395, 444)

ஆசிரியர் புராணக்கதைகளைச் செய்யுட்களில் ஆங்காங்கே குறிப்பிட்டுள்ளார்.

## புராணக் கதைகள்

(1) அரி அயன் ஆகிய இருவரும் அரன் அடியையும் முடியையும் தேடியும் காணாதது. (3, 119, 177, 192, 211, 213, 247, 311, 357, 382)

(2) சிவன் மார்க்கண்டேயருக்காக நமனை உதைத்தது—(4, 134, 400)

(3) சிவன் திரிபுரத்தை நெற்றிக்கண்ணால் எரித்தது—7, 25, 37, 79, 124, 134, 218, 264, 283, 393, 402.

(4) சிவன் நஞ்சுண்டு அமைந்தது—50, 82, 105, 120, 133, 148, 157, 235, 241, 290, 314, 350, 381, 408

(5) சிவன் மன்மதனைக் காய்ந்தது—110, 113, 147, 240, 318

(6) சிவன் யானை உரியைப் போர்த்தது—17, 49, 71, 91, 193, 204, 206, 297, 333.

(7) சிவன் புலி அதளை ஆடையாக அரைக்கு அசைத்தது—14, 36, 118, 173, 193, 198, 388.
(8) சிவன் தலை ஓட்டில் பலி ஏற்றது—130, 194, 200, 268, 276, 296, 300, 433.
(9) சிவன் நடனம் புரிந்தது—59, 149. 291. 298, 319, 346.
(10) சிவன் தலையில் கங்கையைத் தரித்திருப்பது—55, 131, 168, 195, 213, 292, 306.
(11) சிவன் எலும்பை அணிந்து அழலில் ஆடியது—223, 248, 281, 413.
(12) சிவன் பிறை சூடினது—42, 74, 149, 370.
(13) சிவன் பாம்பை அணிந்திருப்பது—10, 15, 16, 77, 96, 142, 202, 204, 313, 328, 415.
(14) சிவன் மானையும் மழுவையும் ஏந்தியிருப்பது—16, 24, 102, 197, 212, 261.
(15) சிவன் கொக்கின் இறகை வேய்ந்தது—11
(16) சிவன் பார்வதியைத் தனது இடது பாகத்திற் கொண்டது-8, 20, 21, 58, 63, 94, 116, 144, 171, 175, 185, 186, 188, 191, 195, 199, 203, 256, 257, 265, 278, 295, 303, 309, 344, 351, 358, 392, 402, 410, 414, 442.
(17) சிவன் சனகாதிபர் என்ற நான்கு முனிகளுக்கு ஆல நிழலில் பொருள் காட்டியது—439.
(18) சிவன் மேரு மலையை வில்லாக வளைத்தது.—2, 35, 179, 205, 214, 227, 231, 259, 448.
(19) சிவன் சூரியன் சந்திரன் அக்கினி என முச்சுடர்களையும் கண்களாகக் கொண்டது. 22, 47, 66, 122, 123, 194, 373, 386, 445.
(20) சிவன் வேயிற் பிறந்தது—206
(21) திருப்பாற்கடல் கடைந்து அமிர்தம் எழுந்தது—10, 41, 217.
(22) விநாயகர் சிவனை வலம் வந்து கனி பெற்றதும் முருகன் கனி பெறாததும்—106, 335.
(23) முருகன் வள்ளிக்காக வேங்கை மரம் ஆனது.—43.
(24) முருகன் சூரபத்மனுடன் பொருதது—121.
(25) சூரபத்மன் மாமரமானது—445.
(26) முருகன் வள்ளியை மணந்தது—312.
(27) குருப்பத்தினியாகிய தாரையைச் சந்திரன் தொட்டது.—217.
(28) திருமால் யானைக்காக முதலையைச் சக்கரத்தாற் கொன்றது—187, 346, 363.
(29) திருமால் மூன்றுலகங்களையும் அளந்தது.—136, 176.
(30) திருமால் பாற்கடலிற் பள்ளிகொண்டது.—38, 44.
(31) திருமால் கண்ணை இடந்து சிவனைப் பூசித்தது.—266, 279, 324.
(32) கண்ணன் கோவர்த்தனகிரியைக் குடையாகப் பிடித்துக் கன் மாரியைத் தடுத்தது—145.
(33) கௌதமரும் இந்திரனும் அகலிகை பொருட்டுக் கடலில் மூழ்கிக் கிடந்தது.—54

## திருவிளையாடற் புராணக் கதைகள்.

(1) பாண்டியன் பிரம்பால் சிவன் அடியுண்டது.—226, 343.
(2) பாணபத்திரனுக்காக சிவன் விறகாளாய் வந்து ஏமநாதனை வென்றது—369.

## பெரிய புராணக் கதைகள்.

(1) சுந்தரமூர்த்தி நாயனருக்காக பரவை நாச்சியாரிடம் தூது சென்றது—6, 89, 190.
(2) கண்ணப்ப நாயனர் படைத்த எச்சிற்கறியுண்டது—203

## இராமாயணக் கதைகள்.

(1) இலக்குவன் நாக பாசத்தாற் கட்டுண்டு மீண்டது—44.
(2) இராவணன் கைலைமலையை எடுத்தது—326.
(3) இராமன் ஒருவனுய் மூலபலத்துடன் பொருதது—377.

## பாரதக்கதை.

(1) அருச்சுனனுக்கு வரம் அளித்தது—307.

## குறட்சொற்பொருளாட்சி.

இந்நூலாசிரியர் திருக்குறளை நன்கு பயின்றுள்ளார். அதில் ஈடுபட்டு அதன் சொல்லையும் பொருளையும் சில இடங்களில் எடுத்தாண்டுள்ளார்.

× (1) "பகல்வென்ற காக்கை"—218.

* (2) "பெய்யென்ற காலத்திற் பெய்யும் நன் மாரியும் பெய்வளைக்கே."—387.

o (3) "பெண்ணிற் பெருந்தக்கயாவென."—428.

s (4) "உற்றநோய் நோன்ற."—67.

s (5) "கண்டதுமன்னும் ஒருநாள்."—167.

× திருக்குறள் 481.

* do 55.

o do 54.

s do 261.

s do 1146.

ஆசிரியர் ஆங்காங்கே சில பழமொழிகளையும் அமைத்துள்ளார்.

(1) "கருத்தில் எண்ணம் முகத்தில் எய்தும்"—70

(2) "கண்விழிப்பும் கால் நினைவுமாக"—324

(3) "கல்லாத வேந்தனிற் கூற்று நன்று"—429.

(4) கல்வியுள்ளார்க்கு அவை அச்சமில்லை.- } 39

(5) கனகநிதிச் செல்வியுள்ளார்க்கு இரவு அச்சமிலை }

(6) தாயிற் சிறந்த தமரிலை—421

(7) மூடின கண்ணுக்கில்லை விழித்த கண்ணுக்குள்ளது.—226

## மரூச்சொற்கள், உலகவழக்குச் சொற்கள்.

இந்நூலாசிரியர் மரூஉச் சொற்களைப் பெரும்பாலும் ஆண்டுள்ளார். உணருது, சாயுது நிற்குது, கலைகுது, ஏங்குது, சமானிக்கின், வேணும், உண்டும், ஆச்சு, பருகவில்லை, சுட்டுது, துயருது, முதலிய பல சொற்களைப் பல செய்யுட்களில் புகுத்தியுள்ளார். மேலும் உலக வழக்குச் சொற்களையும் அமைத்துள்ளார். நிசம் என்ற சொல்லைப் பல இடத்தும் காணலாம். வேறு என்னும் பொருளில் பிறம்பு என்ற சொல்லைத் தந்துளார். மோசம், விதனம், கங்குகரை, சடுதி, கண்டோ என்னும் வழக்கு மொழிகளை இந்நூலில் ஆங்காங்கே காணலாகும்.

ஸ்ரீ

# குற்றாலக் கோவை

## கிளவித்தொகை

---

திருஞானசம்பந்தசுவாமிகள் அருளிச்செய்த

# திருக்குற்றாலப் பதிகம்.

*பண்—குறிஞ்சி*
*திருச்சிற்றம்பலம்.*

1. வம்பார்குன்றம் நீடுயர்சாரல் வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக் கோலவண்டியாழ்செய் குற்றாலம்
அம்பானெய்யோ டாடலமர்ந்தா னலர்கொன்றை
நம்பான்மேய நன்னகர்போலுந் நமரங்காள்.

2. பொடிகள்பூசித் தொண்டர்பின்செல்லப் புகழ்விம்மக்
கொடிகளோடுந் நாள்விழமல்கு குற்றாலங்
கடிகொள்கொன்றை கூவிளமாலை காதல்செய்
அடிகண்மேய நன்னகர்போலும் மடியீர்காள்.

3. செல்வமல்கு செண்பகம்வேங்கை சென்றேறிக்
கொல்லைமுல்லை மெல்லரும்பீனுங் குற்றாலம்
வில்லினொல்க மும்மதிலெய்து வினைபோக
நல்குநம்பா னன்னகர்போலுந் நமரங்காள்.

4. பக்கம்வாழைப் பாய்கனியோடு பலவின்றேன்
கொக்கின்கோட்டுப் பைங்கனிதூங்குங் குற்றாலம்
அக்கும்பாம்பும் ஆமையும்பூண்டோ ரனலேந்தும்
நக்கன்மேய நன்னகர்போலுந் நமரங்காள்.

5 மலையார்சாரன் மகவுடன்வந்த மடமந்தி
குலையார்வாழைத் தீங்கனிமாந்துங் குற்றாலம்
இலையார்சூல மேந்தியகையா னெயிலெய்த
சிலையான்மேய நன்னகர்போலுஞ் சிறுதொண்டீர்.

6. மைம்மாநீலக் கண்ணியர்சாரன் மணிவாரிக்
கொய்ம்மாவேன லுண்கிளியோப்புங் குற்றாலங்
கைம்மாவேழத் தீருரிபோர்த்த கடவுள்ளெம்
பெம்மான்மேய நன்னகர்போலும் பெரியீர்காள்.

7. நீலநெய்தல் தண்சுனைசூழ்ந்த நீள்சோலைக்
கோலமஞ்ஞை பேடையொடாடுங் குற்றாலங்
காலன்றன்னைக் காலாற்காய்ந்த கடவுள்ளெஞ்
சூலபாணி நன்னகர்போலுந் தொழுவீர்காள்.

8. போதும்பொன்னு முந்தியருவி புடைசூழக்
கூதன்மாரி நுண்டுளிதூங்குங் குற்றாலம்
மூதூரிலங்கை முட்டியகோனை மிறைசெய்த
நாதன்மேய நன்னகர்போலுந் நமரங்காள்.

9. அரவின்வாயின் முள்ளெயிறேய்ப்ப அரும்பீன்று
குரவம்பாவை முருகமர்சோலைக் குற்றாலம்
பிரமன்னோடு மாலறியாத பெருமையெம்
பரமன்மேய நன்னகர்போலும் பணிவீர்காள்.

10. பெருந்தண்சாரல் வாழ்சிறைவண்டு பெடைபுல்கிக்
குருந்தம்மேறிச் செவ்வழிபாடுங் குற்றாலம்
இருந்துண்டேரு நின்றுண்சமணு மெடுத்தார்ப்ப
அருந்தண்மேய நன்னகர்போலும் மடியீர்காள்.

11. மாடவீதி வருபுனற்காழி யார்மன்னன்
கோடலீன்று கொழுமனைகூம்புங் குற்றாலம்
நாடவல்ல நற்றமிழ்ஞான சம்பந்தன்
பாடல்பத்தும் பாடநம்பாவம் பறையுமே.

திருச்சிற்றம்பலம்.

---

திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த

## திருக்குறும்பலாப்பதிகம்.

பண்—காந்தாரம்

திருச்சிற்றம்பலம்

1. திருந்த மதிசூடித் தெண்ணீர் சடைக்கரந்து தேவிபாகம்
பொருந்திப் பொருந்தாத வேடத்தாற் காடுறைதல் புரிந்தசெல்வர்
இருந்த விடம்வினவி லேலங்கமழ் சோலையின வண்டியாழ்செய்
குருந்த மணநாறுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே.

2. நாட்பலவுஞ் சேர்மதியஞ் சூடிப் பொடியணிந்த நம்பானம்மை
ஆட்பலவுந் தானுடைய வம்மா னிடம்போலு மந்தண்சாரற்
கீட்பலவுங் கீண்டுகிளை கிளையன் மந்திபாய்ந் துண்டுவிண்ட
கோட்பலவின் றீங்கனியை மாக்கடுவ னுண்டுகளுங் குறும்பலாவே.

3. வாடற் றலைமாலை சூடிப் புலித்தோல் வலித்துவீக்கி
யாட லரவசைத்த வம்மா னிடம்போலு மந்தண்சாரற்
பாடற் பெடைவண்டு போதலர்த்தத் தாதவிழ்ந்து பசும்பொனுந்திக்
கோடன் மணங்கமழுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே.

4. பால்வெண் மதிசூடிப் பாகத்தோர் பெண்கலந்து பாடியாடிக்
கால னுடல்கிழியக் காய்ந்தா ரிடம்போலுங் கல்சூழ்வெற்பில்
நீல மலர்க்குவளை கண்டிறக்க வண்டரற்று நெடுந்தண்சாரற்
கோல மடமஞ்ஞை பேடையொ டாட்டயருங் குறும்பலாவே.

5. தலைவாண் மதியங் கதிர்விரியத் தண்புனலைத் தாங்கித்தேவி
முலைபாகங் காதலித்த மூர்த்தி யிடம்போலு முதுவேய்சூழ்ந்த
மலைவா யசும்பு பசும்பொன் கொழித்திழியு மல்குசாரற்
குலைவாழைத் தீங்கனியு மாங்கனியுந் தேன்பிலிற்றுங் குறும்பலாவே.

6. நீற்றே துதைந்திலங்கு வெண்ணூலர் தண்மதியர் நெற்றிக்கண்ணர்
கூற்றேர் சிதையக் கடிந்தா ரிடம்போலுங் குளிர்சூழ்வெற்பில்
ஏற்றேன மேன மிவையோ டவைவிரவி யிழிபூஞ்சாரற்
கோற்றே னிசைமுரலக் கேளாக் குயில்பயிலுங் குறும்பலாவே.

7. பொன்றொத்த கொன்றையும் பிள்ளை மதியும் புனலுஞ்சூடிப்
பின்றொத்த வார்சடையெம் பெம்மா னிடம்போலும் பிலயந்தாங்கி
மன்றத்து மண்முழவ மோங்கி மணிகொழித்து வயிரமுந்திக்
குன்றத் தருவி யயலே புனறதும்புங் குறும்பலாவே.

8. ஏந்து திணிதிண்டோ ளிராவணனை மால்வரைக்கீ ழடரவூன்றிச்
சாந்தமென நீறணிந்த சைவ ரிடம்போலுஞ் சாரற்சாரற்
பூந்த ணறுவேங்கைக் கொத்திறுத்து மத்தகத்திற் பொலியவேந்திக்
கூந்தற் பிடியுங் களிறு முடன்வணங்குங் குறும்பலாவே.

9. அரவி னணையானு நான்முகனுங் காண்பரிய வண்ணல்சென்னி
விரவி மதியணிந்த விகிர்தர்க் கிடம்போலும் விரிபூஞ்சாரன்
மரவ மிருகரையு மல்லிகையுஞ் சண்பகமு மலர்ந்துமாந்தக்
குரவ முறுவல்செய்யுங் குன்றிடஞ்சூழ் தண்சாரற் குறும்பலாவே.

10. மூடிய சீவரத்தர் முன்கூறுண் டேறுதலும் பின்கூறுண்டு
காடி தொடுசமணைக் காய்ந்தா ரிடம்போலுங் கல்சூழ்வெற்பில்
நீடுயர் வேய்குனியப் பாய்கடுவ னீள்கழைமே னிருந்தஞ்செய்யக்
கூடிய வேடுவர்கள் குய்விளியாக் கைமறிக்குங் குறும்பலாவே.

11. கொம்பார் பூஞ்சோலைக் குறும்பலா மேவிய கொல்லேற்றண்ணல்
நம்பா னடிபரவு நான்மறையான் ஞானசம் பந்தன்சொன்ன
வின்பாய பாட லிவைபத்தும் வல்லார் விரும்பிக்கேட்பார்
தம்பால தீவினைகள் போயகலு நல்வினைக ளாராவன்றே.

திருச்சிற்றம்பலம்

---

திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த

## திரு அங்கமாலை.

பண்—சாதாரி

திருச்சிற்றம்பலம்.

1. தலையே நீவணங்காய்—தலை
மாலை தலைக்கணிந்து
தலையா லேபலி தேருந் தலைவனைத்
தலையே நீவணங்காய்

2. கண்காள் காண்மின்களோ—கடல்
நஞ்சுண்ட கண்டன் றன்னை
எண்டோள் வீசிநின் றாடும்பி ரான்றன்னைக்
கண்காள் காண்மின்களோ.

3. செவிகாள் கேண்மின்களோ—சிவன்
எம்மிறை செம்பவள
எரிபோன் மேனிப்பி ரான்றிற மெப்போதுஞ்
செவிகாள் கேண்மின்களோ.

4. மூக்கே நீமுரலாய் — முது
காடுறை முக்கணனை
வாக்கே நோக்கிய மங்கைம ணாளனை
மூக்கே நீமுரலாய்.

5. வாயே வாழ்த்துகண்டாய் — மத
யானை யுரிபோர்த்துப்
பேய்வாழ் காட்டகத் தாடும்பி ரான்றன்னை
வாயே வாழ்த்துகண்டாய்.

6 நெஞ்சே நீநினையாய் — நிமிர்
புன்சடை நின்மலனை
மஞ்சா டும்மலை மங்கைம ணாளனை
நெஞ்சே நீநினையாய்

7 கைகாள் கூப்பித்தொழீர் — கடி
மாமலர் தூவிநின்று
பைவாய் பாம்பரை யார்த்த பரமனைக்
கைகாள் கூப்பித்தொழீர்.

8. ஆக்கை யாற்பயனென் — அரன்
கோயில் வலம்வந்து
பூக்கையா லட்டிப் போற்றியென் னாதஇவ்
ஆக்கை யாற்பயனென்.

9. கால்க ளாற்பயனென் — கறைக்
கண்ட னுறைகோயில்
கோலக் கோபுரக் கோகர ணஞ்சூழாக்
கால்க ளாற்பயனென்.

10. உற்றா ராருளரோ — உயிர்
கொண்டு போம்பொழுது
குற்றா லத்துறை கூத்தனல் லால்நமக்
குற்றா ராருளரோ.

11. இறுமாந் திருப்பன்கொலோ — ஈசன்
பல்கணத் தெண்ணப்பட்டுச்
சிறுமா னேந்திதன் சேவடிக் கீழ்ச்சென்று
இறுமாந் திருப்பன்கொலோ.

12 தேடிக் கண்டுகொண்டேன் — திரு
மாலொடு நான்முகனுந்
தேடித் தேடொணாத் தேவனை யென்னுளே
தேடிக் கண்டுகொண்டேன்.

திருச்சிற்றம்பலம்.

**மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச் செய்த திருவாசகம்**
**திருப்புலம்பல்.**

உற்றாரை யான்வேண்டேன் ஊர்வேண்டேன் பேர்வேண்டேன்
கற்றாரை யான்வேண்டேன் கற்பனவும் இனியமையுங்
குற்றாலத் தமர்ந்துறையுங் கூத்தாவுன் குரைகழற்கே
கற்றாவின் மனம்போலக் கசிந்துருக வேண்டுவனே.

திருச்சிற்றம்பலம்.

# குற்றாலக் கோவை

[1]அகத்திணை முப்பொருள் [2]ஆறிரண் டாமுறுப் பாய்விளங்கித்
[3]தகத்திணை கொண்டு விரிந்தெழுங் கோவைத் தமிழினையாஞ்
[4]செகத் [5]திணை ஒன்றிலர் குற்றால நாதர்க்குச் செப்புகம்மா
முகத் [6]திணை யில் [7]மருப் பார்விருப் பார்வந்து முன்னிற்கவே.

## கைக்கிளை

உளமலி காதற் களவெனப் படுவது
ஒருநான்கு வேதத்து [8]இருநான்கு மன்றலுள்
[9]யாழோர் கூட்டத்து இயல்பினது என்ப. (நம்பி. அகம். 1)

காட்சி ஐயம் துணிவுகுறிப் பறிவென
மாட்சி நான்கு வகைத்தே கைக்கிளை. (ந. அ. 2)

இவற்றுள், புணர்ப்பதும் பிரிப்பதும் ஆகிய பால்களுட்
புணர்க்கும் பாலுட் பொருவிறந்து ஒத்த
[10]கறைவேற் காளையுங் கன்னியுங் காண்ப
இறையோன் உயர்வினுங் குறைவின்று என்மனார். (ந. அ. 3)

### காட்சி

காட்சி என்பது தலைமகன் தலைமகளைத் தனியிடத்துக் காணுமளவே முகத்தையும் கண்களையும் [11]மூரலினையும் முலைகளையும் கைகளையும் விசேடமாகக்கண்டு, இவற்றுக்கு உவமையாகிய தாமரை, நெய்தல், முல்லை, கோங்கு, காந்தள் இவைகளின் மலர்களை உவமித்துக் காண, இக்கருப்பொருட்கு முதற் பொருளாகிய ஐந்திணைகளும் காந்தருவம் மேல் நடப்பதோர் வினைக்கு ஏதுவாகத் தோன்ற, இவற்றை யெல்லாம் ஒரு கொடியானது பூத்துக் கொண்டு செண்பகப் பொதும்பரின் கண்ணே சிறந்து நின்றது என்று மிகவும் அதிசயித்து நிற்றல்.

---

1. அகத்திணை முப்பொருள்—கைக்கிளை, களவு, கற்பு என மூன்று. 2. ஆறிரண்டாம் உறுப்பு—திணையே கைகோள் கூற்றே கேட்போர், இடனே காலம் பயனே முன்னம், மெய்ப்பா டெச்சம் பொருள்வகை துறையெனு, அப்பால் ஆறிரண்டகப்பாட் டுறுப்பே. 3. தக—தக்க என்பதன் இடைக்குறை. 4. செகம்—பூமி 5. இணை-ஒப்பு 6. இணையில்-இரட்டையில்லாத(ஒற்றையான) 7. மருப்பு-கொம்பு 8. இருநான்கு மன்றல் — எண்வகை மணம்: பிரமம், தெய்வம், ஆரிடம், பிராசாபத்தியம், ஆசுரம், காந்தருவம், இராக்கதம், பைசாசம். 9. யாழோர் கூட்டம்—காந்தருவ மணம், களவு மணம், 10. கறைவேல்—பகைவர் குருதி தோய்ந்த வேல் 11. மூரல்—பல்.

(1) பூமேவு [1]கஞ்ச நறுநீல முல்லைபொற் கோங்கநெடுங்
காமேவு காந்தளு மோர்கொடி மேற்[2]கடி கொண்டலர்ந்து
[3]கோமேவு மேனியர் குற்றால நாதர் கொழுஞ்சினைப்பூந்
தேமேவு செண்பகக் காவூடு நின்று சிறந்தனவே.

[4]நறைகமழ் செண்பக நற்[5]பொழிற் றலைவியைக்
[6]கறைகெழு வேலோன் கண்டுகண் ணுற்றது.

## ஐயம்

மடமா னேக்கி வடிவுங் கண்ட
இடமுஞ் சிறந்துழி எய்துவ தையம். என்பது.

ஐயம் என்பது கண்ணுற்ற பின்னர் இங்ஙனம் தோன்றா நின்ற இம்மாதானவள் திருமகள் முதலாகிய தெய்வமோ? மக்களினுள்ளாளோ? எனவடிவும் இடமும் மதித்தற்கு அமையாது தலைமகன் விசேடித்து ஐயுறுநிற்றல்.

(2) அலையார் [7]அதிர்திருப் பாற்கட லோவிண் ணவரிடமோ
மலையோ மலையை வளைத்தே [8]சிலைகொண்டு வானவர்க்குந்
தலையா னவர்திருக் குற்றாலர் [9]வெற்பினிற் றாழ்குழற்கு
நிலையா *யெவையிட மென்றுரைப் போமனம் நிச்சயித்தே.

சிறந்துழித் தெய்வ மகளிரென் றெண்ணி
அறந்தரு [10]குரிசில் ஐயுறு நிற்றல்.

எழுதிய [11]வல்லியும் தொழில்புனை [12]கலனும்
வாடிய மலரும் கூடிய வண்டும்
நடைபயில் அடியும் புடைபெயர் கண்ணும்
அச்சமும் பிறவும் அவன்பால் நிகழும்
[13]கச்சமி லையம். [14]கடிவன வாகும்.

## துணிவு

துணிவு என்பது, ஐயுற்ற பின்னர்க் குற்றால நாயகரது திருவடிகளை வணங்காதவர்கள் மனம் பெருஞ் செல்வமின்றி வாடுதல்போல, கூந்தலினது மாலைகள் வாடுதலாலும், கல்வி மூதுணர்வின்றி அறிவின்மையாற் சுழல்வது போலக் கண்கள் சுழன்று இமையாநின்றதினாலும், இவள் தெய்வமல்லள்; மக்களினுள்ளாளென்று தலைமகன் துணியாநிற்றல்.

---

1 கஞ்சம்—தாமரை. 2 கடி—வாசனை. 3 கோ—காளை. 4 நறை—வாசனை. 5 பொழி—சோலை. 6 கறை—இரத்தம். 7 அதிர்—ஒலிக்கின்ற. 8 சிலை—வில். 9 வெற்பு—மலை. 10 குரிசில்—தலைவன். 11 வல்லி—கொங்கை மீது எழுதப்படும் கொடிபோன்றதோர் சித்திரம். 12 கலன்—ஆபரணம். 13 கச்சம்—எண், அளவு. 14 கடிவண—நீக்கவன.
* பாடபேதம்—எவ்விடம்

(3) தேடித் துளவனும் காணுர்குற் ருலர் திருப்பதத்தை
நாடிப் பணிகிலர் நெஞ்சம் [1]இருபொருள் நண்ணலின்றி
வாடிச் சுழல்வது *போற் [2]குழற் ருர்கண்கள் வாட்டமுற்றும்
நீடிச் சுழல்வதி ஞலுமின் ஞட்கிந் நிலமிடமே.

[3]பொற்பினும் உறுப்பினும் பொருந்திய குணங்கண்
டற்புத மக[4]ளணங் கல்ல வென்றது.

## குறிப்பறிதல்

குறிப்பறிதல் என்பது, தெய்வமல்லள் மக்களினுள்ளாள் என்று துணிந்த பின்னர் குற்றால நாயகர், மார்க்கண்டேய ராயுளைக் கெடுக்க வந்த நமனது பகைக்கும், ஆயுளைவைத்து முற்றுதலாகிய முத்திக்கும் தமது திருவடிகளைக் காரணமாக்கியது போலும் தலைவியினது கண்ணிலே [5]நிக்கிரகா நிக்கிரகமிரண்டும் கண்டோமென்று அவளுள்ளத்திலுள்ள வேட்கையைத் தலைவன் அறிந்துணரா நின்றது.

(4) [6]அயர்த்தவர் தம்மை அறியார்குற் ருலர் அடல் [7]மறலி
பயத்துக்கும் அந்தப் பயந்தீர்ந்த பின்மனம் பற்றுதற்கும்
நயப்புறும் [8]அந்தணர்க் கேபாதம் நீட்டிய நாட்டமெனக்
கயற்கண் ணிலே[9]யிரு பார்வையு முற்றதிக் காரிகைக்கே.

[10]பொதுநடித் தவன்ருள் போற்பொது விழித்தா
ளதுகருத் திறைவ னறிந்து நின்றது.

கைக்கிளை முற்றும்.

—()—

1. இருபொருள்—செல்வப் பொருள், கல்விப் பொருள். நெஞ்சம் செல்வமின்றி வாடுதல் போல கூந்தல் வாடுதல்; நெஞ்சம் கல்வியின்றி சுழல்வதுபோல கண்கள் சுழல்தல். 2 குழற்ருர்-கூந்தலின்மாலை. 3 பொற்பு-அழகு. 4 அணங்கு-தெய்வப்பெண். 5 நிக்கிரகம்—தண்டம்; அநிக்கிரகம்—காத்தல். 6 அயர்த்தவர்—மறந்தவர். 7 மறலி—யமன். 8 அந்தணர்—ஈண்டு மார்க்கண்டன். 9 "இரு நோக்கு இவள்உண்கண் உள்ளது ஒரு நோக்கு, நோய் நோக்கு ஒன்று அந் நோய் மருந்து" (குறள்) 10 பொது—அம்பலம்.

* பா. பே—போலே இவள் கண்கள்

# களவியல்

## களவியற் றொகைச் சூத்திரம்.

இயற்கைப் புணர்ச்சி வன்புறை தெளிவே
பிரிவுழி மகிழ்ச்சி பிரிவுழிக் கலங்கல்
இடந்தலைப் பாடு பாங்கற் கூட்டம்
பாங்கி மதியுடன்பாடு பாங்கியிற் கூட்டம்
பாங்கமை பகற்குறி பகற்குறி யிடையீடு
இரவுக் குறியே இரவுக்குறி யிடையீடு
வரைவு வேட்கை வரைவு கடாதல்
ஒருவழித் தணத்தல் வரைவிடை வைத்துப்
பொருள்வயிற் பிரிதலென் றொருபதி னேழுங்
களவிற் குரிய கிளவித் தொகையே. (ந. அ. 7)

## இயற்கைப் புணர்ச்சி

வேட்கை யுணர்த்தல் மறுத்த லுடன்படல்
கூட்டமென் றிறைவியிற் கூட்டநால் வகைத்தே. (ந. அ. 10)

இரந்துபின் னிற்றற் கெண்ணலு மிரந்து
பின்னிலை நிற்றலும் முன்னிலை யாக்கலும்
மெய்தொட்டுப் பயிறலும் பொய்பா ராட்டலும்
இடம்பெற்றுந் தழாஅலும் வழிபாடு மறுத்தலும்
இடையூறு கிளத்தலும் நீடுநினைந் திரங்கலும்
மறுத்தெதிர் கோடலும் வறிதுநகை தோற்றலும்
முறுவற்குறிப் புணர்தலும் முயங்குத லுறுத்தலும்
புணர்ச்சியின் மகிழ்தலும் புகழ்தலும் பிறவும்
உணர்த்திய தலைவியிற் புணர்ச்சியின் விரியே. (ந. அ. 11)

## இரந்து பின்நிற்றற் கெண்ணல்

இரந்து பின்னிற்றற் கெண்ணல் என்பது, கைக்கிளைத் திணையின்கண் ஒருதலைக் காமத்துப் பொது நோக்கத்தால் தலைவியினது உள்ளக் கருத்து அறிந்தவன் புணர்தலைக் கருதி வேட்கை உணர்த்துவான் தொடங்கி மிகவும் தேசிகத்தைப் படைத்தவரும் லோபத்தினால் ஈயாதொழிந்தாலும் அடிசில் இரப்பார்க்கு இல்லை யென்று சொல்லார் இவளும் கற்பு நெறியைக் குறித்து, தனது தேசிகத்தை அழியாது செறித்துக் கொள்வாளாயினும் நாம் துய்த்தற்கு [1]அருகனாய் வந்து இரத்தலினால், இல்லையெனச் சொல்லாளென்று, நெஞ்சொடு கருதா நிற்றல்.

---

1. அருகன்—யோக்கியன்.

(5) மகத்தே சிகரெனுங் குற்றால நாதர் வரையிடத்தே
மிகத்[1]தே சிகமபடைத் தேவளர்ப் போர்அம் மிகுதியினை
அகத்தே சிறைப்படுத் திக்கொள்வ ரோ[2]கொண்ட தாயினுமே
[3]இகத்தே சிறிதிரப் பார்க்கில்லை என்ப திலைநெஞ்சமே.

**குறிப்பறிந் திறையோன் குறையிரந் தவள்பின்**
**நெறிப்படி நிற்க நெஞ்சொடு கருதல்.**

## இரந்து பின்னிற்றல்.

இரந்து பின்னிற்றல் என்பது குற்றாலக் கடவுளார் தமது தொண்டராகிய சுந்தரர்க்குப் பிராரத்துவ வழிப் பொசிப்பித்தற் கேதுவாயதொரு தூதாகச் சென்று பரவை நாய்ச்சியாரால் அவரது துயரத்தைத் தீர்த்தார். நீ எனது துயரத்தைத் தீர்ப்பதாகவே அவர் கருணையினால் தானே வந்தாய். இனி அவர் திருமேனிகொண்டு உன்னைப் பொருத்த வேண்டியதில்லையே. அத்துயரத்தைத் தீர்க்கும்படி கருத்து வைப்பாயாகெனத் தலைமகன் இரவாநிற்றல்.

(6) [4]அந்தரர் போற்றுங்குற் றாலர்தம் மான்முன மாவதின்று
சுந்தரர்க் குத்துயர் தீர்த்தார் நடந்தொரு [5]தோகையினால்
[6]மந்தரப் பூண்முலை மாதேயுன் னாற்றுயர் மாற்றுவைநீ
[7]கந்தரப் [8]பூகமின் னேதுயர் *தீர்க்கக் கருத்துவையே.

**பனிமொழி நீயே [9]படர்தவி ரென்ன**
**இனியன கூறி யிரந்துபின் னிற்றல்.**

## முன்னிலையாக்கல்.

முன்னிலையாக்கல் என்பது, தகையணங்குறுத்தியும் ஒரு [10]மாற்றமின்மையால் முன்னிலையாக வரக்கண்ட தலைவி அச்சமுற்றுத் தன்வசமழிந்து எழுதிய சித்திரம்போல் நிற்ப அதனையே ஒரு வியப்பாக, மைவரையாகிய மையெழுத்தைத் தாண்டிக் காதளவுஞ் செல்லுங் கண்ணாகிய மான் எனது புயவரைகளில் தாவுகிற திறம் யாதென்று பார்ப்பதற்கோ? நிற்கிறாய் என்று, பாராதவளைப் பார்த்து நிற்பதாகத் தலைமகன் கூறாநிற்றல்.

---

1. தேசிகம்—பொன். 2. கொள்வராயினுமே என்றிருத்தல் நலம். 3. இகம்—இம்மை. 4. அந்தரர்—தேவர் 5. தோகை—பெண், ஈண்டு பரவை நாய்ச்சியார். 6. மந்தரம்-ஓர் மலை. 7. கந்தரம்—கழுத்து. 8. பூகம்—கமுகு. 9. படர்—துன்பம். 10. மாற்றம்—சொல். * பா. பே—தீரக்

(7) [1]தெவ்வரை வென்ற நகையார்குற் றாலர் [2]சிலம்பிடத்தே
அவ்[3]வரைத் தோளியர் ஆயத் துடன்விளை யாடலின்று
[4]மைவ்வரை தாண்டு [5]மறியென் புயவரை வாவுதிறம்
இவ்[6]வரை என்னென்று பார்ப்பதற் கோ‖நிற்றல் ஏந்திழையே.

பின்னின் றிரந்தலிற் பேசுதல் காணான்
முன்னின் றுரைக்க முன்னிலை யாயது.

## மெய்தொட்டுப் பயிறல்.

மெய்தொட்டுப் பயிறல் என்பது, தலைமகள் அவயவம் யாவையும் போற்றுதற்குரியதோர் கருத்தாவாக இவளைப் படைத்தவன், மருங்குலை நுண்ணிதாகவும் அதற்குமேல் முலை மலைகளையும், [7]அளகாடவியையும் மகா பாரமாகச் செய்வித்தான். ஆதலாற் கூந்தலின் மாலையினது [8]மது [9]நசையால் வந்து படிந்து நீவிர் ஆரவாரிக்கப்பொருது பின்னும் இவள் மாலைக்கும் மணத்துக்கும் நீவிர் உரியரல்லீர். அந்தப் பிரமாவுடைய கமலாலயத்திற் சென்று உண்பீர் என வண்டுகளுக்குப் போக்கு விலக்கித்தான் பாதுகாப்பானைக் கூறியது.

(8) மா¶திரு பாகத்தர் குற்றால நாதர் மணிவரையார்
[10]ஓதி அலங்கற் படிவண்டு காள்இடை ஒல்குதற்கே
[11]ஆதிமகன் செய்த லானீவிர் §ஆர்ப்பப்பொ ருதவர்தம்
[12]போதினிற் போயுண்ணு வீர்மது ஈகுவர் போதவுமே.

[13]அளி இட ரகற்றி அருமையிற் பேணிப்
[14]பளிதமென் முலையைப் பாது காத்தது.

## பொய் பாராட்டல்.

பொய் பாராட்டல் என்பது, இல்லாமை கூறிப்புகழினும் உள்ளமை ஆயத்தகுவதோர் நலத்தைக் குறித்து உன்னை மானுட மகளிர் தெய்வ மகளிர் அநேகருக்குள்ளும் வியப்பாகப் படைத்தமையால் மண்பொதுத்தந்தை என்னும் பெயர் மற்றுள்ள கடவுளரால் பேதிக்கப்படுமென்று, பேதியா வண்ணம் சரசோதியைப் பிரம

---

1. தெவ்வர்—பகைவர் 2. சிலம்பு—மலை 3. வரை—மூங்கில் 4. மைவரை—மையாகிய ரேகை 5. மறி—மான்மறி 6. வரை—மலை 7. அளகம்—கூந்தல் 8. மது—தேன் 9. நசை—விருப்பம் 10. ஓதிஅலங்கல்—கூந்தலின் மாலை 11. ஆதிமகன்—பிரமன் 12. போது—தாமரைப்பூ 13. அளி—வண்டு 14. பளிதம்—கற்பூரம்.
‖ பா. பே—நின்றது. ¶ பா. பே—தொரு. § பா. பே—ஆரப்.

தேவன் நாவின்மேற் கொண்டான். எவ்விடத்தும் வாக்கீசுவரியா யிருந்து தானகப் பேசுதற்கு என்று இல்லாதது கொண்டு உள்ளது பாராட்டியது.

(9) தண்பொழில் சூழ்திருக் குற்றாலர் வெற்பிலுன் றன்னைமின்னே
பண்போ துலகமின் றாரின் மிகவும் படைத்ததனல்
[1]மண்பொதுத் தந்தை யெனும்பேரை மாற்ற வருமெனவே
நண்பொரு வாமல் அயன்வாக்கின் செல்வியை நாக்கொண்டதே.

மெய் பாராட்டினும் தகுமென வெற்பன்
பொய்பா ராட்டுப் புனையிழைக் குரைத்தது.

### இடம்பெற்றுத் தழாஅல்.

இடம் பெற்றுத் தழாஅல் என்பது, இங்ஙனம் கட்குறிப்பறிந்த பின்னர் ஐந்து பாட்டானும் வேட்கை யுணர்த்தி, அதிவேட்கையால் புணர்ச்சி துணிந்து, ஆலகால விடத்தைத் தந்த பாற்கடல் பின்னும் அமிர்தத்தைத் தந்தமை போலும்; நம்மைவென்று மெலிவிக்கப்பார்த்த கண்களிலே கருணையும், இருவரும் ஒத்துப் பொருந்துதற்குப் பிறர்க்குக் கட்புலப்படாத அந்தகாரம் பொருந்திய [2]பொதும்பரும் இவ்விடத்துள்ளது. இவளது தடங்கொங்கை தழாற் பெறலாமென்று முன்னின்று தன்னொடு தானே கூறுநிற்றல்.

(10) பட[3]மா சுணக்கங் கணத்தார்குற் றாலர் பனிவரைமேல்
விடமார் கடலமிர் தந்தரல் போல்நமை வெல்விடக்கண்
இடமா கருணையுண் [4]டூழிருட் [5]காவுமுண் டிங்ஙன்மின்னார்
தடமார்பின் கொங்கை தழீக்கொள லாம்நிசம் தான்நெஞ்சமே.

அதிகவேட் கையினற் புணர்ப்பது துணிந்து
மதுகையோ னுடிட மாதுமுற் கூறல்.

### வழிபாடு மறுத்தல்.

வழிபாடு மறுத்தல் என்பது, தலைவன் முடுகி வேட்கை யுணர்த்தக் கேட்ட தலைமகள் மிகவும் வெள்கி வசமழிந்து மூலைத்துகில் சோரக் கைகளாற் கண்களைப் புதைத்துக்கொண்டு இரண்டு ஒழுங்கு

1. மண்பொதுத்தந்தை-பிதாவாகிய பிரமன் 2. பொதும்பர்—சோலை 3. மாசுணம்—பாம்பு 4. ஊழிருள்—முதிர்ந்த இருள் 5. கா—சோலை.

கொண்டோங்கி வளர்ந்து ஒருதலைக்கூடிய மாதவிப்பந்தரிற் புகுந்து உம்மை வந்தடையாநின்றேன். என்னை எம் ஐயர் அன்னையர்போல வைத்துக் காப்பீராக என்று அவ்விடத்தடையாநின்றது.

(11) பொரு[1]சிறை [2]வாரண கேதனர் மீதில்ன் போர்[3]குரண்டம்
தருசிறை வேய்ந்த [4]சடிலர்குற் றாலர் தடவரைமேல்
[5]இருசிறை கொண்டெழும் பூஞ்சினை வார்[6]குரு கீரெமைநீர்
[7]ஒருசிறை யாய்வைத்துக் காப்பீர் அடைந்தனம் உம்மிடத்தே.

முடுகி வேட்கை முதல்வ னுணர்த்த
[8]வடுவகிர் கண்ணி வனத்தய லடைந்தது.

## இடையூறு கிளத்தல்.

இடையூறு கிளத்தல் என்பது, தலைமகன் உயர்ந்தவனாயிருந்தும் காம விகாரத்தால் இழிந்தவன்போல வழிபட்டதற்கு மாறுபாடாய்க் கண்புதைத்துநின்ற இடையூற்றைப் பின்னும் விடாது தொடர்ந்தோனை ஆலகாலவிடத்தை ஒருகையில் வாங்கிக்கொண்டு உண்ணுமுன்னமே மற்றொரு திருக்கரத்தால் தேவர்கட்குக் குற்றால நாயகர் அஞ்சலென்றமை போலும் விடம்போன்ற கண்ணைப் புதைத்துக்கொண்டு அமிர்தமயமான [9]பயோதர தாமரையைக் காட்டாநின்றது மிகவும் எளிய னென்பது அறிந்தோ எனச்சொல்லாநின்றது.

(12) அடர்விடம் கையொன் றமைத்துக்குற் றாலர்அஞ் சேலெனஓர்
தட[10]வன சக்கரம் விண்ணோர்க்குக் காட்டுந் தகைமையைப்போல்
விடமது கைக்குள் அமைத்தெளி யேனென வேயறிந்தோ
திட்முற வார்கொங்கை [11]வாரிசங் காட்டினை தேமொழியே.

கண்புதைத் தொழியினும் கைவிடா தணங்கைப்
பண்புரைத் தடையப் படுவன விளக்கல்.

## நீடுநினைந்திரங்கல்.

நீடுநினைந்திரங்கல் என்பது, [12]வாராகிய தடை கொங்கையிற் சேற்றின்மை, கொங்கைக்கு உவமிப்பது கோடு. கோடாகிய சினைப்

---

1. சிறை-இறகு 2. வாரணகேதனர்-கோழிக்கொடியுடைய முருகன் 3. குரண்டம்-கொக்கு. 4. சடிலர்—சடையுடையவர். 5. இருசிறை—இரண்டு பக்கம் 6. குருகு—குருக்கத்திமரம் 7. ஒரு சிறை—ஒரு காவல். 8. வடுவகிர்—மாவடுவின் பிளவை யொத்த 9. பயோதரம்-கொங்கை 10. வனசக்கரம்-தாமரைபோன்றகை 11. வாரிசம்—தாமரை 12. வார்-கச்சு. இதன் 12-வது செய்யுளின் பின்னடியிரண்டில் விடம்போன்ற கண்ணைப் பொத்திக்கொண்டு அமிர்தம்போன்ற கொங்கையைக் காட்டினை என்ற நயங் காண்க.

பொருட்கு முதற்பொருள் யானை. யானைக்குத் தளை விடுத்து வீதியிற் செலுத்தி மீட்பது வினையாதலான், இந்தக் கோட்டானையை வாராகிய தளையை நெகிழ்த்து என்னுடைய அகலத்திற் செலுத்தி மீட்டு இதற்குக் கவளமாக, இரவானையானது (மன்மதனது) சிலைக்கரும்பைக் கொடுக்கக் கொண்டு போட்டால் வெகு நன்மை. இதற்கு எப்போது இரங்குமோ நினது உள்ளமென்று தலைவன் இரங்காநிற்றல்.

(13) [1]சூட்டா னையனமொன் றுட்கொள்குற் றாலர்தம் தொல்வரைவாய்க்
[2]கோட்டானை வார்தளை விட்டே யகலத்திற் கொண்டுசென்று
மீட்டா[3]னை அல்லெனு [4]மாரன் கரும்பினை மென்றுதின்று
[5]போட்டா னையமிதெந் நாட்கிட்டு மோ*மலர்ப் பூங்கொடியே.

பொழுதுநீட் டிக்கப் புனையிழை வெள்கிற்
பழுதென இறைகண் பனித்திரங் கியது.

## மறுத்தெதிர்கோடல்.

மறுத்தெதிர்கோடல் என்பது, வேட்கையுணர்த்தி வழிபடுமிடத்து வழிபாடு மறுத்து நின்றது கண்டும், பின்னும் தொடர்ந்து வேட்கை யுணர்த்தக் கண்ட தலைமகள் இது விதி வண்ணமாய் வந்ததென்று அறிந்து குற்றால நாயகர் கயிலாயத்து மோனமாயிருக்கும் போது, மன்மதன் புட்ப பாணங்களை யேவி காமாக்கினியைக் கொளுத்த, அதன்பொருட்டால் வந்த கோபாக்கினி அவனையும் திரும்பக் காய்ந்ததுபோல, என்னிடமாகத் தலைவர்க்கு விளைந்த காமாக்கினி அவரையும் காய்ந்து எனது கற்புக்கு வேலியாகிய நாணத்தினும் பற்றி யெழாநின்றதென்று உடன்பட்டுக் கூறாநிற்றல்.

(14) [6]சரத்தைவிட் டேமதன் காமத் தழல்கொளுத் தச்சுட்டும்ரன்
கரத்தர்குற் றாலர்தன் பாற்கொண் டவனையும் காய்ந்ததைப்போல்
உரத்தண் ணலுக்கென்வி காரத் தழல்பற்றி ஓங்கியென்
திரக்கற்பு காத்திடும் நாண்வே லியும்பற்றிச் சென்றெழலே.

வேட்கைய துணர்த்த விளைந்தவை யுணர்ந்த
வாட்கதிர்க் கண்ணி மறுத்தெதிர் கோடல்.

---

1. சூட்டால்-நயனம்-நெற்றிக்கண் என்க. எதுகை நோக்கி சூட்டானையனம் என்று வந்தது. 2. கோட்டானை-கொம்புடைய யானை. 3. ஆனை அல்—அல்லாகிய யானை. (மன்மதனுக்கு யானை இரவு). 4. மாரன்—மன்மதன். 5. போட்டால் நயம். எதுகை நோக்கி போட்டானையம் என்று வந்தது. 6. சரம்-அம்பு.* பா. பே—சொல்க.

## வறிது நகை தோற்றல்.

வறிது நகை தோற்றல் என்பது, மறுத்தெதிர் கொள்ளாநின்ற தலைமகள் தனது தாமரைபோன்ற முகவிலாசத்தைக் காட்டி அதனிடை ஆம்பலாகிய வாயையும் அதன்கண் முல்லையாகிய முறுவலையும் சற்றே தெரியும்படிச் செய்த அதிசயம், நமது வருத்தத்தை நீக்குவது பொருட்டென்று தலைமகன் அவளுடன்பாடறிந்து நின்றது.

(15) [1]காம்படு தோளி முகத்தா மரைத்[2]தடம் காட்டியதில்
ஆம்பலின் முல்லை யலர்விக்கச் செய்த வதிசயந்தான்
பாம்பணி [3]வேணியர் குற்றால நாதர் பனிவரைமேற்
றேம்பலு றம்பல [4]கௌவையு மங்ஙனந் தேறவென்றே.

உடன்படு தலைவி மடந்தரு [5]மூரற்
றடம்புயத் திறைவன் றன்கண் டுவத்தல்.

## முறுவற்குறிப்புணர்தல்.

முறுவற்குறிப்புணர்தல் என்பது, முன்னமே கட்குறிப்பினால் வேட்கையுணர்ந்த வறிதுநகை தோன்றும் வரைக் கண்ட தலைமகன், பொன்னாலாகிய நகையினும் மிக்கதாய்ப் பொன்மாதினுக்கும் மிக்கவள் மனதாரவுஞ் சொல்லாடாதிருந்தாலுஞ் சொற்பிறக்கும் வாயாரவுந் தரப்படாநின்ற மணி நகை, என்னுடைய உயிர்க்கும் உடம்புக்கும் இசையப்பட்டதென்று உடன்பட்டது.

(16) [6]பனகா பரணத்தர் குற்றால நாதர் பனிவரைமேற்
[7]கனகா பரணத்து மிக்காய்ப்பொன் மாது கனிந்தெமக்கு
மனதாரப் பின்னுஞ்செவ் வாயாரத் தந்த [8]மணிநகையின்
றெனதா ருயிர்க்கு முடற்கும் புனைதற் கிசைந்ததுவே.

அணிநகை யினிலும் அணங்கவள் தந்த
மணிநகை மிக்கென மன்னன் உணர்ந்தது.

---

1. காம்பு-மூங்கில். 2. தடம்-தடாகம். 3. வேணி-சடை. 4. கௌவை-துன்பம் 5. மூரல்-புன்னகை. 15-வது செய்யுளில் முகமாகிய தாமரைத் தடாகத்தில் வாயாகிய செவ்வல்லிப்பூவும் அதனுள் பல்லாகிய முல்லையரும்பும் தோன்றும் நயம் காண்க. 6. பனகம்-பாம்பு. பன்னகம் என்பதன் இடைக்குறை. 7. கனகாபரணம்-பொன்னாற் செய்யப்பட்ட நகை. 8. மணிநகை-முத்துப்போன்ற புன்சிரிப்பு.

## முயங்குதலுறுத்தல்.

முயங்குதலுறுத்தல் என்பது இக்காலத்துக் காந்தருவ மணத்துக்கு உடன்பாடாகப்படாதென்று உறைப்பாக நின்ற அழகிய புருவச் சிலையையுடையார் நாணத்தை யிழந்தார். ஆனதால் கச்சிறுக் கட்டிய பொற்கோடு போன்ற முலைகளையும் கைக்கு வரப் பெற்றேனென்று தலைமகன் புணர்ச்சி துணியா நிற்றல்.

(17) கொம்புடை வேழ முரித்ததள் போர்த்தவர் கோதிலன்பர்
நம்புப தாம்புயர் குற்றாலர் வெற்பிலின் நாளுறைப்பாய்
[1]அம்புரு வச்சிலை கொண்டவர் நாணிழந் தாரதனால்
வம்புறக் கட்டிய பொற்கோட்டை யுங்கை வரப்பெற்றதே.

வடிவுடை மங்கை மடம்நாண் அழிய
முடியுடை வேந்தன் முயங்குத லுறுத்தல்,

## புணர்ச்சியின் மகிழ்தல்.

புணர்ச்சியின் மகிழ்தல் என்பது, கருப்பஞ்சாறும் தேனுவின் பாலும் குறுகக் காய்ந்தும், காய்க்கப்படாநின்ற கனிகளினது மதுரம் உலையப் பழுத்தும், சுவைகளைத் தரும். இவள் கொடுத்த அமிர்த பானம், ஆம்பற் பூப்போன்ற வாயினின் முல்லையரும்புக் கொத்த [2]எயிற்றினூடே தங்கியிருந்து இயற்கையாய் வரும் இயல்பையுடையது. அவைகளைப்போலே செயற்கையல்லவென்று தலைமகன் மகிழாநிற்றல்.

(18) [3]கன்னலஞ் சாறொடு பால்வளங் குன்றியுங் காய்கனியின்
தன்னலம் நோவ முதிர்ந்து மிரசந் தருஞ்[4]சடிலப்
பின்னல ராந்திருக் குற்றாலர் வெற்பினள் பெய்யிதழ்த்தேன்
[5]பன்னலந் தங்கிய தந்நீர்மை யில்லைப் பகரமிக்கே.

தீஞ்சுவை பலவுஞ் சேயிழை யதரத்
தாஞ்சுவை நிகரா தறிந்தவன் மகிழ்தல்.

---

1. இதில், எதிரியின் அம்பு உருவித்தாக்கும் சிலையின்கண் நாணையிழந்தமையால் பொற்கோட்டை கைவரப்பெற்றது எ-று. தலைவிக்குச் சொல்லும்பொழுது அழகிய புருவமாகிய வில்லைக் கொண்டவர் வெட்கத்தை விட்டார். இனி கச்சு இறுகக் கட்டிய அழகுபொருந்திய யானைக் கொம்பு போன்ற கொங்கைகளும் நம் கைவசமாயின என்பது சிலேடைப் பொருள். 2. எயிறு-பல். 3. கன்னல்—கரும்பு. 4. [illegible]பின்னலர்—பின்னிய சடையை உடையவர். 5.பன்னலம்—பல்லினது நலம் பல[illegible]

(21) மங்கைபங் காளர்நங் குற்றாலர் வெற்பின் மருதநெய்தல்
எங்கும் புகும்வண்டு காளோர் கொடியி லெழுமலரிற்
பைங்கொடி பூத்த [1]இதழாம்பல் என்றும் பருகிடத்தேன்
தங்குதல் போற்றகு மோநீவிர் ஆய்மலர்ச் சாதியிலே.

கொன்னுனை வேலோன் கொடுந்துயர் நீங்கி
நன்னுதற் பேதை நலம்பா ராட்டல்

## தெய்வத்திறம்பேசல்.

தெய்வத்திறம் பேசல் என்பது, நம்மிருவரையுஞ் செனிப்பிக்கும் நாளிற் பண்டைவினைக் கீடாகப் படைத்த பிரமனது கைச்சித்திரம் ஒருவர்க்கும் எட்டாததலால், இந்நாள் யாவரொருவரால் வேறுபடுத்தக்கூடும்? கூடாதென்று தலைவிக்குத் தலைவன் அறங்கள் ஊழின் பயனாகவுள்ள நல்வினைப் பயனை யெடுத்துக் காட்டாநின்றது.

(22) அந்நாள் நமக்கு [2]விதிகை யொருவர்க்கெட் டாதலினால்
இந்நாள் விலக்க எவர்வல்லர் கா[3]ணிடை யே[4]யிரவி
செந்நா அனல்மதிக் கண்ணுடை யாரெனுஞ் சித்ரசபை
நந்நா யகர்திருக் குற்றாலர் வெற்பினில் நன்னுதலே.

வாழ்வினை யடைந்த மடக்கொடிக் கிறைவன்
ஊழ்வினைப் பயனை உறுத்திக் காட்டல்.

## பிரியேனென்றல்.

பிரியேனென்றல் என்பது, குற்றாலப்பெருமான் அத்தலத்துக் குழல்வாய்மொழியாகிய திருவருள் கூட்டி முடித்தமையால் ஒரு காலத்தும் உன்னைப் பிரிகின்றிலேன். பிரிய வருமானால், திருவருள் [5]பின்னமல்ல. அது பிரிந்தாற் பயமுண்டும். பிரியாமையால் நானும் பிரியேனென்று தலைமகன் தலைமகட்குப் பிரிவறிவுறுத்தல்.

(23) ஒருநாளு முன்னைப் பிரியேன் பிரிகி லுலகிலென்றும்
பெருமான் குற்றாலக் குழல்வாய் மொழியைப் பிரிந்ததனால்
தருமோர் பயமன்றி [6]முப்பொறி யோடுந் தனிப்பிரிய
வருமோ வராதணங் கேநிச மாக மனத்திலெண்ணே.

---

1. இதழாம்பல்-அதரமாகிய செவ்வல்லி-இதழ். 2. விதி-பிரமன். 3. இடை ஏன்-, பிரிவு ஏது. 4. இரவி செந்நா அனல் மதிக்கண்ணுடையார்—சூரியன், சந்திரன், அக்கினி என்ற முக்கண் உடையவர். 5. பின்னம்—வேறுபாடு. 6. முப்பொறி -மனம், வாக்கு, காயம்.

தெரிந்திது மணந்தைச் [1]சிரஞ்செலுத் துதற்காய்ப்
பிரிந்தில னென்னப் பிரிவுணர்த் தியது.

## பிரிந்து வருகென்றல்.

பிரிந்து வருகென்றல் என்பது, என்னது உயிரும் ஆசையும் ஒரு சூத்திரமும் உடல் ஒரு பட்டமும் நீ ஒரு சூத்திரதாரியுமாதலாற் போக்குதல் மீட்குதல் நீயே எனத் தலைமகன் நான் பிரிந்தாலும் அணித்து உன்னிடத்து வருவேனெனத் தலைவிக்கு உண்மை கூறுநிற்றல்.

(24) மானே யிடத்தும் மழுவே வலத்திலும் வைத்துயிரோ
டூனே யெனவு மிசைந்தகுற் றாலர்வெற் புன்னைமின்னே
நானே பிரிகினும் [2]வானாடு பட்டமும் நற்கயிறும்
தானே யென்வரு வேன்வரு வேனிது சத்தியமே.

விட்டவ ரிடத்து விருந்நூத் திரமும்
பட்டமு மெனவரு வேனெனப் பகர்ந்தது.

## இடமணித்தென்றல்.

இடமணித் தென்றல் என்பது, இவர் எவ்விடத்துள்ளாரோ? இடம் பதியெத்தூரமோ? என்று சந்தேகியாது, நுமது சிற்றூரின் கண்ணுள்ள யானைகள் எம்மூர்க் கருப்பம் படப்பைகளிற் புகுந்து [4]குளகு செழித்துக் கரும்பினது சுண்ணம் புரண்டு வெள்ளை சாத்திக்கொண்டு இந்திர லோகத்து அயிராவதம்போல நித்தமும் அவ்விடத்து வரும் என்று தலைமகட்குத் தலைமகன் இடமணித்துக் கூறுநிற்றல்.

(25) [5]ஒன்னலர் முப்புரங் காய்ந்தகுற் றாலர்க் குறுபதியாம்
நன்னகர் வெற்பில் அணங்கேநும் மூர்க்[6]கயம் நாடொறுமென்
தொன்னகர் [7]வேழத் திரள்புக்கு மெய்[8]சுதை தோயப்பெற்றே
[9]பொன்னகர் வேழத்தை ஒப்பாக வேவந்து புக்கிடுமே.

நும்பதிக் [10]கருணி யெம்பதிப் புகுந்து
செங்கரும் புழக்கி யிங்குறு மென்றது.

---

1. சிரம்-நெடுங்காலம். 2. வானாடுபட்டம்-வான் + ஆடு + பட்டம்-விண்ணில் அசையும் பட்டம். 3. சூத்திரம்–கயிறு. 4. குளகு-விலங்குணவு. 5. ஒன்னலர்-பகைவர். 6. கயம்–யானை. 7. வேழம்-கரும்பு. 8. சுதை-சுண்ணம். 9. பொன்னகர் வேழம்-தேவலோகத்து யானையாகிய ஐராவதம். 10. கருணி-யானை.

(21) மங்கைபங் காளர்நங் குற்றாலர் வெற்பின் மருதநெய்தல்
எங்கும் புகும்வண்டு காளோர் கொடியி லெழுமலரிற்
பைங்கொடி பூத்த [1]இதழாம்பல் என்றும் பருகிடத்தேன்
தங்குதல் போற்றகு மோநீவிர் ஆய்மலர்ச் சாதியிலே.

கொன்னுனை வேலோன் கொடுந்துயர் நீங்கி
நன்னுதற் பேதை நலம்பா ராட்டல்.

## தெய்வத்திறம்பேசல்.

தெய்வத்திறம் பேசல் என்பது, நம்மிருவரையுஞ் செனிப்பிக்கும் நாளிற் பண்டைவினைக் கீடாகப் படைத்த பிரமனது கைச்சித்திரம் ஒருவர்க்கும் எட்டாததாதலால், இந்நாள் யாவரொருவரால் வேறுபடுத்தக்கூடும்? கூடாதென்று தலைவிக்குத் தலைவன் அறங்கள் ஊழின் பயனுகவுள்ள நல்வினைப் பயனை யெடுத்துக் காட்டாநின்றது.

(22) அந்நாள் நமக்கு [2]விதிகை யொருவர்க்கெட் டாதலினல்
இந்நாள் விலக்க எவர்வல்லர் கா[3]ணிடை யே[4]னிரவி
செந்நா அனல்மதிக் கண்ணுடை யாரெனுஞ் சித்ரசபை
நந்நா யகர்திருக் குற்றாலர் வெற்பினில் நன்னுதலே.

வாய்வினை யடைந்த மடக்கொடிக் கிறைவன்
ஊழ்வினைப் பயனை உறுத்திக் காட்டல்.

## பிரியேனென்றல்.

பிரியேனென்றல் என்பது, குற்றாலப்பெருமான் அத்தலத்துக் குழல்வாய்மொழியாகிய திருவருள் கூட்டி முடித்தமையால் ஒரு காலத்தும் உன்னைப் பிரிகின்றிலேன். பிரிய வருமானல், திருவருள் [5]பின்னமல்ல. அது பிரிந்தாற் பயமுண்டும். பிரியாமையால் நானும் பிரியேனென்று தலைமகன் தலைமகட்குப் பிரிவறிவுறுத்தல்.

(23) ஒருநாளு முன்னைப் பிரியேன் பிரிகி லுலகிலென்றும்
பெருமான் குற்றாலக் குழல்வாய் மொழியைப் பிரிந்தகனல்
தருமோர் பயமன்றி [6]முப்பொறி யோடுந் தனிப்பிரிய
வருமோ வராதணங் கேநிச மாக மனத்திலெண்ணே.

---

1. இதழாம்பல்-அதரமாகிய செவ்வல்லி-இதழ். 2. விதி-பிரமன். 3. இடை ஏன்-பிரிவு ஏது. 4. இரவி செந்நா அனல் மதிக்கண்ணுடையார்—சூரியன், சந்திரன் அக்கினி என்ற முக்கண் உடையவர். 5. பின்னம்-வேறுபாடு. 6. முப்பொறி -மனம், வாக்கு, காயம்.

தெரிந்திது மணந்தைச் [1]சிரஞ்செலுத் துதற்காய்ப்
பிரிந்தில னென்னைப் பிரிவுணர்த் தியது.

## பிரிந்து வருகென்றல்.

பிரிந்து வருகென்றல் என்பது, என்னது உயிரும் ஆசையும் ஒரு சூத்திரமும் உடல் ஒரு பட்டமும் நீ ஒரு சூத்திரதாரியுமாதலாற் போக்குதல் மீட்குதல் நீயே எனத் தலைமகன் நான் பிரிந்தாலும் அணித்து உன்னிடத்து வருவேனெனத் தலைவிக்கு உண்மை கூறுகிற்றல்.

(24) மானே யிடத்தும் மழுவே வலத்தினும் வைத்துயிரோ
டூனே யெனவு மிசைந்தகுற் றாலர்வெற் புன்னைமின்னே
நானே பிரிகினும் [2]வானாடு பட்டமும் நற்கயிறும்
தானே யென்வரு வேன்வரு வேனிது சத்தியமே.

விட்டவ ரிடத்து விடுஞ்சூத் திரமும்
பட்டமு மெனவரு வேனெனப் பகர்ந்தது.

## இடமணித்தென்றல்.

இடமணித் தென்றல் என்பது, இவர் எவ்விடத்துள்ளாரோ? இடம் பதி யெத்தூரமோ? என்று சந்தேகியாது, நுமது சிற்றூரின் கண்ணுள்ள யானைகள் எம்மூர்க் கருப்பம் படப்பைகளிற் புகுந்து [4]குளகு செழித்துக் கரும்பினது சுண்ணம் புரண்டு வெள்ளை சாத்திக்கொண்டு இந்திர லோகத்து அயிராவதம்போல நித்தமும் அவ்விடத்து வரும் என்று தலைமகட்குத் தலைமகன் இடமணித்துக் கூறுகிற்றல்.

(25) [5]ஒன்னலர் முப்புரங் காய்ந்தகுற் றாலர்க் குறுபதியாம்
நன்னகர் வெற்பில் அணங்கேநும் மூர்க்[6]கயம் நாடொறுமென்
தொன்னகர் [7]வேழத் திரள்புக்கு மெய்[8]சுதை தோயப்பெற்றே
[9]பொன்னகர் வேழத்தை ஒப்பாக வேவந்து புக்கிடுமே.

நும்பதிக் [10]கருணி யெம்பதிப் புகுந்து
செங்கரும் புழக்கி யிங்குறு மென்றது.

---

1. சிரம்-நெடுங்காலம். 2. வானாடுபட்டம்-வான்+ஆடு+பட்டம்-விண்ணில் அசையும் பட்டம். 3. சூத்திரம்–கயிறு. 4. குளகு-விலங்குணவு. 5. ஒன்னலர்-பகைவர். 6. கயம்–யானை. 7. வேழம்-கரும்பு. 8. சுதை-சுண்ணம். 9. பொன்னகர் வேழம்-தேவலோகத்து யானையாகிய ஐராவதம். 10. கருணி-யானை.

இவற்றுள் முன்னைய மூன்றும் ஐயந் தீர்தற்கும் பின்னைய மூன்றும் பிரிவறிவுறுத்தற்கும் உரியவெனக் கொள்க. ஆகச் செய்யுள் (25) வன்புறை முற்றும்.

## தெளிவு.

தலைவன் மாற்றந் தலைவி தேற்றம்
தெளிவா மென்ப தெளிந்தி சினோரே. (ந. அ. களவு. 14)

இதற்கு வகையும் விரியுமின்மையின் இதனிலக்கணம் தலைமகன் சொல்லத் தலைமகள் தெளிதல்.

### தெளிதல்.

தெளிதல் என்பது, வற்புறுத்திய வழித் தெளிந்த தலைமகன், தவநெறியால் குற்றால நாயகர் திருவடியின்பத்தை யுணர்ந்தவர்கள் சிறிதும் கூடாவொழுக்கத்திற் செல்லார்கள். நெடுங்காலஞ் செலுத்தவேண்டித் தேற்றஞ் சொல்லிச் சென்றவர் இன்னும் தேற்றும்படி வருவார். மாறுபாடு செய்யார். எனத் தலைமகள் தானே தெளிதல்.

(26) [1]நோற்றுங்குற் றாலர்பொற் றாளின்புங் கண்டவர் நோன்றவினை
மாற்றும் படிக்கு நினைகுவ ரோதனி வைத்திலது
தேற்றும் படிக்கு வருவார்வெங் காமச்செந் தீப்பசிமுன்(பு)
ஆற்றுங் கலவி யமுதுண்ட நன்றி யவர்க்[2]குண்டுமே.

நோற்றவர் நோற்றலை மாற்றிலர் போலத்
தேற்றினர் மறத்தல்செய் யாரெனத் தெளிந்தது.

ஆகச் செய்யுள் (26)

முற்றும்.

## பிரிவுழி மகிழ்ச்சி.

செல்லுங் கிழத்தி செலவுகண் டுளத்தொடு
சொல்லலும் பாகனொடு சொல்லலும் இரண்டும்
பிரிவுழி மகிழ்ச்சியின் விரியெனக் கொளலே. (ந. அ. களவு, 15)

1. நோற்றும்—தவஞ்செய்தும். 2. உண்டும்-இது உலக வழக்கச்சொல்.

### செல்லுங் கிழத்தி செலவு கண்டுள்ளத்தொடு சொல்லல்.

செல்லுங் கிழத்தி செலவு கண்டுள்ளத்தொடு சொல்லல் என்பது—பிரிவாற்றாமையைத் தேற்றிக்கொண்டு செல்லுந் தலைமகள், கூந்தலினது மாலை [1]வாசத்தையுஞ் சிற்றிடையினது உடுக்கை [2]வாசத்தையும் கரதாமரை பெறுவதாகப் பேணிக்கொண்டு சோகத்தோடு செல்வதைக் கண்டு தானுஞ் சோகித்துத் தலைமகன் உள்ளத்தொடு சொல்லாநிற்றல்.

(27) மைத்தாழ் குழற்றுணை வாசமுஞ் சிற்றிடை வாசமுஞ்செங்
கைத்தா மரைக ளுறவண் டலம்பவுங் கன்னிகையோ
அத்[3]தாரை செல்வ தலைநம் முயிரது வாம்மனனே
[4]நத்தார் குழைத்திருக் குற்றாலத் தார்நன் னகர்வெற்பிலே.

பிரிந்துழிச் செல்லும் பேதை சோகத்தைத்
தெரிந்தவன் நெஞ்சொடு செப்பி நொந்தது.

### சோகங் கொண்டவன் பாகனொடு சொல்லல்.

சோகங்கொண்டவன் பாகனொடு சொல்லல் என்பது, [5]நோக்கு வித்தை செய்கிற [6]வேழம்பர்க்கானாலும், அவர் நடக்கும் உருக்கு வடமானாலும் ஒரு நேருள்ளது; நோக்கமுமுள்ளது. இவள் சிந்தையெல்லாம் நம்மிடத்திருக்க, ஆயக்கூட்டத்தார்க் கோரச்சமுமிருக்க மலையின் கண்ணிருக்கும் [7]அசும்பில் தலைமகள் செல்வதரிதென்று தலைமகன் பாகனொடு கூறாநிற்றல்.

(28) விருப்பக லார்க்கருள் குற்றாலர் வெற்பினில் வேழம்பர்க்கும்
உருக்கு வடமது நேர்நினை வாற்செல்வ ருண்ணினைவைப்
பெருக்கவென் மேல்வைத்துப் பாங்கியர்க் கஞ்சியும் பெண் [8]மலைவாய்
இருக்கும் வழிச்செல் வது[9]வல வாஇன் றியம்பரிதே.

நோக்குவிஞ் சையர்கண் ணேக்கினுந் தலைவி
போக்கரி தெனத்தேர்ப் பாகன்முற் கூறல்.

பிரிவுழி மகிழ்ச்சிக்கு வகையின்று. ஆகச் செய்யுள் (28).

---

1. வாசம்-வாசனை. 2. வாசம்-புடவை. 3. தாரை—வழி. 4. நத்து-சங்கு. 5. நோக்கு வித்தை-விநோதக்கூத்தினுள் ஒன்று. 6. வேழம்பர்—கழைக்கூத்தர், 7. அசும்பு-வழுக்குநிலம். 8. மலைவாய்—மலையினிடத்து, மயக்கமாய். 9. வலவன்—தேர்ப்பாகன். 27-வது செய்யுளில் முன்னிரண்டடிகளில் அமைந்த கருத்து—கலவிக்குப்பின் கூந்தல் குலைதலாலும் ஆடை அவிழ்தலாலும், அவற்றைக் கைகள் தாங்கலாயின என்பதாம்.

## பிரிவுழிக் கலங்கல்.

மருளுற் றுரைத்தல் தெருளுற் றுரைத்தலென்
றிருவகைத் தாகும் பிரிவுழிக் கலங்கல். (ந. அ. களவு 16)

ஆய வெள்ளம் வழிபடக் கண்டிது
மாயமோ வென்றலும் வாயில்பெற் றுய்தலும்
பண்பு பாராட்டலும் பயந்தோர்ப் பழிச்சலும்
கண்படை பெறாது கங்குனோ தலுமெனு
மைந்தும் பிரிவுழிக் கலங்கலின் விரியே. (ந. அ. களவு 17)

### ஆயவெள்ளம் வழிபடக்கண்டிது மாயமோ வென்றல்

ஆயவெள்ளம் வழிபடக் கண்டிது மாயமோ வென்றல்— என்பது, அங்ஙனம் பிரிந்து செல்லாநின்ற தலைமகள் ஆயத்தைக் கிட்டிச் செல்ல ஆயக் கூட்டங்கள் வந்து வழிபடுதலைக் கண்டு, நிச்சயப்பட்ட பெரியோர்களும் குற்றாலநாயகர் திருவிளையாடலை இவ்வள வென்று அறியப்படாததுபோலே, இப்படிப்பட்ட பெருமையுடையாள் தனிவரப் பெற்று மணந்தது உள்ளதோ? மாயமோ? என்று அந்தவாறே யானேனென்று தலைமகன் வருந்தா நிற்றல்.

(29) தெள்ளறி வோருங்குற் றாலர் செயலித் துணையென்றுள்ளம்
கொள்ளப் படாதெனல் போலாயி னேன்பெண்கள் கூட்டமென்
[1]வெள்ளம் வழிபட லாற்றணி வந்திவண் மேவியவா(று) [னும்
உள்ள படிமண மோமாய மோசொல் லுணர்ந்துநெஞ்சே.

செய்தொழிற் பாங்கியர் திரள்தொழக் கண்டவன்
எய்தின தரிதெனக் கென்றவண் மருண்டது.

### வாயில்பெற்றுய்தல்

வாயில் பெற்றுய்தல் என்பது, விசும்பினிடத்துச் சந்திரனுடனே நக்கத்திரங்கள் இமையாநிற்பதுபோல அந்தப் பாங்கியானவள் முகச் சந்திரனிலே நமக்குயிராகிய இந்தத் தலைவியினது [2]கோவாகிய மீனங்கள் இமையாநிற்கின்றன. ஆதலால் அவள் இவளுக்கு உயிர்ப்பாங்கியாகவேண்டும். இனிமேல் அவளைக்கொண்டே இவளைப் பெறலாம் என்று தலைவன் ஒரு காரணத்தைக் குறியாநின்றது.

(30) வா[3]னம் புலியொடு [4]மீனங் களுமிமை யாநிற்றல்போல்
ஞானந் தருந்திருக் குற்றாலர் வெற்பினற் பாங்குறுமத்

1. வெள்ளம்-மிகுதி. 2. கோவாகிய-கண்ணாகிய. 3. அம்புலி-சந்திரன். 4. மீனங்கள்-மீன்கள், நக்ஷத்திரங்கள்.

தேனம் புலியொடு நம்முயி ராகுமித் தேனிருகோர்
மீனங் களுமிமை யா[1]நிற்கு துய்வினி மேலுமுண்டே

பூங்கொடி பார்வை புரவலர்க் கவளுயிர்ப்
பாங்கி யென்னும் பரிவுகாட் டியது.

### பண்புபாராட்டல்.

பண்பு பாராட்டல் என்பது, ஆயக் கூட்டங்கள் போற்றும் படி தலைமகள் உயிர்ப் பாங்கியுடன் போய்க் கலத்தல்வரைக் கண்டு நீங்கிய கலைவன், அவளழகு சவுந்தரியத்தை நீங்காத சிந்தையனாய் மொழிக்குக் குயிலை உவமித்தாற் சிறையுற்றது. குழற்குக் கார்மணலைச் சமானிக்கால் அறலெனப்பட்டது. கண்ணுக்குக் கயலை நிகர்த்தாற் புலவாம். ஆகலாற் கன்னியினது இவ்வுறுப்புக்கு உவமையை யாதென்று சொல்வேனென்று மனத்தினில் அழுந்தா நிற்றல்.

(31) விண்ணுக்கு மண்ணுக்கு மெட்டார்குற் றாலத்தர் வெற்பின்மொழிப்
பண்ணுக் கிணைகுயி லென்னிற் சிறையுறும் பார்த்[2]தளகத்
தெண்ணுக் கிருளுக்குக் கார்மண லேயொப் பெனில்[3]அறலாம்
கண்ணுக் [4]கிணைகய லென்னிற் புலவொப்புக் கன்னிக்கென்னே.

உவமைக் [5]கண்டா திவளுறுப் பென்ன
நவரச வல்லி நலம்புனைந் துரைத்தல்.

### பயந்தோர்ப் பழிச்சல்.

பயந்தோர்ப் பழிச்சல்—என்பது காட்சிக் கெதிர்ப்பட்டுக் குறிப்பறிந்து வேட்கை யுணர்த்துங் காலத்து, எனது உளளதை நிறுத்து மதித்துக்கொண்டு முன்னே ஒரு முத்தத்தையுங் கொடுத்து நெஞ்சு நிறைய மிகுந்த தனத்தையும் பதிவு செய்து குறை தீர்த்து என்னைத் தனபதியாக்கிய தலைவியைத் தவஞ்செய்து பெற்றவர்க்குக் குற்றாலநாயகர் தோழராகிய [6]தனபதி வாழ்வினும் மிக்க வாழ்வு எய்துகவென்று தலைவன் வாழ்த்தா நின்றது.

(32) தகிக்கே யெவரும் பராவுங்குற் றாலர்தந் தோழரெனும்
[7]நிதிக்கோ னிலுமிக்க வாழ்வெய்த வே [8]யென்நிறையனைத்து

---

1. நிற்குது-நிற்கிறது என்பதன் மரூஉச்சொல் 2. அளகம்-கூந்தல். 3. அறல்-கருமணல். 4. இணை—ஒப்பு. 5. அண்டாது—பொருந்தாது. இதில் உவமைப் பொருள்களுக்கு இழிவுகூறி உவமேயப் பொருளாகிய தலைவியின் மொழி, கூந்தல், கண் இவற்றைச் சிறப்பிக்கும் நயங் காண்க. 6. தனபதி-குபேரன். 7. நிதிக்கோன்-குபேரன். 8 என் நிறை-எனது (உள்ளத்தின்) உறுதிப்பாடு, நிறுத்தல் அளவு "நிறை யனைத்தும் மதித்தே செவ்வாய் முத்தம் தந்து தனத்தைப் பதித்து" என்ற சொற்களால் பண்டம் மாற்றுதலின் கண் நிகழும் செய்கையும் உடன்தோன்றக் கூறிய நயங் காண்க.

மதித்தே[1]செவ் வாய்[2]முத்தம் தந்துநெஞ் சார வளர்[3]தனத்தை
பதித்தேநல் லின்பம் பயந்தாளை முன்னம் பயந்தவர்க்கே.

தவம்புரிந் தீன்ற தந்தை தாய்க்குச்
சிவந்தரு செல்வம் செழிக்க வென்றது.

### கண்படைபெறாது கங்குனோதல்.

கண்படை பெறாது கங்குனோதல்—என்பது, தேடுதற்குரிய பகற்பொழுது சென்றுபோய் இராப்பொழுது வரத் துஞ்சானாகிய தலைமகன், குற்றால நாயகர் தமது கண்ணாகிய [4]ஆதித்தனை உதிப்பியாது இரவை நீட்டித்தது, புலர்காலமே அவரைத் துணையாகக் கொண்டு சென்று தேடித் தலைவியைக் காண்டற்கல்லவோ? என்று துணியாநிற்றல்.

(33) மனைவியெ னுங்குழல் வாய்மொழி மேவிய மன்னவரின்
றெனைவிழி [5]துஞ்சவொட் டாதே இருள்செய் [6]திருள்வலிக்கண்
தனைவிழி யாம விருந்த தவர்தம்மை யுண்டெனவே
நினையுந் தெளிவொடு சென்றுமின் னைமுன நிற்பதற்கே.

இராவொழி [7]புலரி இறைவியைத் தேடக்
[8]கரவுவேல் அண்ணல் கடவுளைக் கருதல்.

இவற்றுள், தலைமகளை ஆயமொடுவுளமவழிபடக் கண்டு இது மாயமோ என்றல் ஒன்றும் மருளுற்றுரைத்தற்கும், ஏனைய நான்கும் தெருளுற்றுரைத்தற்கும் உரியவாமெனக் கொள்க. பிரிவுழிக்கலங்கல் முற்றும். ஆகச் செய்யுள் (33):

## இடந்தலைப்பாடு

தெய்வந் தெளிதல் கூடல் விடுத்தலென்
றிவ்வோர் மூவகைத் திடந்தலைப் பாடே. (ந, அ. களவு 18)

தந்த தெய்வம் தருமெனச் சேறலும்
முந்துறக் காண்டலும் முயங்கலும் புகழ்தலும்
உடன்புணராமந் துய்ந்தலு மெனவைந்
திடந்தலைப் பாட்டி னிலக்கண விரியே, (ந. அ. களவு. 19)

---

1. செவ்வாய்-சிவந்தவாய், செம்மையாக. 2. முத்தம்-வாயின் முத்தம், நல்முத்து 3. தனம்—கொங்கை, செல்வம் 4. ஆதித்தன்-சூரியன். 5. துஞ்சவொட்டாது-உறங்க ஒட்டாமல். 6. இருள்வலி-சூரியன். 7. புலரி-விடியற்காலம். 8. கரவு-ஒளித்தல்.

### தந்ததெய்வந் தருமெனச்சேறல்.

தந்த தெய்வம் தருமெனச் சேறல்—என்பது, தனக்கொப்பி லானாகிய குற்றாலக் கடவுள் முன்னாள் தவத்தைச் செய்தோர்க்கு அந்தக் காலத்தும் இடையூறின்றி முடிப்பித்து, அதன் பலத்தினால் இம்மை யில் தடுத்தாட்கொண்டு உய்விப்பது போலும், தலைவியைக் காந்தரு வமணத்துக் கேதுவாக முன்னமே கொண்டுவந்து கொடுத்ததுபோல இப்போதும் தருவிப்பான் நீ செல்வாய் என்று தலைமகன் நெஞ் சொடு கூறாநிற்றல்.

(34) தம்மையொப் பாரிலர் குற்றாலர் முன்னம் தவமுயன்றோர்க்
[1]கும்மையுங் காத்துப்பின் னிம்மையி லாட்கொண்டுய் விப்பதுபோல்
நம்மையு முய்யும் படிதிரி கூடத்து [2]நன்னுதலைச்
செம்மை யுறமுன் தரல்போல் தருவர்செல் வாய்நெஞ்சமே.

[3]தெருளொடு செல்லுஞ் செல்வன் முன்னாள்
அருள் [4]அணங்கு [5]இனந்தரும் [6]அணங்கை யென்றது.

### முந்துறக்காண்டல்.

முந்துறக்காண்டல் என்பது, பூருவ சென்மத்திலே அநேகம் தவங்களைச் செய்தவர் அந்தத் தபோபலத்தினால் குற்றால நாயகர் திரு வடிகளை அணித்தாகப் பெறுகின்ற நல்லகாலம் போலும், தலைவியை எதிரே காணாநின்ற திறமெனத் தலைமகன் வியப்புறா நின்றது.

(35) முற்காலத் திற்றவ மிக்காகச் செய்தவர் முன்[7]சயில
விற்கால் வளைத்தவர் குற்றாலர் காட்சி விரைந்துபெறும்
நற்காலம் போலும் திரிகூட வெற்பினின் நன்னுதலைச்
[8]செற்கா வனத்தினிற் கண்டெதிர் கொண்ட திறமிதுவே.

முற்றவத் தினர்முன் னவனருள் பெறல்போல்
நற்றவத் தால்நன் னுதலெதிர்ப் பட்டது.

### முயங்கல்.

முயங்கல் என்பது, முற்செய்த தவம் கூட்டுவிக்கக் கூடிய தலைமகள் [9]அதரபானத்தினது மதுரத்தைக் கண்டதன் பின்பு

---

1. உம்மை—கழிபிறப்பு. 2. நன்னுதல்-நல்ல நெற்றியை உடையவள். 3. தெருள்—அறிவு. 4. அணங்கு-தெய்வம். 5. இனம்-இடைக்குறை. 6. அணங்கு-பெண் 7. சயிலம்—மலை. 8. செல்—மேகம். 9. அதரம்—உதடு.

அதற்கு உவமையாகத் துவரிதழ் என்ற சொல் முழுதும் பொய்யாச் சுது. கொவ்வைக் கனி என்றவர் சொல்லும் ஒன்றுபோற் கனியாமையாற் பாதி பொய்யாச்சுது. பாதியானாலும் நிசமாமோ என்றால் அதன் சாய்கைபற்றி [1]விம்பம் எனப் பெயரே பெற்றதால் பாதியொத்தது. இனி இதற்கிணை யேதென்று தலைமகன் தானே மகிழாநிற்றல்.

(36) [2]கவரிலைச் சூலத்தர் குற்றாலர் வெற்பினிற் கன்னியைமுற்
றவமத னாற்புணர்ந் துண்டிதழ் தித்தித்த தைக்கண்டுமே
[3]துவரிதழ் என்றசொல் முற்றும்பொய் [4]யாச்சுத்[5]தொண் டைக்கனியென்
றவர்சொல்லும் பாதிபொய் யாச்சு திணையினி யாவதென்னே

இவளிதழ்ச் சுவையின் இனிதறிந் ததன்பின்
பவளமும் விம்பமும் பழிப்ப வாயது.

## புகழ்தல்.

புகழ்தல்—என்பது, மேகமானது கருங்கடற்சென்று படிவதும் பின்னும் தேவேந்திரனுக்கு ஒரு வாகனமாயிருந்து சுமந்து திரிவதும் இவளது வண்டுபடியுங் குழல் போலக் கறுப்பாக வேணுமென்றல்லோ வெனத் தலைமகன் புகழாநிற்றல்.

(37) கருங்கட லோடிப் படிவது மீண்டுங் [6]கரியவனைத்
திருந்தவு மேற்சுமந் தூர்தலுங் கார்[7]திருந் தார்புரத்தைப்
பொருங்குறு[8]மூரலர் குற்றாலர் வெற்பினிற் பூங்கொடிதன்
[9]சுரும்புறை வார்குழல் போற்கறுப் பேறியுந் [10]தோன்றுகவே.

கருங்குழல் போற்கார் கறுக்கவு பாயம்
வருந்திய தெனமட வரல்நலம் புகழ்ந்தது.

## உடன் புணராயத் துய்த்தல்.

உடன்புணராயத்துய்த்தல்—என்பது, எவ்வுயிர்க்குங் காவற்

1. விம்பம்-சாயை, கொவ்வை. 2. கவர்—பிளத்தலையுடைய 3. துவரிதழ்—பவளம் போன்ற இதழ். 4. ஆச்சு-ஆயிற்று என்பதன் மரூஉச்சொல். 5. தொண்டைக்கனி-கோவைக்கனி. 37-வது செய்யுள்-மேகம் கருங்கடற் படிவதாகவும், இந்திரனுக்கு வாகனமாக இருப்பதாகவும் சொலப்படுகிற கவிஸங்கேதத்தைக்கவி தலைவியின் கூந்தல் நிறம் பெறுகைக்கு வேண்டிச்செய்வதாகத் தற்குறிப்பு ஏற்றிச்சொல்லும் நயங்காண்க. 6. கரியவன்-தேவேந்திரன். 7. திருந்தார்—பகைவர். 8. மூரலர்-சிரிப்பை யுடையவர். 9. சுரும்பு—வண்டு. 10. தோன்றுதற்கே என்றிருத்தல் நலம்.

கடவுளாய் அங்கங்கே எள்ளுக்குள் எண்ணெய்போல் இருந்தும் திருமாலானவர் திருப்பாற்கடலில் அறிதுயிலமர்ந்தவர் என்பதுபோல நீயும் எனக்கு உயிருக்குயிராயிருந்து இன்பத்தைக் கொடுத்தும் ஆயவெள்ளத்துக்கு ஒரு நாயகவாசியா யிருப்பதுபோ லிருப்பாயென்று தலைமகன் ஆயத்துய்த்துத் தலைவியைச் செலுத்தாநின்றது.

(38) ஏய[1]வெள் ளங்குறு நெய்போ லிருந்தெங்க ணும்புரந்தும்
தோய[2]வெள் ளஞ்சென்று மால்[3]வளர்ந் தார்[4]என் றொடர்புடைத்துஞ்
[5]சீயவெள் ளங்கத் துரியார்குற் றூலர் சிலம்பிடத்தில்
[6]ஆயவெள் ளஞ்செலு வீரவர் போல அணங்கரசே.

பாற்கடற் பள்ளிப் பகவனைத் தாயத்
தேற்குவி ரென்னவுய்த் திறையவன் விடுத்தல்.

இவற்றுள், தந்த தெய்வந் தருமெனச் சேறலாகிய ஒன்றும் தெய்வந்தெளிதற்கும், நின்ற மூன்றும் கூடற்கும், உடன் புணராயத் துய்த்தல் ஒன்றும் விடுத்தற்கும் உரியவாமெனக் கொள்க.

ஆகச் செய்யுள் (38)

இடந்தலைப்பாடு முற்றும்.

---

## பாங்கற் கூட்டம்.

சார்தல் கேட்டல் சாற்றல் எதிர்மறை
நேர்தல் கூடல் பாங்கிற் கூட்டலென்
றுங்கெழு வகைத்தே பாங்கற் கூட்டம். (ந. களவு. 20)

தலைவன் பாங்கனைச் சார்தலும் பாங்கன்
தலைவனை யுற்றது வினுதலும் தலைவன்
உற்ற துரைத்தலுங் கற்றறி பாங்கன்
கழறலுங் கிழவோன் கழற்றெதிர் மறுத்தலும்.
கிழவோற் பழித்தலுங் கிழவோன் வேட்கை
தாங்கற் கருமை சாற்றலும் பாங்கன்
தன்மனத் தழுங்கலுந் தலைவனே டழுங்கலும்
எவ்விடத் தெவ்வியற் றெனறலு மவனஃது

---

1. எள் + அங்கு + உறு நெய்போல்—எள்ளுக்குள் எண்ணெய்போல். 2. வெள்ளம்—கடல். 3. வளர்ந்தார்—கண் வளர்ந்தார். 4. என் தொடர்பு—எனது நட்பு 5. சீய வெள் + அங்கத்து + உரி—புலித்தோல். 6. ஆயவெள்ளம்—தோழியர் கூட்டம்.

இவ்விடத் திவ்வியற் றென்றலும் பாங்கன்
இறைவனைத் தேற்றலுங் குறிவழிச் சேறலும்
இறைவியைக் காண்டலு மிகழ்ந்ததற் கிரங்கலும்
தலைவனை வியத்தலும் தலைவியை வியத்தலும்
தலைவன் றனக்குத் தலைவிநிலை கூறலும்
தலைவன் சேறலும் தலைவியைக் காண்டலும்
கலவியின் மகிழ்தலும் புகழ்தலும் தலைவியைப்
பாங்கியொடு வருகெனப் பகர்தலும் பாங்கிற்
கூட்டலு மென்றிங் கீட்டுநா லாறுங்
காட்டிய பாங்கற் கூட்டத்தின் விரியே. (ந, களவு, 21)

## தலைவன் பாங்கனைச் சார்தல்.

தலைவன் பாங்கனைச் சார்தல்—என்பது. இயற்கைப் புணர்ச்சியின் இறுதிக்கண் வற்புறுத்தியகன்ற பின்னர் ஆயத் தொகுதி போற்றச் சென்ற தலைமகள் திருநோக்கருளிச் செய்யக் கண்டவளை இவட்கு உயிர்ப்பாங்கியென்றறிந்து, மேற்பெறு நுகர்ச்சிக்கேதுவாமென்று சென்ற தலைமகன், தனக்கு உண்மையிற் சிறந்த பாங்கனால் நுகர்ச்சி பெற்று அப்பால் அவ்விருவரும் நிற்குமிடத்திரவு வலியுறுத்தக் கருதியபொழுது, ‘கல்வியுடையார்க்குச் சபையினால் அச்சமில்லை. செல்வம் உரியார்க்கு வறுமையினலச்சமில்லை. இவைபோல இத்திறங்கொண்டு முடித்தற்குப் பாங்கனது துணை எந்நாளும் எனக்குளது. அதனால் ஓரச்சமுமில்லை’யென்று, பாங்கனைக் கருதா நிற்றல்.

(39) கல்வியுள் ளார்க்கவை யச்ச மிலையொண் [1]கனகநிதிச்
செல்வியுள் ளார்க்கிர வச்ச மிலையித் திறமுடிக்க
நல்[2]விறற் பாங்கனுண் டச்ச மெனக்கொரு நாளுமில்லை
[3]வெல்விடை யார்திருக் குற்றால நாயகர் வெற்பிடத்தே.

உண்மையிற் சிறந்துயர் பாங்கனைச் சார்ந்து
பெண்மையின் இன்புறப் பெருந்தகை வருந்தல்.

## பாங்கன் தலைவனை யுற்றது வினாதல்.

பாங்கன் தலைவனை யுற்றது வினாதல்—தன்னை வந்து சார்ந்து உரையா நின்ற தலைமகனை அடிமுதல் முடிகாறும் நோக்கித் துறந்தோர்களின் தவசுகள், வேள்விகள் முற்றும்படி பூதாதி இராக்கதரால் வரும் இடர்களைத் தவிர்க்கச் சென்றோ இவ்வாறு நிறந்தங்கிய நின்னது திருமேனியெல்லாம் மெலிவானதென்று பாங்கன் வினவா நிற்றல்.

---

1. கனகநிதி-பொன்னாகிய செல்வம். பாடபேதம்: கனநிதியச் 2. விறல்-வலிமை.
3. வெல்விடையார்-வெற்றியையுடைய இடப வாகனத்தையுடைய சிவன்.

(40) துறந்தோர் தவசுகள் [1]வேள்விகள் காக்கத் துணிந்தங்ஙனே
மறந்தோர் அரக்கர் [2]கணங்க ளடாநின்று மாற்றினையோ
இறந்தோர் சிரம்புனை குற்றாலர் வெற்பி லெமதிறைவா !
நிறந்தோயு மேனி மெலிவான தென்ன நினைவுரையே.

நிறையெழில் மேனி குறையது கண்டவ்
விறைவனைப் பாங்கன் ஏதென வினவல்.

### தலைவனுற்ற துரைத்தல்.

தலைவனுற்றதுரைத்தல் — என்பது, அமிர்தத்தை அருப விக்கவேண்டி மந்தரகிரியில் வாசுகியைப் பூட்டிப் பாற்கடலைக் கடையும்போது, அக்கடவுட் பாம்பு விடத்தைக் கக்கிவிட அந்தப் பாற்கடலிற் பரந்தெழுந்ததுபோல, முப்பாலையுங் கற்றுணர்ந்த எனது சிந்தையில் திரிகூடவரையின்கட் குறமகள் மோகப் பாம்பு என்னெஞ்சு அவ்வளவையும் சுழற்றி ஆசையாகிய நஞ்சைக் கலப்பித்தது. ஆதலால் அந்தப் பாம்பைக்கொண்டு கடிவைத்து மீட்பாரின்றி மெலிந்தேனெனத் தலைமகன் பாங்கற்குச் சொல்லாநின்றது.

(41) [3]துப்பா லரவங் கொளுவி [4]வரைசுழற் றக்[5]கடுவிட்
[6]டப்பாலின் சிந்து †வடைந்தெழல் போற்கற் றறிந்ததொகை
[7]முப்பாலின் சிந்தையிற் குற்றாலர் வெற்பினள் மோகவரா
இப்பாலென் னெஞ்ச வரையுஞ் சுழற்றி [8]நச்சிட்டனவே.

பூட்டிய மோகப் பொறியரா விடத்தை
மீட்பவ ரின்றி மெலிந்தே னென்றது.

### கற்றறிபாங்கன் கழறல்.

கற்றறிபாங்கன் கழறல்—என்பது சிறியதொரு மானினத்தைக் கண்டு, வன்மிருகமாகிய யானையைத் தாக்கிய புலியானது மருளாது. ஆதலால், அந்தக் குறமான் ஒருத்தியாசைதானே நினது பெருமையும் உரனுமாகிய தாக்கை மருட்டும்? மருட்டமாட்டாது; மெலியவேண்டுகிலவென்று பாங்கன் கழறாநின்றது.

---

1. வேள்வி-யாகம். 2. கணம்-கூட்டம். 3. துப்பு-வலிமை. 4. வரை-மலை. 5. கடு-விடம். 6. பாலின் சிந்து-பாற்கடல். 7. முப்பால்-அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால். 8. நச்சு-நஞ்சு.

† படர்ந்தெழல் என்றிருத்தல் நலம்.

(42) [1]கூஞர் மதியமும் நாகமும் வேணியிற் கொண்டவர்பூந்
தேனருங் கொன்றைத் தொடையார்குற் றலர் சிலம்பிடத்தே
மானலுந் தாக்கும் புலிமரு ளாவந்த மாறெருத்தி
தானின் [2]தாக்கை மருட்டுமெய் தேறுக தாரண்ணலே.

உரனும் பெருமையு முளன்மனத் தினையோ
[3]கரனுறச் செயும்புன் காம மென்றது.

## கிழவோன் கழற்றெதிர் மறுத்தல்.

கிழவோன் கழற்றெதிர் மறுத்தல்—என்பது, நீ இகழ்ந்துரைத்த புன்காமமானது என்னளவுமல்லவே? முன்னாளிற் குமரநாயகன் வள்ளிக்கொடியாகிய ஒரு குறத்தியை மணஞ்செய்யும் பொருட்டன்றோ வேங்கைமரமாய் நின்றாரென்று தலைமகன் மறுத்தெதிர் கூறாநிற்றல்.

(43) பூங்[4]கையற் கண்ணி குழல்வாய் மொழிபங்கர் பொற்சயிலக்
[5]கோங்கை நிகர்முலை யாளாசை யெம்மட்டுங் கொண்டதுவோ
[6]காங்கைய னர்தெய்வ ரூபத்தை விட்டருங் காவனம்போய்
வேங்கை மரமென நின்றார்வள் ளிக்கொடி மேவுதற்கே.

ஆங்கு[7]அயில் வேலோன் அன்றொரு மணத்தால்
வேங்கைய தாயின தெனமிக மறுத்தது.

## கிழவோற் பழித்தல்.

கிழவோற் பழித்தல்—என்பது, முற்காலத்து அரவணைச் செல்வனாகிய இராமனுக்கு [8]அநுசராம் இலக்குமணர் இராக்கதனுடைய நாகபாசத்திலே கட்டுண்டும், நிராகரித்துச் செயித்துக்கொண்டார். நீ ஒரு மலைக்குறத்தி இடையாகிய மின்னுக்குக் கீழ்ப்பட்டு எந்நாளும் மறைந்து கிடக்கிற அல்குற் பாம்பினது பாசத்தை நீங்கி மீளாயாகின், மிகவும் நிந்தை வருமென்று தலைவனைப் பாங்கன் பழியாநிற்றல்.

---

1 கூஞர்மதியம்-பிறைச்சந்திரன். 2 தாக்கு-உரம். 3 கரன்-அழிவு. 4 கயல் என்பது எதுகை நோக்கிகையல் என வந்தது. 5 கோங்கு-கோங்கு மரத்தின் பூ. 6 காங்கையன்-குமரன் 7 அயில்-கூர்மை. 8 அநுசர்-தம்பி.

(44) [1]முன்னாக மேற்றுயில் அம்மாற் கிளையர் முனை[2]யரக்கன்
றன்னாக பாசத்திற் கட்டுண்டு மீண்டனர்[3]தையலுமை
பொன்னாக மேவிய குற்றால நாதர் [4]பொருப்பிடத்தின்
பின்னாக பாசத்திற் கட்டுண்டு நீயென்ன மீண்டிலதே.

கண்புகும் வழிபொரு காமுக னேதல்
பண்பல வென்று பாங்கன் பழித்தது.

### கிழவோன் வேட்கை தாங்கற் கருமை சாற்றல்.

கிழவோன் வேட்கை தாங்கற் கருமை சாற்றல்—என்பது, [5]வச்சரம் பன்னிரு திங்களுக்கும் பன்னிரண்டு ஆதித்தர் உதயமாகிப் பூச்சக்கிர வாளகிரிக்கப்பால் அந்தகாரப் படலத்தை நீக்குவார்கள். அப்படிப் பன்னிரண்டு ஆதித்தருக்குப் பன்னீராயிரம் ஆதித்தர் உதித்தாலும் பிடிபோல்வாள் ஒரு குறத்திக்குப் பிடிகொடுத்த அறிவின்மையாகிய அந்தகாரம் நீங்குவது எளிதல்லவென்று தலைமகன் தாங்குதற் கருமை சாற்றியது.

(45) தாரார் புயநண்ப னேதிரி கூடத் தலைவரெனும்
பேரார் அருட்டிருக் குற்றாலர் வெற்பிற் பிடிகொடுத்த
தீரா மயக்க மெனுமந்த காரத் திரளறப்பன்
னீரா யிரங்கதிர் வந்தாலுந் தீர்ப்ப தெளிதலவே.

நீங்கரி திறைவி நெடுமையற் கொடுமை
தாங்கரி தென்னத் தலைமகன் புகறல்

### பாங்கன் தன்மனத் தழுங்கல்.

பாங்கன் தன் மனத்தழுங்கல்—என்பது, ஒரு காலத்து எமது தலைவனை அறிவினான்மிக்க [7]சேடனென்று வியப்புற்றதற்கோ அவனைப்போலே இவனும், ஒரு கட்டுரைக்கு இணையானன் அன்றி நான் சொன்ன அறிவுக்கு இணையானனில்லை. இன்னமும் தோன்றும்படிக்கு நாவெடுத்து யாது சொல்வேன் எனப் பாங்கன் தன் மனத்திலே சிந்தாகுலமுற்றது.

---

1 முன் + நாகம் மேல்துயில் அம்மான் = திருமாலின் அவதார புருஷனாகிய இராமன். 2 அரக்கன்—ஈண்டு இந்திரசித்து என்னும் இராக்கதன். 3 தையல்-பெண். 4 பொருப்பு-மலை. 5 வச்சரம்-வருடம். 6 மயல்—ஆசை. 7 சேடன்-ஆதிசேஷன்.

(46) முன்னாக வெங்கணா நின்றகுற் றாலர் [1]முகில்வரைவாய்
என்னா தனையறி வாற்சேட னென்றதற் கோவவன்போற்
[2]பொன்னாகத் தந்த மடிகொண்டு மாலுறப் பூணலுற்றார்
சொன்னா வெடுத்தென்ன வென்றாரைப் பேணின்னம்-தோன்று
தற்கே.

கட்டுரைக் கிணைந்து கலையறி வுக்கிணை
யொட்டில னிறையென உள்ளுடைந் திரங்கல்.

## பாங்கன் தலைவனொ டழுங்கல்.

பாங்கன் தலைவனொ டழுங்கல்—என்பது, வாராய் தலைவனே! தலைமகள் உரத்தலத்துயர்ந்த குயவரி கண்டு மயங்கியது சற்றுந் தெளிந்திலை. ஆனால் இரண்டு குயவரி கண்டு மருண்டவர்க்கு அநேகங் கலைகளைக் காட்டித் தேற்றினால் தேறுவரோ? தேறமாட்டார். உனக்கு வந்த துன்பமே எனக்கும் வந்ததென்று, பாங்கன் அவனோடொத்து நின்றழுங்கியது.

(47) நயன நுதற்றிருக் குற்றாலர் வெற்பினில் நன்னுதலாள்
[3]குயவரி கண்டது தேறிலை பல்[4]கலை கொண்டுரைத்தும்
செயமுறு கின்ற [5]குயவரி கண்டவர் தேறுவரோ
நியமுடன் பல்கலை கண்டவர் தேற்ற நிசமெனவே.

மயங்கிலன் மயங்கின் மறுப்பதே னென்ன
[6]வுயங்கிய பாங்க னொத்துநின் றழுங்கல்.

## பாங்கனஃதெவ்விடத் தெவ்வியற்றென்றல்.

பாங்கனஃதெவ்விடத் தெவ்வியற்றென்றல்—என்பது குற்றால நாயகர் நாடாகிய சம்புத் தீவுக்குள்ளே [7]நவ [8]வருடத்தொரு பூதலமோ? அவ்விடத்துள்ளாளோ? அன்றியும் பூங்கொத்துக்கள் விரியாநின்று அழகுபொருந்திய திரிகூடவரையோ அங்ஙனமுள்ள மகளோ? சொல்வாயென்று தலைவனைப் பாங்கன் இயலிடங் கேளாநிற்றல்:

1 முகில்—மேகம். 2 பொன்னாகத்தந்த மடிகொண்டு மாலுற—பொன்னிறமான பாம்பின் பல் வளைவுகொண்டு மஹாவிஷ்ணு அடைய, எனச் சேடனுக்கும், அழகிய மார்பில் கொங்கையாகும் யானைக்கொம்பினால் மொத்துண்டு மயக்கமடைய, எனத் தலைவனுக்கும் சிலேடை நயங்காண்க. 3 குயவரி—கொங்கையின் ரேகை. 4 கலை—ஆண்மான், கல்வி. 5 குயவரி—புலி. 6 உயங்கிய-வருந்திய 7 நவம்-கார்காலம். 8 வருடம்-மழை.

(48) நாத ரெனுந்திருக் குற்றால நாயகர் நாட்டிலொரு
பூதலமோ வந்தப் பூமக ளோநகை பூத்தலரும்
[1]மாதர் வரையிட மோவரை மாமக ளோ[2]மனவா
நீதவ றுதிவ் விடமீ தியலென நேர்ந்துரையே.

என்னிட மென்னிய விறைவகேட் சென்று
நன்னெறிப் பாங்கன் நாதனைக் கேட்டது.

## அவளஃதிவ்விடத்திவ்வியற்றென்றல்.

அவளஃதிவ்விடத்திவ்வியற்றென்றல்—என்பது, திருக்குற்றால நாயகர் திரு[3]மிடற்றை ஒரு காலத்துக் கறையாக்கின ஆலகாலவிடத்தைப் பொருவுங் கண்ணிணைகள்; அவர் மேருவரையை யொக்குங் கொங்கைகள்; அவர் திருவாபரணமென்னும் பாம்பை நிகர்க்கும் சிற்றிடை. இனி இடம், அவர் திரிகூடவரையின்கண் உயர்ந்த செண்பகப் பொதும்பரின் நறுநிழலாகும். என்னுடைய பாங்கனே! என்று தலைவன் இபவிடங் கூறுநிற்றல்.

(49) [4]கடம்பொழி மாவதட் குற்றாலர் கண்டங் கறைப்படுத்தும்
விடம்பொருங் கண்ணவர் மேருவெற் பாங்கொங்கை
வேண்டியவர்
தடம்படு மார்பணி யும்பணி யாமிடை தானவளுக்
கிடந்திரி கூடத் தெழுஞ்செண்ப [5]காடவி யென்னன்பனே.

எம்பர னியல்பு மிடமுமங் கையர்க்கென
[6]வம்பவிழ் [7]அலங்கல் மன்ன னுரைத்தது.

## பாங்கன் இறைவனைத் தேற்றல்.

பாங்கன் இறைவனைத் தேற்றல்—என்பது, குற்றால நாயகர் திருவடிப்பேறு சித்திக்குந் துணையும் அதற்கென்றெடுத்து அநுட்டிக்கிற தவசிந்தனைக்குச் சலனம் வாராது அவரன்பர்கள் பேணுதல் போலே [8]அயிராணிக்குச் சமானமாகிய தலைமகள் நிலையினை யான் சென்று கண்டு அவ்விடம் விட்டு இவ்விடம் வருகிறவரையும் கேவலத்தையடையாது திடத்தொடு மனந்தடுமாறுதிருப்பாயென்று பாங்கன் தலைவர்க்குச் சொல்லாநின்றது.

---

1 மாதர்-அழகு. 2 மனவா - மன்னவா என்பதன் இடைக்குறை. 3 மிடறு-கழுத்து. 4 கடம்பொழிமாவதள்-மதம்பெய்கின்ற யானையின் தோல். 5 அடவி-காடு. 6 வம்பு—வாசனை. 7 அலங்கல்-மாலை. 8 அயிராணி—இந்திராணி.

(50) [1]கடுத்திகழ் கண்டர்நங் குற்றாலர் பொற்பதங் காண்பளவும்
எடுத்த தவக்கருத் துக்கலங் காதன்ப ரேத்துதல்போ
லடுத்[2]தயி ராணியன் னணிலை யான்கண்ட கன்றுமப்பால்
விடுத்துநின் பாலெய் தளவுமன் பாதெளி மெய்ந்நெஞ்சமே.

கருங்குழற் பேதையைக் கண்டுமீண் டுன்பால்
வருந்துணை யுந்தனி வருந்தே லென்றது.

## பாங்கன் குறிவழிச் சேறல்.

பாங்கன் குறிவழிச் சேறல்—என்பது, உலகத்திலே யாதொரு செயலுங் குற்றாலக் கடவுளார் செயல் என்றறியாது, யானெனது என்பாரது ஞான வாழ்வு இடையிற்றடைபடுவதுபோலச் செண்பகப் பொதும்பரின் கண்ணே, ஓர் உண்டாட்டு ஒலி தோன்றும்படி, பொன்னனையாள், அத்தலத்துப் புடைத்தெழாநின்ற [3]கந்துகத்தை இடையே தடுத்து எறியா நிற்கிறாள். இதுவே அவள் நிற்குமிடத்துக்குக் குறியெனப் பாங்கன் செல்லாநிற்றல்.

(51) திரை[4]வாரி வையத் தெவையுங்குற் றாலர் செயலெனவே
உரையா [5]அகப்பற் றினார்வாழ் விடையிற்றட் டுண்பதுபோல்
[6]விரையாருஞ் செண்பகக் [7]காமீதி லோசை மிகுந்தெழப்பொன்
தரைமேற் புடைத்தெழும் பந்தோங் கலையிடை தட்டுதுவே.

உண்டாட் டொலிகேட் டுப்[?]துணைப் பாங்கன்
கண்டாற் றுவமெனக் கருதிச் சென்றது.

## பாங்கன் இறைவியைக் காண்டல்.

பாங்கன் இறைவியைக் காண்டல்—என்பது. ஆயிரத்தெட்டு மூர்த்தமாய் மூர்த்திகரித்திருப்பாருடைய குற்றாலத்தலமும், அத்தலத்து மேலே திரிகூட வரையும், அப்பால் அவ்வரை மகள்போல் துகில் நிறையக் கொய்துடுத்திய சிறிய [8]உதராலமும், மேலே கோடுயர்ந்திருக்கப்பட்ட தலைவரையும், இவ்விடத்துற்றுக் கண்ணாரக் கண்டமையால், தலைவன் சொல்லிய இடமுமிது; இயல்புமிது; தலைவியுமிவளேயெனப் பாங்கன் காணாநிற்றல்.

---

1 கடு—விஷம். 2 அயிராணி—இந்திராணி. 3 கந்துகம்—பந்து. 4 வாரி—கடல். 5 அகப்பற்று—நான் என்னும் பற்று. 6 விரை.வாசனை. 7 கா—காடு. 8 உதராலம்—வயிறுகிய ஆல் இலை.

(52) [1]எற்று வியமன் பகைவென்ற ஆயிரத் தெண்[2]கலையார்
[3]குற்றால மேற்றிரி கூட வரையும்போற் [4]கொய்கலையார்
[5]சிற்றால மேற்[6]றிரி கூட வரையுந் தெரிந்திருகண்
ணுற்றாரக் கண்டத னாலிவ ரேயன்ப ரோதுமின்னே.

இயல்பு மிடனு மிறைவியும் பாங்கன்
[7]வியனுறக் கண்டு வியந்தய னின்றது.

### இகழ்ந்ததற்கிரங்கல்.

இகழ்ந்ததற் கிரங்கல்—என்பது, தலைமகள் அவயவத்தினது சாமுத்திரிய இலக்கணங் கண்டறியாது, அவள் கண்ணாகிய வேற்புண் பட்ட தலைமகனெஞ்சுக்கு நாமறிவுறுத்தலாகிய கூர்மையை உறவுந் தைக்கத்தக்க சொன்னது மோசமென்று பாங்கன் இகழ்ந்ததற் கிரங்காநிற்றல்.

(53) அன்பக லாதவர்க் கன்பர்குற் றாலர் அணிவரைவாய்
மின்பல மாதருஞ் சென்றறி யாமல்மின் வெய்யவிழி
வன்பயில் கூர்மை யுறத்தைத்த புண்ணெஞ்சின் மன்னர்க்குநூல்
முன்பயில் கூர்மை யுறத்தைக்கச் சொன்னது மோசமதே.

அவயவத் திலக்கணத் தருமை யறிந்தபின்
[8]நவையறு பாங்கன் [9]நனியிரங் கியது.

### தலைவனை வியத்தல்.

தலைவனை வியத்தல்—என்பது, அகலிகை பொருட்டாகக் கவுதமர் ஆயிரம் வருடஞ் சமுத்திரத்திலே மூழ்கிக் கிடந்தார். அந்தத்துனியினாலே தேவேந்திரனும் ஐந்நூறு வருடம் மூழ்கிக் கிடந்தான். இந்தத் தலைமகளைக் கண்டவன் இங்ஙனஞ் சோகித்துக் கிடந்து போகாதே மீண்டுவந்து உத்தரஞ் சொன்னதால், இவனே திண்ணியனென்று பாங்கன் வியப்புறாநிற்றல்.

---

1 எற்று—உதை. 2 கலை—பிரகாசம். 3 குற்றாலமும்-என்று உம்மை இருக்க வேண்டிய இடத்து அது தொக்கது. 4 கொய்கலை—கொய்துடுக்கும் 5 சிற்றாலம்-சிறிய வயிறாகிய ஆலிலை இதிலும் உம்மைத் தொகை. 6 திரிகூடவரை—அசைகின்ற மறைந்திருக்கும் கொங்கையாகிய மலை. 7 வியன்—அதிகம். 8 நவை—குற்றம். 9 நனி—மிகுதி.

(54) [1]முனி[2]யா யிரஞ்சம யங்கன் னிக் காக்கடல் மூழ்கினரத்
[3]துனியாற் [4]புரோகித னும்பாதி நாட்கடல் தோயப்பெற்றான்
நனியார்குற் றாலர் வரைமீதி லெம்பிறை நன்னுதற்பைங்
[5]கனியான தைக்கண்டு மீண்டத னுற்றிறங் கற்றவனே.

கண்டிவட் சோகங் கடந்தவட் புகுந்த
திண்டிற லோனையித் திண்ணியன் வியத்தல்.

## தலைவியை வியத்தல்.

தலைவியை வியத்தல்—என்பது, [6]கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிதலென்னும் ஐவகைப் புணர்வுக்கும் புகலை வைத்து, இந்தப் பெண்மணியைக் கைவருந்தப் படைத்த பிரமா, எக்காலமும் நீங்காமல் ஒன்றாய்த் தொடர்ந்து கைப்பற்றிக் கொள்வதற்கோ? தலைமகனை முன்னாற் பொருளும் உணரும் திறவானைப் படைத்ததென்று, தலைவியை வியந்ததற்பின்னர்ப் பாங்கன். தலைவனையுங் கூட வியவா நிற்றல்.

(55) கயல்விழி யாள்குழல் வாய்மொழி மேவுங்[7]கங் காதரர் மா
[8]வயிர்திரி கூடத் திறைகை யினுற்செய் வருத்தமுற்றோ
[9]குயின்மணி தன்னையொன் றாய்த்தொடர் செய்துகைக் கொள்வதற்கே
தயவுட னேகைக் கொடுத்தார்முன் னாலுந் தலைவருக்கே.

தலைப்படு சால்பு தலைமகற் [10]அரன்றரல்
உலப்பில் பெண்மணி யாலென வியந்ததுரைத்தது.

## தலைவன்றனக்குத் தலைவி நிலைகூறல்.

தலைவன்றனக்குத் தலைவி நிலை கூறல்.—என்பது, பேரன்பராகிய தொண்டருள்ளத்தைக் குறும்பலாவுடையார் நீங்காததுபோல, உள்ளத்தை முழுதும் உன்னிடமாக வைத்துக்கொண்டு எத்திசை வருவாரோ? என்று கண்களைப் பரப்பிச் சுற்றும் இமையா நிற்கிறாளெனத் தலைவியினது நிலையைப் பாங்கன் கண்டுவந்து தலைமகனுக்கு உணர்த்தாநிற்றல்.

---

1 முனி—கௌதமர். 2. ஆயிரஞ் சமயம்—ஆயிரவருடம். 3 துனி—துன்பம். 4 புரோகிதன்—தேவேந்திரன். 5 கனி—கனிபோன்றவள். 6 "கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு — மொண்டொடி கண்ணே யுள" (குறள்) 7 கங்காதரர்-கங்கையைத் தரித்த சிவபிரான். 8 வயிர்-மூங்கில் 9 குயில்-துளை 10 அரன்-சிவபிரான்.

(56) குறும்பல வேயிடங் கொண்ட பிரான் மனங் கொண்டவர்பால்
உறும்[1]பரி வுள்ளத்தை நீங்காதல் போலும் உளத்தைநின்பால்
பெறும்படி வைத்துநின் றுள்[2]கோவண் [3]டோவினள் போ[4]லரக்
கறுங்துண ரேமொய்த் திருந்துநின் [5]பூத்திசை நாடுதற்கே. [காம்

நின்றிசை நோக்கி நின்றனை ளென்னக்
[6]கன்றிசை கையாட் கண்டுவந் துரைத்தல்.

### தலைவன் சேறல்.

தலைவன் சேறல்—என்பது, தேவர்களெல்லாம் வணங்கும் குற்றால நாயகர் தியானிப்பவர்கள் இருதய கமலத்தில் விரைந்து செல்வர் என்பதால், தலைமகள் நின்று விளையாடுஞ் செண்பகாரணியத்துக்கு, அப்படிச் செல்லும் அவர் திருவடிகளைச் சிரத்தால் வணங்கியும் மனத்தால் நினைந்தும் நாவால் துதித்தும், இந்த நேரமே செல்வோமென்று அவளிடத்துத் தலைமகன் செல்லாநின்றது.

(57) [7]கோமிசை வாழ்நர் பராவுங்குற் றாலர்கொண் டேநினைந்தோர்
[8]பூமிசைச் சேறல் விரைவென லான்மலர்ப் பூங்கொடிவாழ்
காமிசைச் சேறற் கவர்பதஞ் சென்னி கருத்துமுதல்
நாமிசை யுங்கொண்டு செல்வோம்நெஞ் சேயிந்த நாழிகைக்கே.

[9]முப்பொறி யாலும் முதல்வனை வணங்கிச்
செப்பிள முலைமுற் செல்வன் சென்றது.

### தலைவியைக் காண்டல்.

தலைவியைக் காண்டல்—என்பது, குழல்வாய்மொழி நாய்ச்சியார் ஒரு பாகரது திருவடி சிந்திப்பார் சிந்தித்த செல்வம் எதிர்வந்து தோன்றுவதுபோல நான் தேடிவரும் அழகுடையாள் இரண்டு மான்போன்ற கண்களும் என்னையே நோக்கி நிற்கக் காணப்பெற்றேனென்று தலைமகன் மகிழாநிற்றல்.

(58) [10]சேனேக்கி செஞ்சொற் குழல்மொழி பாகர்தன் சிந்தனையார்
தானேக் கிய[11]திருத் தானெதி ரெய்துந் தகைமையைப்போல்
நானேக் கியேவந்த நன்னுத லாந்திரு நாட்டமெனும்
மானேக்கி நிற்கவுங் காணப்பெற் றேனிவ் வனந்தனிலே.

---

1 பரிவு-அன்பு. 2 கோவண்டு-சிறந்த வண்டு. 3 ஓவினள்-தூரத்தினள். 4 அரக்காம்நறுந்துணர்—சிவந்த வாசனையுடைய பூங்கொத்து. 5 பூ-அழகு. 6 கன்று-கைவளை. 7 கோ-தேவலோகம். 8 பூமிசை-மனமாகிய தாமரை 9. முப்பொறி-மனம், வாக்கு, காயம். 10 சேனேக்கி-சேல்போன்ற கண்ணையுடையவள். 11 திரு-செல்வம்.

இறைவன் அருள் பெற்றெதிர் எய்துஞ் சிறப்போல்
நிறையவள் சிறப்ப கொடுத்ததை கண்டது.

## கலவியின் மகிழ்தல்.

கலவியின் மகிழ்தல்—என்பது. காணப்பெற்ற தலைமகன் அழுகுவழிந்து ஒழுகாநின்ற [1]கொம்பிற்றேன்போல் வாளை, [2]ஐவாய் அவாவொடு நுகர்ந்தும் தெவிட்டாது [3]புணர்ப்புணர் விரும்பியது, மகா வதிசயமென வியப்புறாநிற்றல்

(59) [4]நாற்பூ தலம்புகழ் சித்ர சபையில் நடம்புரிந்த
[5]காற்பூ மலர்த்திருக் குற்றால நாதர் கனவரையின்
மேற்பூ மலியுங்கொம் பாரமிர் தத்தையென் [6]மெய்முழுதி
னாற்றுணத் தோய்வுண்டு மேதெவிட் டாத ததிசயமே.

எனைப்பின விளைஐ வகைப்புணர் வடைந்தும்
புணர்ப்புணர் விரும்பும் புதுமையை வியத்தல்.

## புகழ்தல்.

புகழ்தல்—என்பது, குற்றால நாயகர் திருமேனிக்கு இனிமை பெற, நறுவியுடபலாக்களினது வேர்க்களையிற் சுளைவிரிந்த கனியினை அபிடேகிப்பது போலுந் தலைமகள் கழுத்தாகிய கமுகினடியிலே சினைத்தெழுந்து பாரித்த செவ்விளநீரினாற் குளிப்பித்து விடாயொழிவித்த புனிதம் மிகவும் உவப்பெனத் தலைமகன் புகழா நிற்றல்.

(60) தேகந்துந் தேயினி தாகக்குற் றாலர்க்குத் தேர்ந்துநறும்
[7]பாகற்கண் [8]டூர்க்கனி யாட்டுதல் போற்சுடர்ப் பைந்தொடிநின்
மோகத்த ழல்கொண்ட நெஞ்சங் குளிர முகமலர்ந்தே
[9]பூகத்தின் றூர்ச் [10]செவ் விளநீரை யாட்டும் புனிதமிக்கே.

[11]களத்திற மாகக் கடவது குறித்தோ
[12]களத்திறங் காட்டினள் காரிகை யென்றல்.

---

1 கொம்பிற்றேன்-மரக்கிளையிலுள்ள தேன். (சுவை மிகுதியுடையது) 2 ஐவாய் அவா-ஐம்பொறி ஆசை 3 புணர்ப்புணர்-மீண்டும் மீண்டும் 4 நாற்பூதலம்-நான்கு வகைப்பட்ட நிலம். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல். 5 காற்பூமலர்-திருவடித் தாமரை. 6 மெய்முழுதினால்-மெய், வாய், கண், மூக்கு, செவி, என்னும் ஐந்து பொறியாலும். 7 பாகற்கண்-பலாவினிடத்து. 8 தூர்-வேர். 9 பூகம்-கமுகு போன்ற கழுத்து. 10 செவ்விள நீர்-செவ்விள நீர் போன்ற கொங்கை 11 களத்திறம்-மனைவி. இதில் எதுகை நோக்கி ரகரம் றகரமாக வந்தது. 12 களத்திறம்—கழுத்தினது நிறம்.

## தலைவியைப் பாங்கியொடு வருகெனப் பகர்தல்.

தலைவியைப் பாங்கியொடு வருகெனப் பகர்தல்— என்பது, குற்றால நாயகருடைய சித்திரா நதி திரிகூடவரையிலே நின்றும் நன்னகர்க்கு முன்னாக வந்து பயிரும் பலனும் விளைவித்து அவ்விடத்துள்ளாரை இரட்சிப்பதுபோல இனிமேல் வருங்காலென்னைக் காப்பதாக நீ பின்னும் நின்னுயிர்ப்பாங்கி முன்னுமாக வருவாயென்று தலைமகன் கூறுநிற்றல்.

(61) [1]செயிர்ப்பா டிலாதவர் குற்றால நாயகர் சித்ரநதி
பயிர்ப்பாங் குறநன் னகர்க்குமுன் னேகிய பான்மையைப்போல்
[2]எயிற்றுர மின்னனைங் கேவரின் நீபின்னும் ஏந்திழையாம்
உயிர்ப்பாங் கிமுன்னு மதாய்வரு வாய்மன [3]தோகையுற்றே.

மதியுடன் பாடுற வகையினு முணரா
மதிநுதற் பாங்கியொடு வருகெனப் பகர்தல்.

## பாங்கிற் கூட்டல்.

பாங்கிற் கூட்டல்—என்பது, ஒரு குழாம், கூட்டத்துக்கு எப்போதும் நீங்காது உயர்ந்த சால்புடையாரை வைத்து வழிபடுவது போல, உன்னை வைத்து அழகு பாராட்டுவதாக, நின்னது ஆயக்கூட்டங்கள் வழிபட அக்கூட்டத்துச் செல்வாயாகெனத் தலைமகன் தலைமகளை விடுத்து நில்லாநிற்றல்.

(62) [4]சங்கத் திரளுக்குக் கற்றோர் தமைமணி தானெனவே
அங்கற் புதமுடன் வைப்பது போலும் [5]அழலுருக்கட்
சிங்கத் [6]ததளினர் குற்றாலர் வெற்பினிற் சென்றழகு
பொங்கத் திரள்மங் கையா[7]ராயம் நீபுகப் பூங்கொடியே.

பொங்கொளி வேலோன் புணர்ந்தபிற் பேணி
[8]அங்கனை தன்னை ஆயத் துய்த்தல்.

இவ்வற்றுள், முன்னைய மூன்றும் சார்தல், கேட்டல், சாற்றல் என்னும் மூன்றிற்கும், பாங்கன் கழறல் முதலாகக் கிழவோன் வேட்கை தாங்கற் கருமைசாற்றலீறாக நான்கும் எதிர்மறைக்கும், பாங்கன் றன்மனத்தழுங்கன் முதலாகத் தலைவன் றனக்குத் தலைவி

1 செயிர்-குற்றம். 2 எயிற்றுரம்—பல்லாகிய முத்து. 3 ஓகை-உவகை. 4 சங்கம்-கூட்டம். 5 அழல்-நெருப்பு. 6 அதள்-தோல். 7 ஆயம்-கூட்டம். 8 அங்கனை-பெண்.

நிலைகூறலிருகப் பதினொன்றும் நேர்தற்கும் தலைவன் சேறல் முத லாகப் புகழ்தலீருக நான்கும் கூடற்கும், தலைவன்றலைவியைப் பாங் கியொடு வருகெனப் பகர்தலும் பாங்கிற் கூட்டலும் ஆகிய இரண்டும் கூட்டத்திற்கும், உரியவாம்.

ஆகச் செய்யுள் (62)

பாங்கற் கூட்டம் முற்றும்.

## பாங்கி மதியுடன்பாடு.

முன்னுற வுணர்தல் குறையுற வுணர்தல்
இருவரு முள்வழி யவன்வர வுணர்தலென்
றொருமூ வகைத்தே பாங்கிமதி யுடன்பாடு. (ந. அ. களவு. 22)

நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்
செய்வினை மறைப்பும் செலவும் பயில்வுமென்
றிவ்வகை யேழினும் ஐயமுற் றோர்தலும்
அவ்வகை தம்மால் ஐயந் தீர்தலும்
மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருட் சொல்லில் நாடலுமென
முன்னுற வுணர்தல் மூன்றா குமமே. (ந. அ. களவு. 23)

### பாங்கி நாற்றங் கண்டையுறல்.

பாங்கி நாற்றங் கண்டையுறல்—என்பது, [1]ஓதியும் நுதலும் பேதைப் பருவத்துக்குத்தக்க நாறாது தலைவன் கூட்டத்தால் மான் மதம் சாந்து முதலியனவும் பன்மலர் விரவி நாறுதலும், தோழி உள்ளத்துள்ளே ஆராய்ந்து, குற்றாலநாயகர் திருநயனமாகிய ஆதித்த சந்நிதானத்துக்கு எதிர்ப்பட்டலது தாமரையினது கன்னிகை அலர்ந்து நாறாது. ஆனலன்றோ இந்தக் [2]கன்னிகைக்கு என் கண் காணாது மணமெய்த வேண்டும். அல்லாதெய்தினதெவ்வாறென்று ஐயமுற்றுப் பேசாதே உள்ளுறுத்தாநிற்றல்.

(63) [3]வன்னி யுருவுடை யார்குழல் வாய்மொழி மங்கைபங்கர்
தன்னிர வித்திருக் கண்காணு முன்னம்பொற் றாமரையின்
கன்னிகை நன்மண மெய்துங்கொ லோவிந்தக் கன்னிகைமீ
தென்னிரு கண்ணையுங் காணு மணமுற்ற தெவ்வகையே.

---

1 ஓதி—கூந்தல். 2 கன்னிகை. இளமைத் தன்மை. அஃதாவது மொட்டுப் பருவம். 3 வன்னி—தீ.

பன்மலர் நாற்றம் தொன்மைய தின்றியித்
தன்மைய தேதெனத் தையற் கையுறல்.

### தோற்றங்கண்டு ஐயுறல்.

தோற்றங் கண்டு ஐயுறல்—என்பது, குற்றால நாயகர் தொண்டராகிய பேரறிஞர்கள் [1]முக்குற்றத்துச் சாராமைபோல ஒன்றோடொன்று [2]துன்றாத கூந்தல், தன்னிலை திரிந்து அத்தொண்டர்கள் உள்ளம் அவர் திருவடிகளில் ஒருங்குதல்போலத் துன்னியது ஏதென்றும், பின்னும், வில்லினது நாணிலேற்றிய அம்புபோலப் பிள்ளைப் பருவத்து வெள்ளை நோக்கின்றி உள்ளொன்று கொள்ள நோக்குங் கண்ணும் நம்மைப் பிரியுந் தனிப்பும், இவளிடத்துத் தோன்றிய தென்னேவென்றும் பாங்கி ஐயுறாநிற்றல்

(64) குன்றாப் புகழினர் குற்றாலர் தொண்டர்முக் குற்றவழி
ஒன்றாமை போலொன்றொ டொன்றாத கூந்தல் உளத்தையவர்
[3]பொன்றாளிற் சிக்கெனப் பூட்டுதல் போற்றுன்னல் பூண்டவிதம்
இன்றாய்ந் தெனவென் றெடுத்துரைப் போமிந்த ஏந்திழைக்கே.

(65) [4]நாணுடன் கொண்ட கணைபோல் விழியு[5]நள் ளாப்பிரிவும்
[6]பூணுடன் கொண்ட முலையாட்குத் தோற்றும் புதுமையென்னே
[7]மாணுடன் கொண்ட மனத்தோர்கண் ணன்றிமற் றுள்ளிலர்க்
குச்
[8]சேணுடன் கொண்டுநின் றோன்றிரி கூடச் சிலம்பிடத்தே.

தன்னிலை திரிவும் கண்ணது பிறழ்வும்
மின்னிடை தோன்ற [9]மெல்லியல் ஐயுறல்.

(பாட்டு இரண்டுக்கும் முன்னம் ஒன்று.)

### ஒழுக்கங்கண்டு ஐயுறல்.

ஒழுக்கங்கண்டு ஐயுறல் — என்பது, ஆயக்கூட்டத்தொடுங் கூடிச் சிற்றிலிழைத்தல், சிறுமணற் சோறடல் முதலிய விளையாட்டுக்களை விளையாடாது இனத்தொடு பொருந்திய மனத்தளாய்த் தெய்வந் தொழாமலும் குற்றால நாயகர் உண்மையின் உணர்வை யுணர்ந்தோரைப்போல இவள் ஒரு கொழுநற்குறித்துப் பெண்தன்மைக் கேற்ப ஒழுகுதலையடைந்தாளென்று பாங்கி ஐயுற்று நின்றது.

---

1 முக்குற்றம்—காமம், வெகுளி, மயக்கம். 2 துன்றாத-நெருங்காத. 3 பொன்றாள்-பொற்றாள் என்பது எதுகை நோக்கி மெலிந்து நின்றது. 4 நாண்-வில்லின் கயிறு. 5 நள்ளா-பொருந்தாத. 6 பூண்-ஆபரணம். 7 மாண்-மாட்சிமை. 8 சேண்-தூரம். 9 மெல்லியல்-மென்மைத்தன்மையுடையவள், அன்மொழித்தொகை.

(66) [1]இனத்தோ டொழுகிப் பல[2]வண்ட லாடி யினத்தொடுநன்
மனத்தோ டொழுகி மதியந் தொழாதுமின் மாமலர்த்தேன்
[3]கனத்தோ டொழுகுந் திரிகூட மேவுமுக் கண்ணின[4]ருற்
பனத்தோ டொழுகன்பர் போலோர் ஒழுக்கம் படைத்தனளே.

பெருணர் வினர்போல் ஓர்மகற் கொழுகும்
நேரிழை குணத்தை நினைவனை யறிந்தது.

## உண்டிகண்டு ஐயுறல்.

உண்டிகண்டு ஐயுறல்—என்பது, குற்றால நாயகர் தொண்டுழைப்பினுலே யோக ஞானத்தை அடைய வேண்டினோர் போனகத்தை ஞானத்துக்கு வரம்பாமென்று ஒறுத்தார். இவள் ஏது பலத்தையடைய வேண்டிப் பண்டையிற் குறைந்த உண்டியளானளெனப் பாங்கி ஐயமுற்றது.

(67) வானக வேந்தனும் போற்றுங்குற் றால வரதரன்பால்
தானகத் துள்ளும் பலன்கைக் கொளவும் தவம்புரிந்தோர்
[5]போனக ஞான [6]வரம்பென் றொறுத்தனர் போலுமுண்டி
கானக மாது மொறுத்தா ளெனபலன் கைக்கொள்ளவே.

உற்றநோய் நோன்ற உயர்தவத் தினர்போல்
மற்றிவ ளுண்டி மறுத்தல்கண் டையுறல்.

## செய்வினை மறைப்புக் கண்டு ஐயுறல்.

செய்வினை மறைப்புக் கண்டு ஐயுறல்—என்பது, குற்றால நாதர் தேவியுடனே வாதாடல் செய்யும்போது, வெற்றிகள் தோல்விகள் தேவர்கட்குத் தெரியாவண்ணம் நின்று நடித்தார், அக்காலத்தில் திருவள்ளுவ நாயனர் ஒருவரே தமக்குண்மையாகிய தொண்டராய்க் கண்டார் என்பதற்காக இவள் பண்டை விளையாட்டின்றி இப்போது விளையாடுதலையும் பிறர்க்குப் புலப்படாது செய்தது, தனக்கு யாரை அன்பராக்குதற்கென்று பாங்கி ஐயுற்று ஆராயாநிற்றல்.

---

1 இனம்—ஆயக்கூட்டம். 2 வண்டல்—மகளிர் விளையாட்டு. 3 கனம்—பெருக்கு. 4 உற்பனம்—உள்ள தன்மை. 5 போனகம்-சோறு. 6 வரம்பு—தடை.

(68) [1]சேதா [2]டகப்பதக் குற்றால நாதர்முன் தேவர்தொழ
வாதாடல் தன்னை மறைத்தா டினார்[3]திரு வள்ளுவரப்
போதாடல் காணன்ப ராகஉண் டாட்டுப் புகல்மறைத்தல்
தாதா டலர்க்குழ லாரன் பராகவிச் [4]சங்கையென்னே.

அந்நாட் [5]பண்ணை யாரால் மறந்ததென்
றிந்நாட் பண்ணைகண் டிருளை ஐயுறல்.

## செலவு கண்டு ஐயுறல்.

செலவு கண்டு ஐயுறல் — என்பது, முற்றுணர்ந்தோர்கள் முதல் வட [6]பகீரதியுள்ளோர்களும் மூர்த்தி தலம் தீர்த்தம் மூன்றிலும் மிக்கதென்று திரிகூடத்தைத் தெரிசிக்கப் பெற்றார். இந்தவரையிற் பிறந்த தலைமகளானவள் பொன்னூசலைவிட்டு மனதூசல் மேற்கொண்டு முன்போல வேண்டியவாறு நடவாமல் மெல்லென நடந்து ஓரோரிடத்துச் சேறலைக் கண்டு பாங்கி ஐயுறுநிற்றல்.

(69) பெரியோர் களும்வட காசியுள் ளோரும் பிரானன்னகர்த்
திரிகூட மிக்கென்று காணப்பெற் றாரிச் செழும்பொருப்புக்
குரியாளின் றாடிய [7]ஊசல்விட் டேமன தூசல்கொண்டு
தரியாது லாவிச்சென் றேபுறம் நோக்கித் தனிப்பதென்னே.

அல்லியங் கோதைமுன் செல்லல்போற் செலாது
மெல்லென ஓரிடம் மேவல்கண் டையுறல்.

## பயில்வுகண்டு ஐயுறல்.

பயில்வுகண்டு ஐயுறல்—என்பது, கருத்திலே ஓரெண்ணத்தையடைந்து அந்த எண்ணம் முகத்திலே காட்டுமென்றெண்ணியோர் செவிலி முலையிடைத் துயிலவேண்டாது, தலைமகள் வேறோரிடத்துச் சென்று நின்று திகைக்கலுற்றாளெனப் பாங்கி ஐயுறுநிற்றல்.

(70) மருத்திருப் பங்கயஞ் சேர்வாவி நன்னகர் மன்னர்விடம்
அருத்தின ராந்திருக் குற்றால நாதர் அணிவரைமேற்

---

1 சேது-சிவப்பு, 2 ஆடகம்-பொன். 3 திருவள்ளுவர் கண்டமை இப்பாட்டாலறிக.
"பூவில் அயனும் புரந்தரனும் பூவுலகைத்
தாவி அளந்தோனும் தாமிருக்க — நாவின்
இழைநக்கி நூல்நெருடும் ஏழைஅறி வேனோ
குழைநக்கும் பிஞ்ஞகன்றன் கூத்து."

4 சங்கை—சந்தேகம், 5 பண்ணை-மகளிர் விளையாட்டு. 6 பகீரதி-கங்கை, 7 ஊசல்-ஊஞ்சல்.

[1]கருத்தினி லெண்ண முகத்தெய்து மென்று கருத்திலுற்றே
[2]திருத்தின மோரிடத் தேசென்று நின்று திகைப்பதுவே.

[3]கோடாய் முலைத்துயில் கொள்ளா திறைவியோர்
பாடே நின்று பயில்வுகண் டையுறல்.

## அவ்வகைதம்மாலையந்தீர்தல்.

அவ்வகைதம்மாலையந்தீர்தல்—என்பது, குற்றால நாயகரைச் சிந்தித்து முற்றுப்பெற்ற அன்பர்கள் சொல்லும் பொருளும் அற்று நிட்டை கூடுதல் போலப் பேதைப்பருவங் கடந்து முதுக்குறைப் பருவம் வந்து நேர்ந்து உள்ளொன்றுகொள்ளுங் கண்ணுடையாளா ளென்று பாங்கி புணர்ச்சியுண்டென்பதனைத் தெளிந்துணரா நிற்றல்.

(71) [4]ஊதைப் புழைக்கை யுரித்தகுற் றாலரை உள்ளுமன்பர்
[5]காதைப் பரப்பற்று மெய்யறி வெய்துங் கருத்தினைப்போல்
பேதைப் பருவங் கடந்து [6]முதுக்குறைப் பேரறிவு
கோதைக் குழலிக்கு வாய்த்தன வாங்கண் குழைபுக்கதே.

[7]எழுவகைத் தையமுற் றினிதுணர் பாங்கி
முழுமக ளாயினள் மொய்குழ லென்றது.

## மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது பிறைதொழுகென்றல்.

<u>மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது பிறைதொழு கென்றல்</u>—என்பது, எழுவகைத்தானும் ஐயமுற்றுணர்ந்து ஐயந் தீர்ந்த பாங்கித் தலைவியை ஆராயுமிடத்துந் தன் மனத்து நிகழ்ந்த வற்றை மறைத்துக் கேட்பத் தொடங்கி விண் முழுவதுக்கும் அரசாகியும் புரந்தரனுடைய தேவியானவள், அவட்கொரு பெயர்க்குடியாகச் சசி என்னும் நாமத்தைத் தரித்துக் கொண்டாள். ஆனதாற் சந்திரக் கடவுளை அநுதினமும் கைதொழுது வருவாயெனச் சொல்லி அவளது புணர்ச்சி நினைவு அறியாநிற்றல்.

---

1 அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம், கடுத்தது காட்டும் முகம் (குறள்) 2. திரு-இலக்குமி போன்ற தலைவி. 3. கோடாய்—செவிலித்தாய் 4. ஊதைப் புழைக்கை—காற்றுப்புகும் துளையையுடைய துதிக்கை. இது யானைக்கு ஆகு பெயர். 5. காதைப் பரப்பற்று—(வாசாம் அகோசரமாய்) சொல்லுக்கு எட்டாது. 6. முதுக்குறை—அறிவு மிகுதி. 7. எழுவகைத் தையம்-"நாற்றமுந் தோற்றமு மொழுக்கமு முண்டியுஞ், செய்வினை மறைப்புஞ் செலவும் பயில்வு மென், றிவ்வகை யேழினு மையமுற் றேர்தலும்" (ந. அ. களவு. 139)

(72) நிரந்தரம் விண்ணுக் கரசா கியுமங்ங னேபணிவாய்ப்
புரந்தரன் தேவி சசியெனு நாமம் புகலப்பெற்ருள்
வரந்தரும் நாயகர் குற்ருல நாதர் மணிவரைமேற்
[1]கரந்தினம் கூப்பிநிற் பாயணங் கேதண் கதிர்ப்பிறைக்கே.

[2]சசியென வுயர்ந்த [3]சசியினைப் போல
[4]நிசியின் கடவுளை நீபணி என்றது.

### ஐயங்கரந்து தையலை வினுதல்.

ஐயங்கரந்து தையலை வினுதல்—என்பது, பிறை தொழு கென்னுமிடத்துத் தொழாமற் றலைசாய்த்து நாணி நிலங்கிளையா நிற்பக்கண்டு, இன்னும் இவள் நினைவின்வழியே யொழுகி யறிவோ மென்று, விளையாடிவரப் போவென்னப், போய்த், தலைமகற் றலைப் பெய்து வரக்கண்டு, நீ ஆயக்கூட்டத்தாருடனுங் கூடி அவர் பொன் னூஞ்சல்மேல் வைத்து விரைவுடனுட்ட அதிலிருந்து விளையாடினையோ? அல்லது பந்தாடி நின்றனையோ? அதிசீதளமாகிய சுனை நீராடினையோ? மேனி முழுதும் வாட்டத்தை யடைந்தனையே, யான் என்னென்று சொல்வேனெனப் பாங்கி வினவாநிற்றல்.

(73) [5]வீடினை யன்பர்க் கருளுங்குற் ருலர் வியன்[6]கிரிமேற்
கூடிநன் மாத ருடனூசல் மேல்விசை கொண்டுவிளை
யாடினை யோபந் தடித்தனை யோசுனை யாடினையோ
வாடினை மேனி யணங்கேயென் னென்று வழுத்துகவே.

வண்டலின் பொருட்டால் வாடினை மேனியென்
றெண்டொடி யினைமறைத் தொருமொழி கேட்டல்.

### தலைவிகரந்துரைத்தல்.

தலைவிகரந்துரைத்தல்—என்பது, [7]அத்தசந்திரனையும் அதற் குப் பகையாகிய சர்ப்பங்களையும் ஒன்றுபட முடிமேற் றரித்தருளிய குற்ருல நாயகர் கருணையினுல், அப்படி வேங்கைப்பூவும் வண்டினங்க ளும் எனது கூந்தலில் ஒத்திருக்கும்படியெண்ணி, உன்னைத் தவிரக் குங்குமக் கடலிற் குளித்துவர, நித்தலுஞ்சென்றுவரும் விரதசாதனை யால் மெலிந்தேனெனத் தலைமகள் சொல்லா நின்றது.

---

1 கரம்தினம்-கையை நாடோறும். 2 சசி—சந்திரன். 3 சசி—இந்திராணி. 4 நிசி யின் கடவுள்—சந்திரன். 5 வீடினை-வீட்டினை யென்பது எதுகை நோக்கி வீடினை என வந்தது. இனை (வருந்தும்) அன்பர்க்கு வீடு அருளும் எனக் கூட்டிப் பொருள் கூறலுமாம் (வீடு-மோக்ஷம்) 6 கிரி—மலை. 7 அத்தசந்திரன்—பால சந்திரன்.

(74) [1]பணிமதி [2]ரண்டுங்குற் றாலர் சடைவைத்த பான்மையினாற்
[3]கணிமலர் வண்டிரண் டுங்குழ லொவ்வக் கருத்திலெண்ணி
மணியொளி ருங்[4]குங்கு மக்கட லாடவு மாதுனையன்
றணியுற வேதினஞ் சென்றே யுடல்மெலி வானதுவே.

அங்குள மெலிவு வினையதற் கிறைவி
குங்குமக் கடல்நீர் குளித்தனோன் புரைத்தல்.

## கரவு நாட்டம்.

கரவுநாட்டம் — என்பது, நீ குடைந்தாடும் சுனைநீர் செம்பொன் மேனியைப் பசும்பொன் மேனியாக்குவித்தால் அது பரிசனவேதிக்கு ஒப்பாகுமே, உனக்கு எங்ஙனம் வாய்த்ததென்று கவர் பொருள்கோளாகக் கேளாநிற்றல்.

(75) இகழாது நீகுடைந் தாடுஞ் சுனையிந்தக் காலத்திலே [னைத்தால்
திகழ்[5]சாத ரூபப்பொன் மேனியுங் [6]கிள்ளைச் சிறைப்பொன்
அகழ்வாவி சூழ்நன் னகர்வாழ்குற் றாலர்அணிவரையின்
மகளே [7]பரிசன வேதியொப் பாமெங்கு வாய்த்ததுவே.

உருப்பே தித்த வொண்சுனை அரிதெனக்
[8]கருப்பன மொழியாள் கரவு நாடியது.

## நாண நாட்டம்.

நாண நாட்டம்—என்பது, குங்குமக்கடல் நீ ஆடியது நிசமானால் கொங்கையிற் புனைந்த குங்குமகளபங்களும் வேறாம். கண்ணுக்கெழுதிய மையும் பிறிதாம். கூந்தலிற் சூடிய மாலையும் அப்படித் தானேயாமெனப் பாங்கி கவர்பொருட் சொல்லாகத் தலைவிக்குச் சொல்லி நாணம் நாடாநிற்றல்.

(76) தனக்குங் குமங்களும் வேறுங்கண் ணஞ்சனம் தான் புறம்பாங்
கனக்குங் குழற்றொங் கலும்புறம் பாங்கை தொழத்துதிக்க
எனக்குங் குலதெய்வ மானகுற் றாலர் இயல்வரைவாய்
வனக்குங் குமக்கட லாடின் நிசமிது மாதரசே.

---

1 பணி—அரவு. 2 ரண்டு-இரண்டின் திரிபு. 3 கணி-வேங்கை. 4 குங்குமக் கடல்—இதனைப் பொங்குமா கடல் என்பர், திருக்குற்றாலத் தலபுராண நூலார். 5 சாதரூபம்-நால்வகைப் பொன்னின் ஒன்று. 6 கிளிச்சிறை-இதுவும் அது. 7 பரிசன வேதி-கீழ்த்தரமான லோகங்களைப் பொன்னுக்கு மருந்து. 8 கரும்பு அன்ன—கருப்பன என வலித்தல் விகாரமும் இடைக்குறையும் பெற்றது.

குங்குமக் கடல்நீர் குங்கும மழிக்குமென்
[1]றங்கனை யவளுக் கருளா ளுடல்.

## தகையணங்குறுத்தல்.

தகையணங்குறுத்தல்—என்பது, நின்னைப்போல் ஒரு தகையுடையாள் இங்கொருத்தியுண்டு. அவட்கு நெஞ்சினது பயமும் அணிவகைகளில் வெறுப்பும் கண்ணினது கூர்மையும் இல்லை. அஃதுண்டாகில் உனக்குச் சமானிக்கலாமென்று பாங்கி பொய்யினும் வழிநிலை பிழையாது கவர் பொருளாக வேறுபடுத்துக் கூறுநிற்றல்.

(77) நச்ச ரவப்பணி பூண்டகுற் றாலத்து நாதர்வெற்பில்
கச்சணி பூண்முலை நின்போலு மிங்கொரு கன்னிகையுண்
டச்ச முறுநெஞ் சலங்கரி யாநினை வம்பெனுங்கண்
மிச்ச மிதுவுனக் கல்லா லுனையொக்கு மெல்லியலே.

உன்னது தகையி லொருத்தியுண் டவட்கு
கின்னது குணங்குறி யிலையென நிகழ்த்தல்.

## நடுங்க நாட்டமறுத்தல்.

நடுங்க நாட்டமறுத்தல்—என்பது, நீயென்னைப் பார்த்து நடுக்கங்கூறும்படி ஊருக்கு நடுவே ஒருகளிறு வந்ததாகச் சொன்னாய். அது நிசமே. அப்படி ஊர்ச் சமீபத்து ஒரு மதயானை வந்துபோமானால் உளத்தில் யாருக்கும் பயமுண்டாமே அல்லாமல், வேறோர் அச்சமில்லையென்று பொய்யினும் வழிநிலை பிழையாது கவர்பொருட் சொன்ன பாங்கிக்கு மெய்யினும் வழிநிலை பிழையாது தலைமகள் கவர்பொருட் சொல்லாநிற்றல்.

(78) பாருக்கெல் லாமுத லாயகுற் றாலர் பனிவரைமேல்
வாருக்கு மீறுந் தனத்தாய்இங் கோர்தந்தி வந்ததென்றாய்
[2]ஊருத் தலத்தொரு [3]வேழம்வந் தேகில் உளத்திலச்சம்
ஆருக்கு முள்ள தலவோவல் லாலில்லை அச்சங்களே.

ஆரணங் கச்ச நாடுதற் கணங்கு
[4]வாரணங் கண்டு மருண்டதே கூறல்.

இவ்வளவும் மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது பல்வேறு கவர்பொருட் சொல்லி நாடல். இதுவும், அகத்திணைச் சிதைவு. பெருந்திணைப் பாற்படும். கைக்கிளை பெருந்திணை யகப்புறமாகும். மூன்றுறவுணர்தல் முடிந்தது.

---

1 அங்கனை-பெண். 2 ஊரு-தொடை. 3 வேழம்-யானை, கரும்பு. இதில் ஊர்ச் சமீபத்தில் யானை வந்து சென்றால் எனவும், தொடைப் பக்கத்தில் கரும்பு வந்து சென்றால் எனவும், கவர்பொருள்படக் கூறியவாறு காண்க. 4 வாரணம்-யானை.

# குறையுறவுணர்தல்.

பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுத்தோன்
கண்ணியுந் தழையு மேந்தி நண்ணி
ஊர்பெயர் கெடுதியோ டொழிந்தவும் வினவுழி
யாரே இவர்மனத் தெண்ணமி யாதெனத்
தேர்தலு மெண்ணந் தெளிதலு மெனவாங்கு
ஓரிரண் டாகுங் குறையுற வுணர்தல். (ந. அ. களவு 24).

## பெட்டவாயில்பெற்றுச் சேறல்.

பெட்டவாயில்பெற்றுச் சேறல்—என்பது முன்னுலியற்கைப் புணர்ச்சி கூடிப் பிரிந்துழி ஆயக் கூட்டங்கள் போற்றச் சென்றவள், கண்ணருளாலறிவிக்க, அவள் காணுது நாம் அயல் நின்று கண்ட அவ்வாயில்முன் இப்போதெதிர்ந்து நமது கருத்திலுள்ள குறை யெல்லாம் சொற்பொருந்திய நாவினுற் சொல்லியுணர்த்தவே அஃதறிந்து இரங்காநிற்கும். சென்று சொல்வாயாக நெஞ்சமே! எனத் தலைமகன் தன்னெடு தானே கூருநிற்றல்.

(79) முன்னுளிற் கூடிப் பிரிகின்ற காலத்து மொய்குழற்கண்
தன்னு லறிவித்த வாயில்முன் னே[1]முத் தமனியக்கோட்
டொன்னுரை வென்றகுற் ருலர்வெற் பிற்கருத் துள்ளவெலாஞ்
[2]சொன்னுக் குறையுறவேயுணர் வாள்சென்று சொல்வைநெஞ்சே.

பிறைநுதற் கண்ணுற் பேணிய வாயில்முன்
குறையுணர்த் துதற்குக் கோமகன் சென்றது.

## இரவு வலியுறுத்தல்.

இரவு வலியுறுத்தல்—என்பது, பொறிவழிப் புலன்களிற் செல்லாது முதுநூலுணர்ந்து அறிவுடையபேர்கள் குற்றுல நாயகர் திருவடியின்பத்தையடைந்து உய்வதுபோலும், தலைமகள் இன்பக் கடலின் மூழ்கிக் குளிக்கும்படிக்கு அவள்தன்னுடைய பாங்கியி னது சகாயத்தைப் பெறவேண்டி மனந்தெளிந்தேனெனத் தலைவன் தெளியா நிற்றல்.

1 முத்தமனியக் கோடு-மூன்று பொன்னுலாகிய மதில், திரிகூட மலையுமாம்.
2 சொல்+நா-சொற் பொருந்தும் நாக்கு.

(80) பொறிவழி சேறலின் றேமுது நூலின் புலன்வழிசென்
றறிவுடை யோர்கள்குற் றலர்பொற் றளின்பத் தாலுய்யல்போல்
[1]முறிநிறத் தாளின்ப [2]வாருதி மூழ்கி முயங்குதற்கே
செறிகுழற் பாங்கிதன் னன்பே பெறமனந் தேர்ந்தனமே.

அன்புறு தலைவியின் படைதலை வேண்டி
இன்புறு தோழிமுன் னிரக்கும் வலியுறுத்தல்.

**பெட்டவாயில் பெற்று இரவு வலியுறுத்தோன் கண்ணியும் தழையும் ஏந்திவந்து ஊர்வினுதல்.**

பெட்டவாயில் பெற்று இரவு வலியுறுத்தோன் கண்ணியும் தழையும் ஏந்திவந்து ஊர்வினுதல்—என்பது, இங்ஙனம் வந்தவுடனே நின்னது தோற்றப் பொலிவு கண்டு உனக்குக் குடியிருப்புத் திருமாலது திருமார்பாகவேணும் என்று குறித்து நின்றேன், அது சுடுநிலத்து [3]வனவாசம் பொருந்தியது. நீ குளிர்ந்த வனவாசமாகிய திரிகூடவரையின்கண் நிற்கிறாய். ஆனதால் உனது ஊர் பதி இன்னதெனச் சொல்வாய் எனத் தலைமகளை வினவாநிற்றல்.

(81) வடிவேபொன் மாதுக் கிசைகுத லான்முன மாதுனக்குக்
குடியா யது[4]நெடு மாலுர மென்று குறித்திருந்தேம்
[5]படியேழும் போற்றிய குற்றால நாதர் [6]பனிவரைமேற்
[7]பிடியேயிந் நாளுமக் கெவ்விட மீதென்ப பேசுகவே.




[8]கார்நி றத்தவன் கமழுர மன்றநின்
னூர்த வத்தினை யுரைத்தி யென்றது.

**பெயர் வினுதல்.**

பெயர்வினுதல் —என்பது, ஏதிலனுதலால் ஊர் வினவியதென்றறிந்து ஒரு மொழி பேசாதிருந்தாலும் பெயர்வினவிய விடத்துப் பெயர் சொல்லலாமே; நினது பெயர் இந்திராணியோ? திருவோ? இரதியோ? கலைமகளோ? இவர்கள் நாமதேயம் உனக்கொவ்வாமையால் நிசப்படவில்லை. ஒரு பற்றுக்கோடில்லாத தமியேனுக்குப் பெயர் இன்னதென்று சொல்வாயெனத் தலைமகன் பெயர் கேட்டு உறவு வேண்டா நிற்றல்.

---

1 முறிநிறம்-தளிர்போன்ற நிறம். 2 வாருதி-கடல். 3 வனவாசம்-துளசி மணம். 4 நெடுமாலுரம்-நெடிய திருமாலின் மார்பு. 5 படிஏழும்-பூவுலகம் ஏழும். 6 பனிவரை-குளிர்ச்சி உடைய மலை. 7 பிடி-பெண் யானை போன்றவள். 8 கார் நிறத்தவன்-திருமால்.

(82) உயரதி ரூபத்தி னிந்திராணி யோதிரு வோமுகப்பங்
கயரதி யோநற் கலைமக ளோவெழிற் கன்னிகைநின்
பெயரதி யாதுரை யீர்தமி யேற்குப் பிணைத்தகொன்றைப்
புயரதி ருந்தீநஞ் சுண்டகுற் றாலர் பொருப்பிடத்தே.

குறித்தன பெயர்நிற் கொவ்வா மையினால்
மறுத்துநின் னதுபெயர் வழுத்துக வென்றது.

### கெடுதியுட் கலைமான் வினாதல்.

கெடுதியுட் கலைமான் வினாதல்—என்பது, உறவுவேண்டிப் பெயர் கேட்டதென்றறிந்து, ஏதிலனென்னப் பேசாதிருந்தாலும் வேட்டையிற் கண்டவை சொல்லலாமே; முந்தவே மானதொன்று செல்லவும், அதன் பின்னே விரும்பிக்கொண்டு அம்பு தைத்த புண்ணுடனே ஒரு கலையானது சென்றதுண்டோ? எனத் தலைமகன் கெடுதி வினவாநிற்றல்.

(83) பன்[1]னவ் வியாயெழு தோற்றத்து நின்ற பரனடியார்
தன்[2]னவ் வியந்தவிர் குற்றால நாதர் சயிலமின்னே!
முன்[3]னவ் வியொன்று செலக்கணை தைத்த முனையுங்கொண்டே
பின்[4]னவ் வியோர்கலை சென்றதுண் டோநும் பெரும்புனத்தே.

கலையொரு மான்பின் கணைபடு புண்ணொடு
மலையிடை நின்பால் வந்தது ண் டோவெனல்.

### ஒழிந்தவற்றும் ஒழியாமை வினாதல்.

ஒழிந்தவற்றும் ஒழியாமை வினாதல்—என்பது, ஊர் பேர் சொல்லாதொழிந்தாலும் கண் பிழைத்து வந்த மானொடு கலைவினாதற்குப் பேசலாமே, அதற்கும் வாய்திறந்திலை. வாய்திறந்தால் வாயினதமிர்தம் சிந்திப்போ மென்றோ? என்னவோ நினது திருவுள்ள மெனக்கு அறியப்படுவதாயிருக்கவில்லை. எனத் தலைமகன் மொழியாமை வினாதல்.

(84) நறுமலர்க் கோதையிங் கேயான் பலவும் வினவுதற்கோ
மறுமொழி யீதென்று பேசுகின் றாற்செய்ய வாய்க்குமுதத்
துறுகின்ற தெள்ளமிர் தஞ்சிந்தி டாதென்ன வோநின்னுள்ளம்
குறுகுங்[5] குடமுனி போற்றுங்குற் றாலர்தங் குன்றினிலே.

---

1 அவ்வி—ஆன்மா. 2 அவ்வியம்—பொறாமை. 3 நவ்வி—மான். 4 நவ்வி—தளர்ந்து. 5 குடமுனி—அகத்தியர்.

வாய்திறந் துரைக்கின் மலர்வா யமிர்தம்
போய்விடு மென்றோ புகலா தென்றல்.

## ஆரோ? இவர் மனத்தெண்ணம் யாதெனத் தேர்தல்.

ஆரோ? இவர் மனத்தெண்ணம் யாதெனத் தேர்தல்—என்பது, கண்ணியுந் தழையுமேந்திக் கரந்தமொழியினால் தன் கருத்தறிவித்து மேனி வாடியவனைப் புனத்திடை நீங்காது கெடுதி வினவிப் போய் கூறுநின்ற இவன் யாவனோ? இவன் மனத்தெண்ணம் நமது சிற்றூரின்கண் ஒரு மாதினுள்ளதோ? எப்படியோ? தெரியவில்லையென்னப் பாங்கி மனத்துள்ளே தேர்ந்துணரா நிற்றல்.

(85) வரத்தின ராந்திருக் குற்றால நாதர் வரையிடத்தே
இரத்தலி லேநங் கருணை பெறத்தெளிந் தேசிலவுந்
திரத்திலிவ் வண்ண னுரைத்து வினைதல்சிற் றூரெனுநம்
புரத்திலோர் மாதெண்ண மோயா திவர்மனம் பூண்டதுவே.

இரவா திரத்தலும் இலாதவை வினைதலும்
திரமாய்ப் பாங்கி தேர்வுற நிற்றல்.

## எண்ணந் தெளிதல்.

எண்ணந் தெளிதல்—என்பது, குற்றால நாயகர் திருவடிப்பேறு கூடுமளவும் முத்தர்கள் மூன்று பதமு மூற்றுப்பெற்று நாலாம் பதத்தையடைந்து சமாதி கூடி முத்தியை யடைவதுபோலத் தலைமகன், ஊர், பேர், கெடுதி, ஒழிந்தவும் வினவியதெல்லாம் தலைமகளின் பதத்தையடைவதற்கென்றே பாங்கி யெண்ணந் தெளியா நிற்றல்.

(86) பெருமையி னன்பர்குற் றாலர்பொற் பாதத்தை பெற்றிடுநாள்
வருமள வும்பதம் [1]நான்கையும் வேண்டி வருந்துதல்போ
லொருகலை [2]நவ்வியை நவ்வியு மேசெல்கிற் றேரெனவுந்
திருநல மெய்தும் பொருட்டா லிவர்பல சிந்தையுமே.

பலவினு யதுவும் பார்த்திப னிறைவி
நலனுற வென்ன நன்னுதல் தெளிதல்.

பெட்டவாயில்பெற் றிரவுவலி யுறுப்பினும் நீறிற் குறிப்பின் நிரம்பக் கூறித் தோழியைக் குறையுறும் பகுதியு முளவே. குறையுறவுணர்தல் முடிந்தது.

---

1. பதம்நான்கு - சரியை, கிரியை யோகம், ஞானம் என்னும் நான்கு.
2. நவ்வி - மான்.

## இருவரு முள்வழி யவன்வர வுணர்தல்.

கையுறை யேந்திவர் தவ்வகை வினவுழி
எதிர்மொழி கொடுத்தலும் இறைவனை நகுதலும்
மதியி னவரவர் மனக்கருத் துணர்வுமென்
றிருவரு முளவழி யவன்வர வுணர்தல்
ஒருமூன் றுகுந் தெரியுங் காலே. (ந. அ. களவு. 25)

### இருவரு முள்வழித் தலைவன் கையுறையேந்தி வருதல்.

இருவரு முள்வழித் தலைவன் கையுறையேந்தி வருதல்—என்பது, குணத்தினலும் குறிப்பினலுங் குறை யுணர்வித்துச் சென்ற தலைமகன் பிற்றை நாள் வந்து ஏகநாயகராகிய குற்றால நாயகர் உயிர்களை உய்விக்கப் [1]பஞ்ச கிருத்தியம் நடத்தவேண்டி [2]நிட்கள [3]சகளமாய்த் திருமேனிகொண்டதுபோல இவர்களுயிர் ஒன்றுயிருந்தும் உருவிரண்டாக இவ்[4]விதணிருந்தது நம்மையுண்டாக்கி அந்தப் பலனை அடைவதாக என உட்கொள்ளாநிற்றல்.

(87) ஒருமுத லாகியுங் குற்றாலர் [5]வையமுண் டாக்குதற்கே
இருவுரு வாகினர் தாமிவ ரோருயி ரென்பதுமாய்த்
திருவுரு வேயிரண் டுற்றிதண் மேவுஞ் செயலவைபோல்
பருவ முட்டன்நம்மை யுண்டாக்க வேண்டும் பலன்குறித்தே.

ஏக வுயிரா மிவரித ணிருவுரு
வாகவர் தநநமை யாள்கவென் றறிதல்.

### அவ்வகை வினவுழி வேறும் வினுதல்.

அவ்வகை வினவுழி வேழும் வினுதல்—என்பது, மத்தகத்திலே ஏவப்பட்ட அம்பு தைக்கப் புண்பட்டு அந்த விதனத்தாற் கண்ணீர் வார்ந்தொழுகிக் கவுளின் வழியே வழிந்தோட நுங்கள் புனத்தொரு களிறு வந்ததுண்டோ? எனத் தலைமகன் அவ்விருவர் முன்னும் வினவா நிற்றல்.

---

1 பஞ்சகிருத்தியம்—படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என ஐந்து. 2 நிட்களம்—வடிவில்லாதது. 3 சகளம்-வடிவுள்ளது. 4 இதண்-பரண். 5 வையம்-பூமி.

(88) [1]நத்தகட் டிற்கருக் கொண்டுகச் சித்ர நதித்துறைவாய்
முத்தகற் றிக்கதிர் வீசுங்குற் றாலர் முகில்வரையீர்
மத்தகத் தேஅம்பு தைக்கப்புண் ணீர்கள் வடிந்துகதுப்
புத்தகச் செல்வுற்று வந்ததுண் டோவெப் புகர்க்களிறே.

கண்புனல் சொரியக் கணைகள் பட்டுருவிப்
புண்படு வேழம் புகுந்ததுண் டோவெனல்.

### எதிர்மொழி கொடுத்தல்.

எதிர்மொழி கொடுத்தல்—என்பது, உன்னிடத்து வருதலை நோக்கிக் கெடுதிசெய்யாய் என, என் புனமான் வந்ததன்றி என்னிடத்திலே கெடுதியாயொரு கலைமானின் பின்தொடர்ந்து வரவில்லை. ஈயக் குறைவில்லாத நீவிர் பெண்களிடத்துக் [3]கலைகெட்டு வந்தாற் சங்கையல்ல என்று பாங்கி ஒருவார்த்தை பேசாநிற்றல்.

(89) உன்னிடத் தேகலை நாடியென் மான்வந்த துள்ளதல்லா
லென்னிடத் தேகலை மான்பின் வரவில்லை யே[4]வன்றொண்டர்
மின்னிடத் தேகிய தூதர்குற் றாலர்வெற் பின்மடவார்
தன்னிடத் தேகலை கெட்டுவந் தாலென்ன சங்கையதே.

தழையுடை யார்முன் கலைபல கேட்டல்
பிழையெனப் பாங்கி பிறித்துரைத் திகழ்தல்.

### இறைவனை நகுதல்

இறைவனை நகுதல்—என்பது, தலைவி இவையெல்லாம் அறியாதவள் போலிருக்கப் பாங்கியும் அறியாதவளாகத் தானே யொப்புக்கொண்டு அவனைப் பார்த்து இந்தத் தலைவரானவர், ஆம்பலென்றும் கலையென்றும், சார்ங்கமென்றும் தேடிவந்தால் அதற்கிடமாகிய நீர்த்தடாகம், பூரணசந்திரன், படைத்தலைவர் கைத்தலம், இவைகளிற் பாராது நம்மைப் பார்த்துக் கேட்டது ஏதென நகையாநிற்றல்.

(90) பூம்பொழில் சூழ்திருக் குற்றல நாதர் பொருப்பிடத்தே
தேம்பு கொடிச்சிற் றிடையணங் கேயிவர் தேடிச்[5]செவ்வாய்
[6]ஆம்பல் [7]கலையது [8]சாரங்கம் நாடிவந் தாலி[9]லஞ்சி
பாம்பு பகைமதி வீரர்கை தன்னிலும் பார்த்தற்கென்னே.

---

1 நத்து—சங்கு. 2 அகடு-வயிறு. 3 கலைகெட்டு—கலைமானைத் தவறவிட்டு, வஸ்திரத்தை இழந்து. 4 வன்றொண்டர்—சுந்தரமூர்த்தி நாயனார். 5 செவ்வாய்—நேரே செம்மையாக, சிவந்தவாய். 6 ஆம்பல்—அல்லி, யானை. 7 கலை—கலைமான். சந்திரக்கலை. 8 சாரங்கம்—மான், வில். 9 இலஞ்சி-தடாகம்.

வெஞ்சம நிலைமை மிடத்திறை வினுதல்
தஞ்சமென றிறைவிமுன் தையல் நகைத்தது.

### மதியினுலவரவர் மனக்கருத்துணர்தல்.

மதியினுலவரவர் மனக்கருத்துணர்தல்—என்பது, நெல்லைப் பயிர்செய்விக்கப் பயிராகிப் பருவம் வந்து சினைத்துக் கதிர்வாங்கும் போது, முன் விதைத்த வித்து இன்னதென்று தோன்றுவதுபோல, முன்னுள்முதல் இந்நாள்வரை இவர்கள் உள்ளக்களவெல்லாம் இவரொருவர் வார்த்தையிலே தெரிந்ததென்று பாங்கி மதியினுலுடன் படாநிற்றல்.

(91) [1]வாலிபந் தன்னை யுரித்தோர்குற் றூலர் வரையில்வளர்
சாலிவித் தீனவித் தின்னதென் றெண்ணுந் தகைமையினைப்
போலிரு வோர்மனக் கள்ளத்தின் வேட்கைப் புலன்றனையில்
பாலிவர் வாக்கினி லெய்தக்கண் டேன்மொழி பற்றியுமே.

வாக்கினி லிருவர் மனக்கள வுணர்ந்து
நோக்கிய பாங்கி நுண்மதிப் படுத்தல்.

ஐயமுற்றோதல் முதலாக மதியினுல் அவரவர் மனக்கருத்துணர்தலீருகச் சொல்லப்பட்ட கிளவியெல்லாம் பாங்கிமதியுடன் பாட்டது விரியாமென்றவாறு.

பாங்கி மதியுடன் பாடு முற்றும். (ஆகச்செய்யுள் 91)

## பாங்கியிற் கூட்டம்.

இரந்துபின் னிற்றல் சேட்படை மடற்கூற்று
மடல்விலக் குடன்படல் மடற்கூற் றொழிதல்
குறைநயப் பித்தல் நயத்தல் கூட்டல்
கூடல் ஆயங் கூட்டல் வேட்டலென்
றீரறு வகைத்தே யிருளையிற் கூட்டம். (ந. அ. களவு. 27)

தலைவ னுட்கோள் சாற்றலும் பாங்கி
குலமுறை கிளத்தலுந் தலைவன் றலைவி
தன்னை யுயர்த்தலும் நன்னுதற் பாங்கி
யறியாள் போன்று வினுதலும் இறையோன்
இறைவி தன்மை யியம்பலும் பாங்கி

---

1 வாலிபம்—வலிமையுடைய யானையை. 2. சாலி—நெல். இதில், வல் என்பது வால் என நீட்டல் விகாரத்தால் வந்தது.

தலைவி யருமை சாற்றலும் தலைவன்
இன்றியமை யாமை யியம்பலும் பாங்கி
நின்குறை நீயே சென்றுரை யென்றலும்
பாங்கியைத் தலைவன் பழித்தலும் பாங்கி
பேதைமை யூட்டலும் காதலன் தலைவி
மூதறி வுடைமை மொழிதலும் பாங்கி
முன்னுறு புணர்ச்சி முறைமையிற் கூறலும்
தன்னிலை தலைவன் சாற்றலும் பாங்கி
உலகியல் உரைத்தலும் தலைமகன் மறுத்தலும்
பாங்கி யஞ்சியச் சுறுத்தலும் ஆங்கவன்
கையுறை புகழ்தலும் தையல் மறுத்தலும்
ஆற்று நெஞ்சினொ டவன்புலம் பலுமவள்
ஆற்றுவித் தகற்றலும் ஆகுநா லைந்தும்
இரந்துபின் னிற்றற்கும் சேட்படுத் தற்கும்
பொருந்த வென்மனார் தெளிந்திசி னோரே. (ந. அ. களவு. 28)

### தலைவனுட்கோள் சாற்றல்.

தலைவனுட்கோள் சாற்றல்—என்பது,—பாங்கி, தலைவன், தலைவி, இவர்களில் ஒருவருக்கொருவர் வெளிப்படுத்துச் சொல் நிகழ்த்தாது கரந்துறை மொழிகளாற் சொல் நிகழ்த்தியும் வர இவையெல்லாம் பாங்கி மதியினலுணர்ந்தபின்னர்ச் சென்று பசிய கொடிபோல்வாளது பாதம் வருடற்குப் பிரமாவினது அன்னத் தூவியும், துடிபோன்ற இடைக்குக் கற்பகத் தழையும், கூந்தலுக்கு அந்தமலரும் அணி வகைகட்கு மேருவிடத்துப் பொன்னும் கொண்டு வாராநிற்பேன் என்னை நீ ஏவுவிப்பாயாளெனத் தலைமகனுட் கோளுரைத்து இரவாநிற்றல்.

(92) அடியிணை [1]தைவரற் கம்புய னூர்தியந் தூவியொடு
துடியிடைக் கேகற் பகத்தழை கூந்தற்கத் தூய்மலர்பைங்
கொடியி னணிகட்கு மேருவிற் பொன்னுங்குற் றலர்வெற்பிற்
[2]கடிமலர்க் கோதை யெனையேவின் நீசென்று கைக்கொள்
வெனே.

அடிமுடி நடுமுதற் கானகை யுறைகள்
[3]கொடிநீ ஏவிற் கொணர்வே னென்றது.

### பாங்கி குலமுறை கிளத்தல்.

பாங்கி குலமுறை கிளத்தல்—என்பது, சமரத்தை வெல்லும் விற்படை வீரர்கள் பஞ்சுவெட்டித் தெளிவிக்கும் வில்லையும் வில்லா

1 தைவரல்—வருடுதல். 2. கடி—வாசனை. 3 கொடி—கொடிபோன்றவள்.

கக் கொள்வதுண்டோ? நீயானுலோ முடியுடைவேந்தன். ஒரு குறக் குலத்துக் கன்னிகைக்கு வெஃகினுல் உனக்கிது மரபல்ல, எனத் தோழி குலமரபு கூறுநிற்றல்.

(93) [1]செருத்திறல் வெல்லுஞ் சிலேக்கர வீரநற் சேயிழையார்
[2]பருத்திச் சிலேயும்கைக் கொள்ளுவ ரோபணிந் தேத்துமன்பர்
கருத்துக் கிசைந்தகுற் ருலர் மலேக்குறக் கன்னிகையாம்
ஒருத்திக்கு [3]வேட்கையுற் ருலென்ன மேன்மை உமக்கண்ணலே.

மலேக்குறக் கன்னி மணத்திணே யுயர்ந்த
குலத்தினர் [4]வெஃகல் கொள்கையன் றென்றல்.

## தலேவன், தலேவி தன்னே யுயர்த்தல்.

தலேவன் தலேவி தன்னே யுயர்த்தல்—என்பது, குற்ருல நாயகர் சந்நிதானத்துக்கு நெய்யிற் புகட்டிய திரியினது சுடர்விளக்கத்தைக் கண்டன்ருே யாவருங் கைதொழா நின்ருர்கள். திரியை நிந்திப்பாரில்லே. அத்தன்மைத்துக் கற்பும் நலமுஞ் சிறந்தவட்குக் குலத்திழிவு சொல்லக்கூடாதென்று தலேமகன் உயர்த்துரையா நிற்றல்.

(94) தையல் குழல்மொழி பாகர்குற் ருலர்தஞ் சந்நிதிக்கு
நெய்யிற் றிணிதிரி யின்சுட ரேயிருள் நீக்கல்கண்டுங்
கையெடுத் தாரெவ ருங்குலம் பேசக் கணக்கிலேநீ
மெய்யின் எழில்நலம் பார்ப்பதல் லோகடன் மெல்லியற்கே.

திரியெளி துரையாத் தீபம் போலப்
பெரிதுகற் போடுபொற் பென்றிழி வகற்றல்.

## பாங்கியறியாள் போன்று வினுதல்.

பாங்கியறியாள் போன்று வினுதல்—என்பது, மலர்கள் கொய்தும் பந்து புடைத்தும் சுனேயாடியும் நின்றனை ஆயக்கூட்டங்கள் எண்ணில. இதில் உன் கருத்துடையாளே இங்ஙனம் யாரென்றறிவேனெனப் பாங்கி அறியாள் போலக் கூறல்.

(95) மணமலரே கொய்தும் பந்தே புடைத்தும் வரைநறவார்
[5]இணர்சுனே யாடியும் நின்றனர் மாதர்கள் எண்ணிலரெண்

---

1 செரு—போர். 2 பருத்திச் சிலே — பஞ்சு வெட்டித் தெளிவிக்கும் வில். 3 வேட்கை—விருப்பம். 4 வெஃகல்—விரும்புதல். 5 இணர்—பூங்கொத்து.

குணபதி யாகிய குற்றாலர் வெற்பினிற் கொற்றவநீ
யுணர்மட மாதிந்தக் கூட்டத்தி லியார்கண் டுணர்வதற்கே.

†பண்ணை நண்ணின ரெண்ணில நானுளம்
மெண்ணு மாதவ ளியாரோ வென்றது.

### இறையோன் இறைவித்தன்மை இயம்பல்

இறையோன் இறைவித்தன்மை இயம்பல்-என்பது, யானெண்ணிய மாதானவள் எத்தன்மையளென்றால் மேனியானது மாந்தளிர்.

† பண்ணை—மகளிர் விளையாட்டு.

### பாங்கி தலைவியருமை சாற்றல்

பாங்கி தலைவியருமை சாற்றல்—என்பது, முற்காலத்துத் தெய்வ குஞ்சரியை நீங்கி வந்த குமரநாயகருற்ற துயரத்துக்கு வள்ளி நாய்ச்சியாரைக் கொடுத்தமை யறிந்தோ வந்தீரெனத் தோழி தலைவியருமை சாற்றாநிற்றல்

(97) வள்ளி யெனுங்குற மானாற்[5]றெய் வப்பிடி மாதிகந்து
மொள்ளிய வேல ருறுதுயர்க் காய்முன் புதவல்கண்டோ
துள்ளிய [6]சேற்கணிம் மாதை விரும்பித் துணிந்துவந்தீர்
வெள்ளி மலைக்கயி லாயர்குற் றாலர்தன் வெற்பிடத்தே.

ஒள்ளிய வேலர்க் குதவின கண்டோ
எள்ளிய திவளரி தெய்துதற் கென்றது.

### தலைமகன் இன்றியமையாமை இயம்பல்

தலைமகன் இன்றியமையாமை இயம்பல்—என்பது, முதிர்ந்த வேனிற்காலத்து ஒருவழிச் செல்வோருக்கு ஓர் நிழல் கண்டல்லது இனிமையில்லை. என்னுடைய காமாக்கினிக்கு உன்னுடைய தலைமகளின்றித் தீர்வதற்கோரிடமில்லை எனத் தலைமகன் அமையாமை கூறாநிற்றல்.

(98) எரிமுதிர் வேனி[7]லதர்நடப் போருக் கினிமையொரு
விரிநிழல் எய்தலென் மோகத் தழல்தவி ருந்தகைமை

1 பாந்தள்-பாம்பு. 2 காந்தள்-ஓர் மலர். 3 தளவு-முல்லை. 4 இந்து-சந்திரன். 5 தெய்வப்பிடிமாது-தெய்வ யானை என்னும் பெயருடைய பெண். 6 சேற்கண் இம்மாது-கயல்போன்ற கண்ணையுடைய இப்பெண். 7 அதர்—வழி.

புரிகுழல் சேர்ந்திட லின்றியு முய்யும் புகலுளதோ
[1]பரிபுரப் பாதர்குற் ருலத்தர் வெற்பிற் பனிமொழியே.

வெயில்நிழ லின்றி விலகா வேட்கைநின்
அயில்விழி யின்றி யமையா தென்றல்.

### பாங்கி நின்குறை நீயே சென்றுரை என்றல்

பாங்கி நின்குறை நீயே சென்றுரை என்றல் — என்பது, குற்ருல நாயகர் திருவடியின்பத்தைக் கருதிய அன்பர்கள் சுருதி, குரு இரண்டினுலும் வழிக்கூடித் தன் விவேகத்தினுல் அழுந்தியழுந்தித் தன் அநுபவக் குறைக்கு உருகி அழுது மாற்றியும் அறிவித்து அவனருளாலே அவன்ருளடைவதுபோலே, நின்னது குறையை நீயே அவட்குரைத்தொழிவதே கடனெனப் பாங்கி சொல்லாநிற்றல்.

(99) பொன்குறை யாமதிற் குற்ருலர் நேயத்தைப் பூணுமன்பர்
தன்குறை தான்சொலத் தீர்ப்பதல் லாலவர் தங்களுக்கு
முன்குறை யார்சொல்லித் தீர்த்துவித் தார்மொழி வாயண்ணலே
நின்குறை நீசென்று சொல்வதல் லோகடன் நேரிழைக்கே.

இன்[2]பவை யிரண்டுக் கேதுவுண் டேனும்
தன்படி யடைவு சாலநன் றென்றல்.

### பாங்கியைத் தலைவன் பழித்தல்

பாங்கியைத் தலைவன் பழித்தல் — என்பது, விளைபயிர் ஓம்பற்கு [3]அறுதொழிலாளர் வருணனை ஆராதிக்க வருணன் மேகத்தைக் கேண்மின்கள் என்றதுண்டோ? கருணையின்றி அவட்கு நின்குறையைச் சொல்லென்றது மிகவும் நன்றென்று பாங்கியைத் தலைவன் பழியாநிற்றல்.

(100) [4]அருண வடிவினர் குற்ருல நாதர்வெற் பாரணங்கே
தருண மதாம்[5]பயிர் வாட்டத்துக் கேயந் தணர்கருத
வருணன்[6]எழிலியைக் கேளீ ரெனச்சொல்லும் வாய்மையுண்டோ
கருணையில் லாதுன் குறைநீசொல் லென்றனை கன்னிகைக்கே.

---

1 பரிபுரம்-பாத கிண்கிணி. 2 அவை—தானே சொல்லித் தீர்ப்பதும் பிறர் சொல்லித்தீர்ப்பதும். 3 அறுதொழிலாளர்—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் ஆறு தொழிலையுடைய அந்தணர். 4 அருணம்-சிவப்பு. 5 பயிர்வாட்டம்-பயிர்மழையின்றி வாடுதல். 6 எழிலி-மேகம்.

தன்னைக் கேட்டவை தானீந் தலைவன்
முன்னைக் கேளென மொழிந்தவை பழித்தல்.

### பாங்கி தலைமகள் பேதைமை யூட்டல்.

பாங்கி தலைமகள் பேதைமை யூட்டல்—என்பது, உலகத்துக் கிளிகட்குப் பாலும் அன்னமும் கொடுத்துச் சொற்பயிற்றிச் சொற் கேட்பார்கள். இவள் தினைக்கதிர்க்காகக் கிளிகளைக் கவணெறிந் தும் விழியெறிந்தும் துரத்துவள். இவளோ உனக்குத் தயவு செய் வாளெனப் பாங்கி தலைமகள் பேதைமை யுரைத்தல்.

(101) கொண்டா தரித்[1]தனம் பால்கிளி பேசக் கொடுப்பர்மின்னோர்
[2]பண்டார்குற் றாலத்தர் வெற்பி லிவள்பசுங் கிள்ளைகளை
யண்டா தெறியுங் கவணுற் றினைக்கதிர்க் காயண்ணலே
யுண்டாகு மோவுன் றயவு குறக்குல வொண்டொடிக்கே.

நல்லவ ருள்ள நலனறிந் துரையாச்
சொல்லவட் கேது சொல்வே னென்றது.

### காதலன் தலைவி மூதறிவுடைமை மொழிதல்.

காதலன் தலைவி மூதறிவுடைமை மொழிதல்—என்பது, முன் னோரிடத்துக் கூடிப் பிரியுங்காலத்துத் தலைமகள் அழுத கண் ணீரானது, சித்திரா நதி தனக்கு மூலமாகிய திரிகூடவரையுங் கடந்து சென்று உந்தியினை யடைவது போல், அவள் மார்பும் மடியுங் கொள்ளாது கடந்துசென்று உந்தியாகிய மடுவிற் பெருகாநின்ற தெனத் தலைவன் தலைமகள் பேரறிவு கூறாநிற்றல்.

(102) செங்கை மழுவினர் குற்றாலர் வெற்பிற் சிவமதுவாம்
கங்கை வரைகடந் தேயுந்தி சேர்ந்தெனக் காரிகையே
அங்கை துடைத்துமென் அன்பால்முன் மாதுகண் ணொழுகுநீர்
கொங்கை வரையுங் கடந்தே சுழியுந்தி கொண்டதுவே.

என்பிரி வாற்றா திரங்கின ளென்ன
முன்புறு தயவை முதல்வ னுரைத்தது.

### பாங்கி முன்னுறு புணர்ச்சி முறையுறக் கூறல்.

பாங்கி முன்னுறு புணர்ச்சி முறையுறக் கூறல்—என்பது, குற்றால நாயகருடைய திருவடியைப் பெற்றவர்களுக்கு உண்மை அக்

1 அனம்—அன்னம். சோறு. இது இடைக்குறை. 2 பண்டு—பழமை.

கடவுளை யன்றி வேறில்லையே. அதுபோல அவளுடனே முயங்கப் பெற்றிருப்பீராஞற் பின்ஞெரு சகாயம் வேண்டியதென்னென்று பாங்கி கூறுநிற்றல்.

(103) வற்ரு வடவரு வித்துறை யார்குழல் வாய்மொழிசேர்
குற்ருல நாயகர் பொற்பதஞ் [1]சென்னியிற் கொண்டவர்கட்
குற்ரு ரவரினு முண்டுகொல் லோமின் னுடன்முயங்கப்
பெற்ருற் பிறிதொரு நட்பென்ன வேண்டுதல் [2]பீடண்ணலே.

முன்புணர் கின்ற முறையினைப் போலப்
பின்புணர் வீரெனப் பெய்வளை கூறல்.

## தலைவன்றன்னிலை சாற்றல்.

தலைவன்றன்னிலை சாற்றல்—என்பது, குற்ருலநாயகர் எவ்வுயிர்க்கு முயிராக விருந்தறிவித்தும் அவருடைய திருவடிகளையடைய வேண்டின அன்பர்கள் குருமுகமாகப் பெறுவது போலும், இன்னமும் தலைமகளின்பத்தையடைவது உன்பொருட்டே யென்று தலைமகனிரவாநிற்றல்.

(104) [3]மாசாகா வையகம் போற்றுங்குற் ருல வரதனெனும்
ஈசானர் தாமெவர்க் கும்பொது வாக இருந்துமன்பர்
ஆசான் அருள்பெற் றவர்தமைக் காணுத லாலுமின்னுள்
[4]பூசார மென்முலை தோய்வ தினமுன் பொருட்டணங்கே.

அண்ணலை யாசா னருளா லடைந்தெனப்
பெண்ணமு தன்ருற் பெறுவே னென்றது.

## பாங்கி உலகிய லுரைத்தல்.

பாங்கி உலகிய லுரைத்தல்—என்பது, [5]அங்கியங் கடவுள் அதி[6]கரியாக ஐங்குரவோர்களும் [7]உதகஞ்செய்து கொடாமல் உமக்கோர் பாகமாகப் புத்தமுது போல்வாளைத் தோயக் கூடுமோ? கூடாது. கூடுமாஞல் ஆராய்ந்து பார்த்து உரையுமின்களென்று பாங்கி தலைமகற்சேட்படுத்தா நிற்றல்.

---

1 சென்னி-தலை. 2 பீடு-பெருமை. 3 மாசு ஆகா வையகம்-குற்றமில்லாத பூமி
4 பூசு ஆரம்—பூசிய சந்தனம். 5 அங்கியங் கடவுள்-அக்நிதேவன். 6 கரி-சாக்ஷி.
7 உதகம்—நீர்.

(105) நாக மணிகளத் தார்குழல் வாய்மொழி [1]நாரியுற்ற
தேக ரெனுந்திருக் குற்றுலர் வெற்பிற்செந் தீமுறைமை
யாக வளர்த்துப் புனல்வார்க்கு முன்பசி யாற்றுதற்கோர்
பாக மதாய்ப்புத் தமுதெய்து மோசொல்லும் பார்த்தண்ணலே.

அங்கியங் கடவு ளறியா [2]வதுவை
எங்குள தென்ன இறைவர்க் குரைத்தது.

### தலைமகன் மறுத்தல்.

தலைமகன் மறுத்தல்—என்பது, சருவ லோகமும் தனக்கு ஒரு திருமேனியாகிய குற்றுலப் பெருமானை வலஞ்செய்த விநாயகர்க் கன்றி உலோகவலஞ் செய்த சேவற்கொடியார்க்கு அக்கடவுள் கனி யருளியதில்லையே. உன் கைக்கனியாகிய தலைவிக்கு உன்னை வலஞ் செய்து வணங்கியும் தீவலஞ்செய்யவேண்டுமோ? எனத் தலைமகன் பாங்கியை இரந்து பின்னில்லா நிற்றல்.

(106) [3]கூவலஞ் சேவற் கொடியார்குற் றுலநங் கோனையின்றிப்
பூவலஞ் செய்துபெற் றுரோ பலன்நின் புடைவலம்வந்
தாவலந் தோகொடி தென்றுவுன் றன்கைக்குள் ஆங்கனியைத்
தீவலஞ் செய்தபின் எய்துமென் றேதுந் திறமரிதே.

நெருப்புக் கரியென் நின்கைக் கனிக்கெனப்
[4]பொருப்பனி [5]யாழோர் புணர்வினை விளக்கல்.

### பாங்கி யஞ்சியச்சுறுத்தல்.

பாங்கியஞ்சியச்சுறுத்தல்—என்பது, ஆதித்தனுல் [6]அத்த மகிரியை யடைந்தான். இரவானுல் இந்த வனத்தை வந்து பரம்பின. இவை பிறர் காணி லென்சொல்வர் பிறர்க்குப் புலப்படா முன் னமே இவ்விடத்தை நீங்கிச்செல்வேமெனப் பாங்கி தலைவற்கு அச் சமுறுத்தா நிற்றல்.

(107) [7]அலரியும் பட்டதின் [8]றல்லி [9]வனத்திலுண் டாயதுற்றுர்
பலரிவை காணி லெனையென்ன சொல்வர்பற் றுர்முனம்பற்

---

1 நாரி-பெண். 2 வதுவை-மணம். 3 கூவலஞ்சேவற் கொடியார்-முருகன் 4 பொருப்பன்-தலைவன். 5 யாழோர் புணர்வு-காந்தர்வ மணம். 6 அத்தமகிரி—அஸ்தமன மலை. 7 அலரி-சூரியன், தாமரைப்பூ. 8 அல்லிவனத்திலுண்டாயது—இரவு இந்த வனத்தில் பரந்தது, குமுதப்பூ ஜலத்தில் மலர்ந்தது. 9 வனம்-காடு, நீர்.

றிலரியல் சூடிய குற்றாலர் வெற்பி லிலங்குகண்ணி
மலரிறை வாவினிச் செல்குவ தாமெங்கள் வாழ்பதிக்கே.

தானுமுள் ளஞ்சித் தலைவனு மஞ்சப்
[1]பானுநீங் கியதைப் பகர்ந்துசெல வுரைத்தல்.

## ஆங்கவன் கையுறை புகழ்தல்.

ஆங்கவன் கையுறை புகழ்தல்—என்பது, குற்றாலக் கடவுளர் பாத தாமரைக்குப் பூசிக்கும்படி அன்பரானவர் தழை கொய்தல்போல, யானும் பெரிய வனங்களிற் புகுந்து ஒள்ளிய தழை ஒன்று கொணராநின்றேன். உங்கள் தலைமகட்கு உவப்பாமெனத் தலைமகன் கையுறை புகழாநிற்றல்.

(108) அண்டரும் போற்றிய குற்றால நாதர்ப தாம்புயத்திற்
றொண்டர் தழைகொய் தருச்சனை செய்யுந் துணிவதுபோல்
வண்டமர் பூங்குழ லாட்கு வனைந்திட மாவனம்போய்
ஒண்டழை யான்கொணர்ந் தேனணங் கேமனத் தோகையுற்றே.

கடவுளர்க் கடியர் கள்தழை கொய்தென
மடவரல் தழைகொடு வந்தே னென்றது.

## தையல் மறுத்தல்.

தையல் மறுத்தல்—என்பது, தலைவியானவளைப் பிடியாக நினைந்தன்றோ தழைதர வந்தீர் அவையொக்கும் அந்தப் பிடியைக் கொடியென்பதும் அறிந்திருப்பீர் பின்னைத் தழை ஏதுக்கு? தழை தமர்களாயுள்ளவர்களே எனப் பாங்கி தழை மறுத்தல்.

(109) [2]துடியுஞ்செல் லாமற் [3]றுடிசெலுத் திப்புரந் தூளியெழக்
கடியும்புன் மூரலர் குற்றாலர் வெற்பினிற் கன்னிகைநற்
[4]பிடியென்று மேதழை யீயவந் தீரிப் பிடியினைப்பூங்
[5]கொடியென் பதுமறி வீர்தழை யென்குல மேதழையே.

இயற்கைத் தழைகொடிக் கென்றுமுண் டென்றுஞ்
செயற்கைத் தழையென் னென்றுசெப் பியது.

---

1 பானு-சூரியன். 2 துடி-காலநுட்பம், க்ஷணநேரம், 3 துடி-உடுக்கை (தமருகம்) 4 பிடி-பெண் யானை. 5 கொடி—பூங்கொடி. இதில் யானைக்கு உணவாகத் தழை கொடுத்தலும். பூங்கொடிக்கு தழை இயல்பாக உண்மையும் தோன்றக்கூறிய நயங்காண்க.

## ஆற்றாநெஞ்சினொ டவன்புலம்பல்.

ஆற்றாநெஞ்சினொ டவன்புலம்பல்— என்பது, எண்ணிய தோர் எண்ணமெல்லாம் பிழைத்துக் கமலம்போன்ற கண்ணுடை யாட்கென்று கொண்டுவந்த தழையும் இசையாது போயதெவ்வாறு? கொண்டுவருங் காலத்துக் [1]காமதகனராகிய குற்றால நாயகர் பாத தாமரையை வந்தனை செய்யாத வண்ணமோ? எனத் தலைமகன் புலம்பாநிற்றல்.

(110) எண்ணிக் கருத்தில் நினைத்ததெல் லாம்பிழைத் தேகமலக்
கண்ணிக்குக் கண்ணியும் வேய்தற்கெய் தாதென்ன கைத்தனு வாந்
[2]தண்ணிக்கு வேளை யெரித்தோர்குற் றாலர்பொற் றாளிணையை
நண்ணிக்கை கூப்பிப் பணிந்தில மோவரும் நாள்நெஞ்சமே.

கண்ணியுந் தழையும் காதலிக் கீய
வெண்ணிய தொழிய இறைவன் னொந்தது.

## பாங்கி யாற்றுவித்தகறல்.

பாங்கியாற்றுவித்தகறல்— என்பது, பொருந்திய கலைகளை விடுத் திறங்கும்பொழுதில் அணியலங்கரிக்கிற தழகல்ல, நாளைப்போ துதித்து ஏறுங்கலையில் இங்குவரின் கையுறை வாங்கிக்கொள்வோம். இப்போது செல்வீரெனப் பாங்கி தலைவனைச் [3]சேட்படுத்தா நிற்றல்.

(111) [4]கலையிறந் தேகும் பொழுதணி வேய்தல் கவினலவிண்
டலைமைய தாயுதித் தேகலை சேர்பொழு தாகிலொரு
நிலையினர்க் கின்ப மளிக்குங்குற் றால நிருமலர்பொன்
மலைவரிற் கையுறை வாங்குவம் இன்றுசெல் வாயண்ணலே.

காலம்நன் றறிந்து கையுறை கொள்வமென்
[5]ஏல[6]வார் குழலி இறைவனைத் தேற்றல்.

இவற்றுள், தலைமகன் கூற்றாயினவெல்லாம் இரந்து பின் னிற்றற்கும், பாங்கி கூற்றாயினவெல்லாம் சேட்படுத்தற்கும் உரிய வாம்.

---

1 காமதகனர்-சிவபெருமான். 2 தண் இக்கு வேள்-குளிர்ச்சியுடைய கரும்புவில்லை ஏந்தும் மன்மதன். 3 சேட்படுத்தல்-தூரச்செலுத்துதல். 4 கலை-பிரகாசம். 5 ஏலம்—மயிர்ச்சாந்து. 6 வார்—நீண்ட.

இரந்துகுறை பெறாது வருந்திய கிழவோன்
மடலே பொருளென மதித்தலும் பாங்கிக்கு
உலகின் மேல்வைத் துரைத்தலு மதனைத்
தன்மேல் வைத்துச் சாற்றலும் பாங்கி
தலைமக ளவயவத் தருமை சாற்றலும்
தலைமகன் றன்னைத் தானே புகழ்தலும்
அலர்முலைப் பாங்கி அருளியல் கிளத்தலும்
கொண்டுநிலை கூறலும் என்றிவை எழும்
மடற்கூற் றுக்கும் மடல்விலக் கற்கும்
கடவ வென்மனார் கற்றறிந் தோரே. (ந. அ. களவு. 29.)

## இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன் மடலே பொருளென மதித்தல்.

இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன் மடலே பொருளென மதித்தல்—என்பது, கலனுடையார்க்குச் செல்லுந் தீவறிந்து கடலேறினாற் பொருள்கூடும். வீரவான்களுக்கு இமையாடாது செருக்களம் புகுந்தாற் புகழுண்டாம். என்றாற்போல, நாமும் மடலேறினால் தலைமகளின்பத்தை யடையலாம் அல்லது, வேறோர் வலியில்லை எனத் தலைமகன் நெஞ்சொடு கூறாநிற்றல்.

(112) கடலேறி னாற்பொருளெய்தும் கலனுடை யார்க்கிமையா
தடலேறி னாற்புக ழாம்விறல் வீரற் கடு[1]சமர்வெள்
ளுடலேறி னார்திருக் குற்றாலர் வெற்பினி லொண்டொடியை
[2]மடலேறி னாற்பெற லாமல்ல தில்லை வலிநெஞ்சமே.

மடலூர்ந் தல்லது மடவா ரின்பங்
கடைகூ டாதெனக் காவலன் மதித்தது.

## மடலேற்றினைப் பாங்கிக் குலகின்மேல்வைத் துரைத்தல்.

மடலேற்றினைப் பாங்கிக் குலகின்மேல்வைத் துரைத்தல்—என்பது, தன் மனமாகிய கூட்டுக்குக் கிளியாயதோர் பெண்ணிடத்துக் காமங் காழ்க்கொளின் அப்பெண்ணைத் தமரார் தருகிலராகில் ஊரெல்லாமறிய அவளைப்போலே ஒப்புருவமெழுதித் தன்பேரும் அவள் பேரும் எழுதி எழுதியபடத்தைப் பிடித்துக்கொண்டு தெருவீதியிற் சென்று மடலூர்வதோ ருலகவழக்குண்டென்று தலைமகன் பாங்கிமுற் கூறாநிற்றல்.

---

1 சமர்—போர். 2 மடலேறல்—தலைவன் காமத்தாலாற்றானாகிப் பனைமடலாற் செய்யும் பரிமேல் ஊர்தல்.

(113) பொரக்[1]கிள்ளை வேளைவெல் குற்ருலர் வெற்பிற்றன் பொற் [பகப்[2]பஞ்
சரக்கிள்ளை தன்னை யினக்கிளை யோர்கள்த ராதிருந்தாற்
[3]கரக்கிள்ளை பேசுமவ் வூர்வீதி தோன்றக் கரியபனை
மரக்[4]கிள்ளை யேறிக் கரக்[5]கிழி கொண்டு வருவர்மன்னே.

கடவாக் காமங் காழ்கொளி னுலகோர்
மடலூர் வாரென மன்னொடுத் துரைத்தல்.

**மடலேற்றினைத் தலைவன் றன்மேல்வைத்துச் சாற்றல்.**

மடலேற்றினைத் தலைவன் றன்மேல் வைத்துச் சாற்றல்—என்பது, நின்னது வரைமகளாகிய பெண்ணைக்குறித்து அனவரதமும் நடந்துவந்து யான் குறையிரந்தது ஓர் கதையளவில்லை. இனி இக்கோலமானதின்றி இதற்கென்ருரு கோலங்கொண்டு நெய்தற் கருப்பொருளாகிய பனைமரத்தைச் சேதித்து மடலூர்ந்து உம்மூரின் கண்ணே வருவேன். இதையுன் கண்ணுற் பார்ப்பாயாகெனத் தலைமகன் பாங்கிமுற் சொல்லாநிற்றல்.

(114) [6]துரைப்பெண் ணெனுங்குழல் வாய்மொழி மேவிய தூயவர் [பொன்
வரைப்பெண்ணை நெஞ்சில்வைத் தூர்ந்துவந் தேவந்தி [யானுரைத்த
[7]வுரைப்பெண் ணிலையினி வேற்றுரு வாய்த்திரை ஓங்குகடற்
கரைப்[8]பெண்ணை யூர்ந்துநும் மூர்வருவேன்உந்தன் கண்ணெதிரே.

கடல்புரை காமத் திடர்கொடி தினியான்
மடலினை யூர மதித்தே னென்றது.

**பாங்கி தலைமகளவயவத்தருமை சாற்றல்.**

பாங்கி தலைமகளவயத்தருமை சாற்றல்—என்பது, நீ மடலூரும்பொருட்டு ஒப்புருவெழுதிய படத்தில் அவள் கண்ணுமெழுதி உன்னையகப்படுத்திய பொதுநோக்கமும் எழுதுவாயாளுல், மற்றுள்ள அவயவமெல்லாம் எழுதுவாய். எழுதமாட்டாய் எனப் பாங்கி மடல் விலக்காநிற்றல்.

---

1 கிள்ளை-கிளி, மீன். 2 பஞ்சரம்-கூடு. 3 கரம்-கை 4 கிள்ளை-குதிரை. 5 கிழி-எழுதுபடம். 6 துரைப்பெண்-மேம்பாடு உடைய பெண். 7 உரைப்பு-சொல்லுதல். 8 பெண்ணை-பனை.

(115) [1]ஆட்ட ரவச்சிற் றிடைக்குழல் வாய்மொழி யாமணங்கை
வேட்டல் செயுந்திருக் குற்ருல நாதர் வியன்கிரிமான்
[2]நாட்ட மெழுதி இருபா ருவையும் [3]நகச்செய்வையேற்
றீட்டவம் மாதி னவயவம் யாவும் தெரியுமன்னே.

உருவே யெழுதினு முனையகப் படுத்தும்
இருபா ருவையு மெழுதரி தென்றல்.

**தலைமகன் றன்னைத்தானே புகழ்தல்.**

தலைமகன் றன்னைத்தானே புகழ்தல்—என்பது, ஒரு காலத்துக் குருந்தாகவும் மற்ெருரு காலத்து [4]திககிரேருதமாகவும் பின்பு குறும்பலாவாகவும் திருப்படைவீடு கொண்டருளிய தெய்வத்துக்கு யானடிமையாகலானும் நீவிர் பிரம சிருட்டியைத் தவிர்த்து உலகம் படைத்தருளிய தெய்வத்துக்கு அடிமையாகலானும் கைவருத்தமின் றிப் பிரம சிருட்டியினும் அதிகமாகவே எழுதுவேனெனத் தலைமகன் மடற்கூற்றுறுத்தாகிற்றல்

(116) குருந்தால் பலாவென்று பேதகஞ் செய்து குழல்மொழிபங்
கிருந்தாரை யான்ெருழு லான்நீவி ரும்மிறை யோனையின்றிப்
பெருந்தா ரணிபடைத் தோனைத் தொழும்பெரி தானுமின்னே
வருந்தா [5]தயனிலு மிக்காய்ப் பொறிப்பன்றும் மாதினையே.

நின்வழிக் கடவு ளென்முதற் கடவு
ளின்னது செயலா லெழுதுவே னென்றது.

**அலர் முலைப்பாங்கி யருளியல் கிளத்தல்.**

அலர் முலைப்பாங்கி யருளியல் கிளத்தல்—என்பது, நீ குற்ருல நாயகரை மறவாத சிந்தையனுய் அருள் பெற்றவனுதலால் அருளுடையானுக்கு அறம்வழுவலாகா. பனையினது பத்திரத்தை ஏடாகத் திருத்தி அதிலே ஆகமசாத்திர புராண முதலான அருநூல்களைப் பெரியோர்கள் எழுதலினுல் அதனைச் சேதித்து மடலூர்தலொழி வாயெனப் பாங்கி விலக்காநிற்றல்.

---

1 ஆடு அரவம் என்பது எதுகை நோக்கி ஆட்டரவம் ஆனது செய்யுள் விகாரம். 2 நாட்டம்-கண். 3 இருநோக் கிவளுண்கண் உள்ள தொருநோக்கு நோய்நோக் கொன் றந்நோய் மருந்து (திருக்குறள்). 3 நக-மகிழுமாறு. 4 திக்கிரேருதம்—ஆலமரம். 5 அயன்-பிரமன.

(117) அறத்துக்குத் தக்க தருளென்ப தாலுங்குற் றாலவரைநீ
[1]மறப்பற்றுச் சிந்தித் தருள்பெற் றதாலு மடலின்மடல்
சிறப்பித் தறநெறி தோன்றமுன் னூல்கள் தெரிப்பக்கற்றோர்
உறப்பெற் றதாலு மட[2]லிருத் தார லொழிகமன்னே.

இடர்தவிர் அருநூல் எழுதரும் பொருளால்
மடலிருத் தார்தல் மறுக்க வென்றது.

கொண்டுநிலைகூறல்.

கொண்டுநிலைகூறல்—என்பது, குற்றால நாயகர் விழாக் கொண்டருளிய வீதியின்கண்ணே யூர்ந்துவரும் மடலுடையவரே! தலைமகட்கு உமது குறையுணர்த்தும்வரையுஞ் சற்றுப் பொறுத்திருக்க கிடையாதென்னவில்லை. அவள் புலனையறிந்து வருகிறேனென்னைப் பாங்கி பொறைகூறிநிற்றல்.

(118) [3]அறுகிடை வாயல றக்கீண் டுரித்தகுற் றாலர்வெற்பின்
[4]மறுகிடை யூரு மடலுடை யாய்வரி வண்டுகளுண்
டுறுகிடை யாங்குழற் குன்குறை யானுணர்த் துந்துணையும்
பொறுகிடை யாதென்று சொல்லேனென் னேவுட் புலனவட்கே.

புலனறி காறும் பொறுமின் கொடுதர
வலிதிலை யென்று மருளே லென்றது.

இவற்றுள், தலைமகன் கூற்றாயினவெல்லாம் மடற்கூற்றுக்கும், பாங்கி கூற்றாயினவெல்லாம் மடல்விலக்கற்கும் உரியவெனக் கொள்க.

தலைவி யிளமைத் தன்மை பாங்கி
தலைவற் குணர்த்தலும் தலைவன் தலைவி
வருத்திய வண்ணம் உரைத்தலும் பாங்கி
செவ்வி யருமை செப்பலும் தலைவன்
செவ்வி எளிமை செப்பலும் பாங்கி
என்னை மறைப்பின் எளிதென நகுதலும்
அந்நகை பொறாஅ தவன்புலம் பலும்அவன்
தேற்றலும் கையுறை ஏற்றலும் கிழவோன்
ஆற்றலும் என்னும் அவ்வொன் பானும்
குறையோர் தற்கும் மடற்கூற் றொழிதற்கும்
முறைமையின் உரிய முன்னுங் காலே. (ந. அ. களவு. 30).

---

1 மறப்பற்று-மறவாது. 2 இருத்து-இழுத்து 3 அறுகு-புலி, யானை. 4 மறுகு-தெரு. இதில் திரிபணி வந்தமை காண்க.

## தலைவி இளமைத் தன்மை பாங்கி தலைவர்க்கு உணர்த்தல்.

தலைவி இளமைத் தன்மை பாங்கி தலைவர்க்கு உணர்த்தல் என்பது, இப்போழ்து நீவிர் தாகித்துவந்த தாகந் தவிர்க்கத் தலைவியானவர் கடிதடம் மிக்குப் பெருக்கவும் இல்லை. அதின்மேல் தாமரை முகைகள் கொடிதுவண்டு அசையும்படி [1]பரியதாகவும் இல்லை. அதின்மேல் குறிய [2]சைவலம் நெடிது வளமைப்படவும் இல்லை என்று அவளிளமைப் பருவத்தைப் பாங்கி வாய் நாணுதலால் இருபொருட்படச் சொல்லிக் குறைநேராநிற்றல் கடிதடமென்றது அல்குலை. தாமரை முகியென்றது முலையை. கொடியென்றது இடையை. சைவலமென்றது கூந்தலை.

(119) அடிமுடி மாலயன் காணுர்குற் றலர் அணிவரையார்
[3]கடிதட மிஞ்சப் பெருக்கவு மில்லை [4]கமலமுகை
[5]கொடிது வளவிம்மிப் பாரிக்க வில்லை குறுஞ்[6]சைவலம்
நெடிதுற வில்லைநுந் தாகந் தவிர்க்கு நெறிக்கண்ணலே.

அருமையி னொருவர் ஐம்புலன் றுய்த்தலிற்
பருவமல் லதுசுவைப் படாதெனப் பகர்தல்.

## தலைவன் வருத்திய வண்ணமுரைத்தல்.

தலைவன் வருத்திய வண்ணமுரைத்தல்—என்பது, சூரியகிரணம் உலகெல்லாம் நிறைந்தெறித்தும் ஓரிடத்தும் அக்கினி பிரவேசித்ததில்லை. தன்னது காந்தத்தினிடமாகச் சுருங்கி அதன்கீழ்ப் பட்ட பஞ்சைச் சுட்டது. பருவம் நிரம்பாப் பருவத்தில் யான் அருகணுதால் என்னுடைய மனத்தைச் சுட்டது நின்னுடைய தலைவியிளமைத்தன்மை எனத் தலைவன் வருந்தாநிற்றல்.

(120) [7]இருங்கதிர் நீள்புவிக் கார்த்துஞ் சுடரன லீந்திலத்தீ
சுருங்கித்தன் காந்தத்தின் கீழ்ப்பஞ்சிற் சுட்டு தெனக்குமின்னும்
மருங்கி னிளமை கொடிதாச்சு மீறில் வருத்தமென்னுங்
கருங்களத் தார்திருக் குற்றலர் வெற்பினிற் கன்னிகைக்கே.

சுடரது கற்கீழ்த் தோன்றழற் போல
மடவர லிளமை வருத்திய தென்றது.

---

1 பரியது-பருத்தது 2 சைவலம்-நீர்ப்பாசி. 3 கடிதடம்—அல்குல், நீர்த்தடாகம். 4 கமலமுகை-தாமரை மொட்டு, கொங்கை. 5 கொடி-படர்கொடி, மருங்குல். 6 சைவலம்-பாசி. 7 இருங்கதிர்—பெரிய சூரியன்.

120-ம் செய்யுளில் தாகம் தணிக்கும் நீர்த்தடாகத்துக்கும் மோகந் தணிக்கும் மங்கைக்கும் சிலேடை தோன்றக் கூறிய நயங் காண்க.

### பாங்கி செவ்வியருமை செப்பல்.

பாங்கி செவ்வியருமை செப்பல்—என்பது, தலைமகள் பெருநாணுடையளாதலால் தன்னொடு ஒத்த மகளிர் முகத்தையும் பாராள். அதுவும் மறுமுகப் பார்வை யென்பது குறித்து பின்னும் முன்னைப்போலப் பந்தாடல் முதலியவைக்கும் வாராள். நின்குறை அவளுக்கெங்ஙனம் சொல்வேன் எனப் பாங்கி அருமை கூறுநிற்றல்.

(121) [1]சூரா ளுலகம் [2]புருகூத னௌவெஞ் [3]சூரருடன்
போராள் [4]குகனை யுதவுங்குற் றாலர் பொருப்புமின்னாள்
பாராள் மகளிர் முகமும் மறுமுகப் பார்வையென
வாராள்பந் தாடவும் நின்றுயர் சொல்வதெவ் வாறண்ணலே.

முகம்பா ராளை முகம்பார்த் துன்குறை
யகங்காண் வண்ண மறைவதெவ் வாறெனல்.

### தலைவன் செவ்வியெளிமை செப்பல்

தலைவன் செவ்வியெளிமை செப்பல்—என்பது, ஒள்ளிய மணிபோலுந் தலைமகட் கென்னைக் கண்டேனென்று என் பெயர் சொல்லி யான் வருதலை அறிவிக்கில், என் கண்மணியைக் கண்டுவந்த கண்ணே நின் கண் என்று உன்முகத்தோடே முகத்தை வைத்துப் பேசுமென்று அவள் அந்தரங்கத்தைத் தலைமகன் பாங்கிக்குணர்த்தாநிற்றல்.

(122) [5]விண்மணி நோக்கினர் குற்றால நாதர் வியன்கிரிவாய்
ஒண்மணிக் கென்பெயர் சொல்லியும் யான்வர வோதிடிலென்
கண்மணி யைக்கண்டு வந்தகண் ணேவென் றுன் கணகணுறப்
பெண்மணி யேநின் முகத்தின் முகம்வைத்துப் பேசுமின்னே.

என்பாற் கேட்டதும் என்னைக் கண்டதும்
மின்பா லுரைக்கில் வேண்டுமென் றுரைத்தல்.

### பாங்கி யென்னை மறைத்தபின் னெளிதென நகுதல்

பாங்கி யென்னை மறைத்தபின் னெளிதென நகுதல் — என்பது, தன் மாத்திரைகள் ஐந்தும் அவற்றின் கட்டோன்றிய பூதங்கள்

1 சூர்-சூரபத்மன். 2 புருகூதன்-தேவேந்திரன். 3 சூரர்-வீரர். 4 குகன்-முருகன். 5 விண்மணி-சூரியன்.

ஐந்தும், அவற்றின் கூறுகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், கருமேந்திரியங்கள் ஐந்தும், இவற்றை அறிதற் கருவியாகிய மனம் புத்தி சித்தம் ஆங்காரமும் அவற்றுக்கு முதலாகிய மூலப் பிரகிருதியும் இவை முதலாகிய செகசீவாதிகளைக் குழல்வாய்மொழியின் திருவருளையன்றிக் குற்றாலப் பெருமான் செயற்படுத்தினும் தலைமகள் என் வாய்மொழியன்றி உன்னைக்கூடாள். மற்றெய்திற்றென்றால் மகா எளிதெனப் பாங்கி நகையா நிற்றல்.

(123) விழிநுதல் கொண்டவர் குற்றால ரோசை மிகும்பரிசம்
ஒழிவி லொளிசுவை நாற்றத்தின் தோற்றம் உமைகுழல்வாய்
மொழிசெய லன்றிப் படைக்கினு மென்வாய் மொழியன்
[றுன்னை
அழிவுற வார்குழல் சேராள்மற் றெய்திற்றென் றாலெளிதே.

அன்னையன் றிறையுல கதுசெயற் படுத்தினும்
என்னையன் றெய்தாள் எய்தின தெளிதெனல்.

### அந்நகை பெறாதவன் புலம்பல்

அந்நகை பெறாதவன் புலம்பல்— என்பது, குற்றால நாயகர் திரிபுரத்தை நகைத்தெரிக்கும்போது அவர் பத்திக்குரிய அரக்கர் மூவர்களும் பிழைத்துத் திருவடிக்காளானார்கள். நானும் உன்னை முழுதும் நம்பிய வண்ணத்தால் நீ இகழ்ச்சியாய்ப் புன்னகை செய்தற்குத் தப்பிப் பிழைத்துக் கொண்டேன். அல்லது உயிர்வாழேனெனத் தலைமகன் புலம்புறா நிற்றல்.

(124) [1]தும்பி முகனை யுதவுங்குற் றாலர்துன் னார்புரத்தை
வெம்பி நகைத்தும் அருச்சனை [2]மூவர்வி டாமையினல்
அம்புவி மீதுயி ருய்ந்தா ருனைப்பொரு ளாகமுற்றும்
நம்பின தாலுய்ந் தேனனின் வாய்ப்புன் னகைகண்டுமே.

திரிபுர வெரியிற் றீய்ந்திலர் போலும்
உரியபுன் னகைக்குய்ந் தேனென வொழுகல்.

---

1 தும்பி முகன்-யானை முகக்கடவுள்.
2 மூவர்-சுதன்மன், சுசீலன், சுபுத்தி என்னும் மூவர். இந்த மூன்று அசுரருக்கும் நெருப்பை அவித்தார். இம்மூவரும் சிவபெருமான் திருவாயிற் காவலராக இருக்கின்றனர்.

## பாங்கி தலைவனைத் தேற்றல்

பாங்கி தலைவனைத் தேற்றல் — என்பது, [1]பஞ்ச கிருத்தியம் முதலானவைகளும் குற்றமலக் கடவுள் ஆக்கினைக்குள் நடப்பது போலும், எம்பெருமாட்டி என் வார்த்தைக்குப் பின்னமின்றி என் சொற்குள்ளாகவே நிற்குமெனப் பாங்கி தலைவனைத் தேற்றா நிற்றல்.

(125) அன்றேவென் றேங்குவ தென்னண்ண லேயெண்ணில்
[அன்பர்கட்கும்
பன்[2]னோ வொழித்தின்பம் நல்குங்குற் றாலப் பரஞ்சுடராம்
முன்னோர் செயற்கு ளெவையு முடிந்தென மொய்குழலா
ளின்னோர் மொழியுந் தவறாதென் சொற்குள் மிகநிற்குமே.

இறையவன் ஆணையி லெவையும்நின் றனபோற்
பிறைநுதல் என்சொற் பிழையா ளென்றது.

## பாங்கி கையுறை யேற்றல்

பாங்கி கையுறை யேற்றல்- என்பது, இரவு வலியுறுத்தி ஊர் பெயர் கெடுதி வினவியவிடத்து மாற்றமின்றி யிருந்து பின்னும் இருவருமுள விடத்து அவ்வகை வினவுழி எதிர்மொழி கொடுத்த நாள் முதல் இதுவரையும் இரந்து குறைபெறாது தழையுங்கையுமாய் நின்று உள்ளமிடைந்தீர் இப்பால் நீவிர் கையுறைகொடுக்க யானும் வாங்கியவாற்றால், அவள் கொங்கையில் வாங்கியணைக்கும்படியாகத் தலைமகளை வனைவாயாகெனக் கைகளில் அளியா நிற்பேனெனப் பாங்கி தலைமகன் கையுறை ஏலாநிற்றல்.

(126) பெய்[3]யுறை [4]சாரல் அருவிக்குற் றாலப் பிரானெனுங்கூர்
நெய்யுறை சூலத்தன் வெற்பி னிலேகண் ணியுந்தழையுங்
கையுறை யாய்க்கை யுறத்தந்த தாலுங்கொங் கையணைக்க
மையுறை வார்குழல் கைக்கொடுப் பேன்வனை யச்சொல்லியே.

இரந்தீர் ஈய்ந்தீர் இருந்தழை யவளைப்
புரந்தீ ரென்னப் புனைவே னென்றது.

---

1 பஞ்சகிருத்தியம்-படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்கள். 2 நோ-துன்பம். 3 உறை-மழைத்துளி. 4 சாரல்-மலைப்பக்கம்.

### கிழவோனாற்றல்

கிழவோனாற்றல் — என்பது, யான் எனது என்னும் ஆணவ மலத்தை எந்த உபாயத்தால் ஒழியக் கடவெமெனத் தங்களில் அஞ்சி அம்மலபேதத்தை நீங்கற்குச் செந்தமிழ் வல்லோர்கள் குற்றாலநாயகர் திருநாமங்களைத் தரித்து அருந்தமிழோதத அந்தப் பாமாலையைத் திருவடிக்குகந்ததுபோல நாங்கொணர்ந்த கையுறையை நாம் வருந்துவது கண்டே ஏற்றுக்கொண்டாளென்று தலைமகன் ஆற்றாநிற்றல்.

(127) தாமஞ்சு [1]மைமலம் நீத்தப் புலவர்குற் றாலர்திரு
நாமந் தரித்திய லோதற் கிரங்கிநற் பாவெனத்[2]தா
ளாமம் புயத்துக் கவரேற் றெனமின் னகமலர்ந்து
காமம் வருத்துதல் கண்டேற்றுக் கொண்டனள் கையுறையே.

[3]இகுளை கையுறை யேற்றமை கண்டு
[4]வெகுளையில் வேலோன் மிகமகிழ்ந் தாற்றல்

இவற்றுள், பாங்கி கூற்றாயின வெல்லாம் குறைநேர்தற்கும், தலைவன் கூற்றாயின வெல்லாம் மடற்கூற்றொழிதற்கும் உரியவாமெனக் கொள்க.

### மெலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தல்



இறைவன் றனக்குக் குறைநேர் பாங்கி
இறைவிக் கவன்குறை யுணர்த்தலு மிறைவி
அறியாள் போன்று குறியாள் கூறலும்
பாங்கி யிறையோற் கண்டமை பகர்தலும்
பாங்கியைத் தலைவி மறைத்தலும் பாங்கி
என்னை மறைப்ப தென்னெனத் தழாலும்
கையுறை புகழ்வுமென் றிவ்விரு மூன்றும்
மெலிதாகச் சொல்லிக் குறைநயப் பித்தற்கும்
வலிதாகச் சொல்லி மறுத்தற்கு முரிய.

### இறைவன் றனக்குக் குறைநேர் பாங்கி இறைவிக்கு அவன் குறையுணர்த்தல்.

இறைவன் றனக்குக் குறைநேர் பாங்கி இறைவிக்கு அவன் குறையுணர்த்தல்—என்பது, குற்றால நாயகர் திருவடிகளைச் சிந்திப்

---

1 மை மலம்-குற்றத்தைத்தரும் அழுக்கு. அஃதாவது அகங்கார மமகாரங்கள்.
2 தாள் + ஆம் + அம்புயத்துக்கு-பாததாமரைக்கு. 3 இகுளை-தோழி.
4 வெகுள் + அயில் வேலோன்—கோபத்தையுடைய கூரிய வேலாயுதத்தையுடைய தலைவன். எதுகை நோக்கி ஐ சாரியையாக வந்தது.

போர்கள் அறம் பிழையாது அங்கிலையொருங்குதல் போலும் ஒரு பெரியோன் இவ்வரையின்கண் நீங்காது நின்று தழைபெறுவீரெனச் சொல்லலுற்றதை யாதென்று நிச்சயிப்போமெனப் பாங்கி தலைவிக்குத் தலைவனது குறையை யுணர்த்தாநிற்றல்.

(128) [1]கறங்கரு வித்துறைக் குற்றாலர் பாதங் கருதுகின்றோர்
அறங்க ளெனும்வழி நீங்காதல் போலுமோர் அண்ண
[லென்றும்
[2]பிறங்கலின் வாயக லாதே தழைபெறு வீரென்றுற்றால்
நிறங்கிளர் ஒண்டொடி யீரென்னென் றேநிலைத் துச்சொல்
[வதே.

அறநிலை பிரியா அரனடி யார்போல்
விறல்வரை யொருவன் மேவலென் னென்றல்.

### இறைவி யறியாள் போன்று குறியாள் கூறல்.

இறைவி யறியாள் போன்று குறியாள் கூறல்—என்பது, இவ்வரையிடத்து நம்மை, வார்குழை என்றும், கொம்பு என்றும் அளகாடவியினது அழகிய கொடி என்றும் குறித்து, அங்ஙனம் தழை என்று பெய்யக் கருதி வந்ததாகும் நீ கண்ட தண் முகிலானதென்று இதனை அறியாதாரைப்போலப் பாங்கி மேகத்தின்மேல் வைத்துக் கூறாநிற்றல்.

(129) பிழையென் றெனைப்பணி கொள்ளாதெள் ளாதுதம் பொற்
[கருந்தாள்
நுழையென்று சென்னி தருவோர்குற் றாலமுன் னோர்வரைவார்
குழையென்றுங் கொம்பென்றுங் கூந்தலங் கானக் கொடிய
[தென்றும்
தழையென் றுதவி செயவந்த தாகுமித் தண்முகிலே.

கண்டது முகில்நீ கேட்டது முகிற்குரல்
உண்டல தொன்றல வென்றுரை யாடல்.

### இறையோற் கண்டமை பகர்தல்.

இறையோற் கண்டமை பகர்தல்—என்பது, இவ்வயிற்பொன்னஞ் சிலைபோல்வாள் ஒருத்தி கொண்ட நாணொழுக்கமும் சினைத்துக் கறுத்த [3]சூசுகமும் [4]மறலியனைய கண்ணின்வலையும் கண்டால் மருள்வதின்றி யான்கற்ற கல்வி எத்துணைவலி செய்யுமென்று ஒரு

1 கறங்கு-ஒலிக்கின்ற. 2 பிறங்கல்-மலை. 3 சூசுகம்-முலைக்கண். 4 மறலி-யமன்.

பெரியோன் என்முன்னே கூறக் கண்டேனெனப் பாங்கி தலைவிக்கு மெல்லிது கூறி குறை நயப்பியா நிற்றல்.

(130) தலைகொண்ட கையினர் குற்றால நாதர் தடவரைவாய்ச்
[1]சிலைகொண்ட [2]நாணுஞ் [3]சிலீமுக முந்திகழ் கூற்றனகண்
வலையுங்கண் டால்மட மாதே மருண்டு மயங்கலன்றிக்
[4]கலையென் செயுமென ஓரிறை கூறக்கண் டேனணங்கே.

[5]சிலை[6]கலை யகற்றத் தீர்ந்தே னென்றவன்
நிலையது கண்டோள் நெறிகுழற் குரைத்தல்.

### பாங்கியைத் தலைவி மறைத்தல்.

பாங்கியைத் தலைவி மறைத்தல்-என்பது, உன்னை, யாவற்றையும் மதித்தறிய வல்லவளாதலால் மதிமுகமாதெனச் சொல்வார்கள். இப்பால் மதிப்பின்றி என்னைப் பார்த்து இவ்வயில் இல்லாததொன்றைச் சொல்லவந்தாயானால் இதுவும் தீவினைப் பயனல்லது வேறில்லை எனத் தலைமகள் வலிதாக மறுத்துக் கூறாநிற்றல்.

(131) நதியணி வேணியர் குற்றாலர் வெற்பிலெந் நாளுமுன்னை
[7]மதிமுக மாதெனச் சொல்வாரிந் நாள்[8]மதி யாமலிந்தப்
பதியினில் லாததொன் றைப்பகர்ந் தாயென்னைப் பார்த்திதுவும்
விதிவச மேயன்றி வேறில்லை யுன்னை வெகுள்வதென்னே.

மதித்திலை யென்ன வலிதொடு மறுத்து
விதிப்பய னென்ன மெல்லிய லுரைத்தல்.

### பாங்கி என்னை மறைப்பது என்னெனத் தழால்.

பாங்கி என்னை மறைப்பது என்னெனத் தழால்—என்பது, குற்றால நாயகர் குழல்வாய்மொழிநாச்சியார்க் குணர்த்திய பரமாந்தரங்கத்தை ஒருதலைச் சுகப்பிரம இருடியறியாநின்றார். அது நிற்கட்டும். நீ யெனக்கு உயிர்க்குயிராயிருந்தும் நின்னுள்ளத்துள்ள அந்தரங்கத்தை என்னைத் தழாலின்றி மறையாநின்றாய் உனக்கு இந்தக்

1 சிலை-உருவச்சிலை, வில். 2 நாண்-வெட்கம், வில்லின் கயிறு. 3 சிலீமுகம்—அம்பு, முலைக்கண். 4 கலை-கலைமான், கல்வி. இதில் வேட்டைக் கருவிகளுக்கும் மங்கையின் உறுப்புகளுக்கும் சிலேடை தோன்றுதல் காண்க 5 சிலை—உருவச்சிலை. 6 கலை —கல்வி. 7 மதி முகமாது-முகத்தைப் பார்த்து மதிக்கும் மாது. 8 மதியாமல்-நிதானித்து அறியாமல்.

குணமெதுக்கு இப்படியானது? இருவர்க்கும் ஒரு வேறுபாடுவரவோ? வாராதவண்ணம் உள்ளக் களவைச் சொல்வாயாகெனப் பாங்கி தலைமகளைத் தழுவாநிற்றல்

(132) [1]வனக்கன கச்சடைக் குற்றால ருங்குழல் வாய்மொழிமின்
றனக்கு மறைமொழி ஓதல் [2]சுகரறிந் தாரறிந்தும்
எனக்கு மறைமொழி பேசவந் தாயிது வேவெனக்கும்
உனக்கும் பிரிதல் வரவோ[3]விள் ளாய்கள்ள உள்ளத்தையே.

மறையா தவர்க்கு மறைப்பது வெறுப்பென
நிறையாட் டழுவி நேர்படுத் தியது.

### கையுறைபுகழ்தல்.

கையுறை புகழ்தல்—என்பது, முன்னொரு போழ்தினில் மகாமேரு ஒத்த தனத்தைக் கொடுத்தவர்க்கு இந்த முத்துமாலிகையைத் தரித்து அழகு பார்ப்பாயாகென எனது கையில் தாராநின்றார். நீயும் நான் வாங்கினவாறே வாங்கிக்கொள்வாயெனப் பாங்கி மெலிதாகக்கூறி குறை நயப்பியாநிற்றல்.

(133) பாருல கேழுமோ ரேழு மளாவிப் படர்ந்தெழும்[4]பால்
வாருதி நஞ்ச மருந்துங்குற் றாலர் வரையின்மகா
மேருவைப் போற்றன மீய்ந்தவட் கிந்தவெண் முத்தமணித்
தாருற வேபுனை யென்றுதந் தாரிது தாழ்குழலே.

கெய்யுறை குழற்கு நேர்ந்துயிர்ப் பாங்கி
கையுறை காட்டிக் கருத்தொருப் படுத்தல்.

இவற்றுள், பாங்கி கூற்றாயினவெல்லாம் மெலிதாகச் சொல்லிக்குறை நயப்பித்ததற்கும் தலைமகள் கூற்றாயின வெல்லாம் வலிதாகச் சொல்லி மறுத்தற்கும் உரியவெனக் கொள்க.

---

1 வனம்-அழகு. 2 சுகர்—சுகப்பிரம்ம இருடி. 3 விள்ளாய்—சொல்வாய்.
4 பால்வாருதி—திருப்பாற் கடல் வாரிதி என்பது எதுகை நயம் நோக்கி வாருதி என்றாயிற்று.

## வலிதாகச் சொல்லிக் குறைநயப் பித்தல்.

தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தலும்
மறுத்தற் கருமை மாட்டலும் தலைவன்
குறிப்புவே றாக நெறிப்படக் கூறலும்
தலைவியை முனிதலும் தலைவி பாங்கி
தன்னை முனிதலும் தன்கைக் கையுறை
ஏற்றலு மெனமுறை சாற்றிய ஆறும்
வலிதாகச் சொல்லிக் குறைநயப் பித்தற்கும்
மெலிதாகச் சொல்லி மேவற்கு முரிய.

(ந. அ. களவு. 32)

## தோழி கிழவோன் றுயர்நிலை கிளத்தல்.

தோழி கிழவோன் றுயர்நிலை கிளத்தல்—என்பது, வெவ்விய [1]தழலின்கட்பட்ட மெழுகுபோல உள்ளமும் மேனியும் கரைந்துருகப்படும் [2]பருவரலைத் தான் பொறுத்துய்த்தானாயினும் கண்டவர்க்குத் தேறக் கூடாததோர் பாவம் வந்து சித்தித்ததெனப் பாங்கி தலைமகன்றுயர் நிலையதனைத் தலைமகட்கு வலிதாகச் சொல்லாநிற்றல்.

(134) நடுங்க நமனை யுதைத்துச் சினத்துநண் ணார்புரத்தைச்
சுடுந்தண்ண ளியினர் குற்றாலர் வெற்பினற் றேன்றல்மின்னோ
கொடுந்தழல் வாய்மெழு காயுள்ள மேனி குழைந்துருகப்
படுந்துயர் கண்டவர் தேறுவ ரோவென்ன பாதகமே

கண்டவர் தேறக் கடவதன் றிறைவன்
கொண்டன துயரங் கொடியே யென்றது.

## தலைவன் மறுத்தற் கருமை மாட்டல்.

தலைவன் மறுத்தற்கருமை மாட்டல்—என்பது, பூலோகத்துக்கு ஒரு முதல்வனாகிய தலைமகன் ஒரு சேக்கையினிடத்து இரண்டு [3]சுவாசகம் இருந்து ஒன்றோடொன்று குதலை கொஞ்சுதலைக் கண்டு ஆற்றாமையால் என்னொடு பேசுவதுமின்றி வசமழிந்து போய்நின்றான். இனி எவ்வண்ணம் உயிர்வாழ்வானோ? எனப் பாங்கி தலைவி முற்கூறா நிற்றல்.

1 தழல்-தீ 2 பருவரல்-துன்பம், 3 சுவாசகம்-கிளி.

(135) புவிக்குமிக் கார்கிள்ளைப் புள்ளிணை [1]சேக்கைப் புலம்பு
[மென்சொற்
செவிக்குப் புகலுற்றுப் [2]பேசாநின் றார்திகைத் தும்பர்[3]மகத்(து)
அவிக்கு விரும்பிய குற்றாலத் தெம்பர னூர்முகில்கள்
கவிக்குந் தடங்குடு மித்திரி கூடத்துக் கன்னிகையே.

புள்ளிரண் டொருங்கு புணர்தலைக் கண்டவன்
விள்ளுவ தின்றுமெய் மறந்தமை யுரைத்தல்.

### தலைவன் குறிப்பு வேறாக நெறிப்படக்கூறல்

தலைவன் குறிப்பு வேறாக நெறிப்படக் கூறல்-என்பது, வெண்ணிறத்த சிங்கத்துக்கு ஒப்பாக வெள்ளைசாத்திக்கொண்டு கிழிபிடித்த கையினனாய் நம்மூர்த் தெருவே மடலூர்ந்து வருவதோர் துணிவுடைத்து அவ்விறையவர்க்கென்று தோழி தலைமகட்கு உரையாநிற்றல்.

(136) [4]குறுகு முருக்கொண் டுலகளந் தோன்மண் குடைந்து
[மெய்தாத்
தறுகட் கழலினர் குற்றாலர் வெற்பில்வெண் சாந்துபுனைந்
[5]தறுகி னுருக்கொண்டு மே[6]புல்லு மாவு நடாத்திநம்மூர்
[7]மறுகில் வரவுந் துணிவுண் டவர்க்கொளிர் வாணுதலே.

அறுகி னுருவா யருங்கிழி பிடித்து
மறுகிடை யிறைவர் மடலே றுரைத்தல்.

### தோழி தலைவியை முனிதல்

தோழி தலைவியை முனிதல்—என்பது, நித்தமும் மருதத் தலைவனைவோர் அண்ணல் அந்நிலத்துத் தெய்வமாகிய மருத்துவனைப் போல இந்தத் தழையைக் கொணர்ந்து தர, யான் வாங்கியது உனது சித்தப் பிரமை தீர்த்தற்கா மென்றல்லவோ? அன்றி யுனக்குச் செய்த குறை யாதென்று பாங்கி தலைவியை முனியாநிற்றல்.

(137) திருத்தகு நன்னகர்க் குற்றாலர் வெற்பிற் றினமுமன்பர்
[8]மருத்துவன் போலவும் வந்தித் தழைதர வாங்கியதுன்

---

1 சேக்கை-பறவைக்கூடு. 2 பேசாநின்றார்-பேசாது நின்றார் என்பது ஈறு கெட்டு வந்தது. 3 மகத்துஅவி-யாகத்தில் அவிர்ப்பாகமாகிய தேவர்க்குள்ள உணவு. 4 குறுகும் உருக்கொண்டு உலகளந்தோன்—வாமனனாகிய திருமால். 5 அறுகு-சிங்கம். 6 புல்லுமா-பனைமடற்குதிரை. 7 மறுகு—தெரு. 8 மருத்துவன்—இந்திரன், வைத்தியன்.

கருத்து மருண்டு பிதற்றாத தற்கெனக் கண்டலவோ
[1]குருத்து முலைநகை மாதே யுனக்கென் குறைசெய்ததே.

பிழையாய் வந்த பிதற்றுநீங் குதற்குத்
தழைவாங் கியது தகவல வோவெனல்.

### தலைவி பாங்கிதன்னை முனிதல்

தலைவி பாங்கிதன்னை முனிதல்—என்பது, முன்னமே வேட்கையை முனியாது போனேன். ஆதலான், இன்று தலைமகன் கொடுத்த தழையைக் கொணர்ந்தாய்; வலிதாக மறுத்தவிடத்து வெகுளவுஞ் செய்தாய். மற்றினி எனக்கு முனிவேதுக்கு. தமர்களால் எண்ண மேதுக்கு. நீ கொணர்ந்த தழையை நீயே எனக்கு வனைவாயாக. துணிந்தபின் வெகுண்டாவ தென்னவென்று தலைமகள் வெகுட்சி தணியாநிற்றல்.

(138) வினைமுனிந் தோர்திருக் குற்றாலர் வெற்பினில் வேட்கையது
தனைமுனிந் தேனிலை யின்றண்ணல் தந்த தழைகொணர்ந்தாய்
எனைமுனிந் தாயின் றினிமுனி வேன்றமர் எண்ணமுமேன்
[2]வனைமுனிந் தென்ன துணிந்தபின் ஒண்டழை வாணுதலே.

வெகுண்டென் மென்றழை [3]வேயெனத் தோழிக்கு
[4]உகண்டெழு கயற்க ணுடையா ளுரைத்தல்.

### தன்னகைக் கையுறை யேற்றல்

தன்னகைக் கையுறை யேற்றல்—என்பது, நின்னது அன்பையும் அருமையையும் யான் அறியேனென்று எண்ணவேண்டியதில்லை. இது தாய் தமர்க்குப் புலப்படுங்கொல் என்று பயந்து மறைத்தேன். நீ கொணர்ந்த தழையை நீயே நின்கையினுற் புனைந்தருளுவாய் நீயறியாத தொன்றை யானோ அறிவேனெனத் தலைமகள் மெலிதாகச் சொல்லிப் பாங்கிதன்கைக் கையுறை ஏலாநிற்றல்.

(139) நீயறி யாவகை யானறி யேனிந் நினைவுதமர்
தாயறி யாததற் காய்ப்பகர்ந் தேன்மென் தழைநின்கையால்
வேயறி யாளென்றெண் ணுதேநின் அன்பை விரும்பலர்பாற்
போயறி யாத்திருக் குற்றால நாதர் பொருப்பிடத்தே.

குறைநயப் பித்த கோல்வளை கைத்தழை
இறைமகள் தருதிஎன் றேலா நிற்றல்.

---

1 குருத்து-இளமை. 2 வனை-அணிவாய். 3 வேய்-அணிவாய். 4 உகண்டு—பாய்ந்து.

இவற்றுள், பாங்கி கூற்றுயினவெல்லாம் வலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தற்கும், தலைவி கூற்றுயின எல்லாம் மெலிதாகச் சொல்லி மேவற்கும் உரியவாமெனக் கொள்க.

### பாங்கியிற் கூட்டத்து எடுத்துக் கூறிய பகற்குறி.

இறைவி கையுறை எற்றமை பாங்கி
இறைவற் குணர்த்தலும் குறியிடங் கூறலும்
குறியிடத் திறைவியைக் கொண்டு சேறலும்
குறியிடத் துய்த்து நீங்கலும் இறையோன்
இடத்தெதிர்ப் படுதலும் இயைதலும் புகழ்தலும்
விடுத்தலும் பாங்கி மெல்லியற் சார்ந்து
கையுறை காட்டலும் மையுறை கண்ணியைப்
பாங்கிற் கூட்டலும் நீங்கித் தலைவற்கு
ஓம்படை சாற்றலும் உலகியல் மேம்பட
விருந்து விலக்கலும் பெருந்தகை விருந்திறை
விரும்பலும் என்னத் தெரிந்தபன் மூன்றும்
கூட்டல் முதலா வேட்டல் ஈறுப்
பாங்கிக்கு வகுத்த நான்கிற் கும்உரிய. (ந. அ. களவு. 33)

### இறைவி கையுறை யேற்றமை பாங்கி இறைவற் குணர்த்தல்.

இறைவி கையுறை யேற்றமை பாங்கி யிறைவற் குணர்த்தல்—என்பது, நீவிர் கொடுத்தருளிய தழையை யான்சென்று கொடுக்கும்போது, குற்றாலநாயகர் திருவடிகளைச் சிந்தித்து இரண்டு கையாலும் வாங்கிக் கொங்கைத் தலத்தோடணைத்துக் கண்ணுக்கு எழுதிய மைபடும்படி [1]வதனாரவிந்தத்தில் வைத்துக்கொண்டு முடிமேல் தரித்தருளாநின்றாள் எனத் தலைமகள் கையுறை யேற்றதைப் பாங்கி தலைவற்குச் சொல்லாநிற்றல்.

(140) [2]பொய்யா ரகம்புகச் செய்யார் குழல்மொழிப் பூவைபுணர்
மெய்யார்குற் றாலர் பதங்கள்சிந் தித்துமின் னாளிருசெங்
கையார வாங்கித் தனத்தோ டணைத்திரு கண்களிடும்
மையார வைத்துத் தழைகுழல் மேல்வைத்தாள் அண்ணலே.

மைவிழி மென்றழை வாங்கும் போழ்திற்
செய்வழி பாடு செல்வற் குரைத்தது.

---

1 வதனாரவிந்தம்-முகத்தாமரை. 2 பொய்யார்-பொய்யை யுடையவர்.

### குறியிடங் கூறல்.

குறியிடங் கூறல் — என்பது, மேலே மேகங்கள் நிரை நிரையாகச் சாய்ந்து இருள் நிறையாநின்ற பொழிலும், அதற்குள் அருவியம்புனல் கொழித்து முத்தங்களைப் பரப்பக் குளிர்ந்து நிலவெறிப்பதோரிடமும் அங்ஙனுள்ளது அதுவே உமக்கு ஆடிடந்தானும் எனப் பாங்கி குறியிடங் கூறுநிற்றல்.

(141) [1]மரைபுரை தாளினர் குற்றால நாதர் வரையினிற்கார்
நிரைநிரை சாய்ந்திரு ளார்க்கும் பொழிற்குள்வெண் [2]ணித் [திலத்தைக்
[3]குரையரு விப்புனல் சாடிக் குளிர்நில வேயெறிக்குந்
தரைபுரக் குங்கொற்ற வாவுனக் காடிடந் தானதுவே.

நீடிய பொழிலின் நீழலந் துறையே
ஆடிடம் உமக்கென [4]அங்கனை காட்டல்.

### குறியிடத்து இறைவியைக்கொண்டு சேறல்

குறியிடத்து இறைவியைக் கொண்டுசேறல் —என்பது, முகைவிரியாநின்ற பூங்கொத்துக்களிலேயுள்ள மதுபானங்களைப் பண்ணி வண்டுகள் அதனிடத்து ஆய்தலையும் இசை பயிற்றுதலையும் பார்க்கச் செல்வதுபோலச் சென்று, தலைமகன் றலைப்பெய்துவரச் செல்வாயெனப் பயிற்றுவித்துக்கொண்டு தலைமகளைப் பாங்கி குறியிடைக் கொண்டு செல்லாநிற்றல்

(142) [5]ஏடலர் பூம்பொழில் வாய்மது வேயுண் டிசைவரிவண்
டாடலும் பாடலும் பார்ப்பது போலச்சென் றன்பர் [முன்போய்க்
கூடல்செய் வாயென்புங் [6]கார்மா [7]வெயிறுங் கொலையரவுஞ்
சூடலங் காரத்தர் குற்றாலர் வெற்பினிற் றோகையரே.

வண்டமர் பொழிற்செலு மாறென மெலப்போய்க்
கண்டவற் கூடெனக் கலந்தவட் சேறல்.

### குறியிடத்துய்த்து நீங்கல்.

குறியிடத்துய்த்து நீங்கல்—என்பது, நின்னது இடையினாலும் முலையினாலும் பழிப்புற்றுக் காடுபுக்குழன்ற சிங்கமும் யானையும் உன்

1 மரை-தாமரை என்பதன் முதற்குறை. 2 நித்திலம்-முத்து. 3 குரை-ஒலி. 4 அங்கனை—பெண். 5 ஏடு-பூவிதழ் 6 கார்மா-பன்றி. "ஏனக்கொம்பும் இளவாமையும் பூண்டு" (தேவா) 7 எயிறு—கொம்பு.

னைக் காணில் இங்கும் பழிப்பிக்கவோ வந்தானென்று பகையுற்று உடைந்து செல்லும். அவைகளுன்னைக் காணுமுன்னமே இவ்வனத் தயலேசென்று அவற்றையெல்லாம் மெல்லப் போக்கிவிட்டு நின்று அங்ஙனே உனக்கான தழையுங் கொணர்வேன். இவ்விடத்து நில்லாய் எனச் சற்றுப்போது பாங்கி நீங்கிநிற்றல்.

(143) விடையே நடாவிய குற்றால நாயகர் வெற்பினிற்சிற்
றிடையாற் றனத்துணை யாற்சிங்கம் [1]வேழ மிடைந்துபகைத்
[2]துடைவாய்ச் செலுமுனைக் காணின் முனேசென் றெதுக்கி [3]வனப்
புடையேகி மென்றழை யுங்கொணர் வேன்நில்லும் பூவையரே.

வல்விலங் கொரீஇ வருவேன் நில்மினென்
[4]றல்வளர் பூங்குழ லாங்க கன்றது.

**இறையோனிடத்தெதிர்ப்படுத்தல்**

இறையோனிடத் தெதிர்ப்படுத்தல்—என்பது, குற்றால நாயகர் தம்மை மறவாத தொண்டர்மேற் கருணைநோக்கி யிருப்பதுபோலும், வேயினம் [5]மூழ்த்துச் சிதறிய முத்தங்கள் உறுத்த நடந்து வந்து எம்மைக் காக்கவேண்டிற்றன்றோ, இங்ஙன் நின்றதெனத் தலைவன் தலைவிமுன் வந்து எதிர்கூறுநிற்றல்.

(144) உமைக்காக்கஞ் சேர்திருக் குற்றால ருள்ளத்தி லுள்ளுமன்பர்
தமைக்காக்க நோக்கி யிருப்பது போற்செந் தளிர்ப்பதங் கொண்
[6]டமைக்காக்கம் நீங்கிச் சொரிதர ளப்பரல் ஆற்றிடைவந்
தெமைக்காக்க வேண்டிற்றன் றோவிங்ங னேநின்ற தேந்திழையே.

பூங்குழல் நின்ற பொலிவினை யறிந்தோன்
ஆங்குவந் தொருப்பட் டருமை கூறல்.

**இயைதல்.**

இயைதல்—என்பது, அந்நாளிற் கோவலரிடத்துங் கோக்களிடத்துங் கன்மாரி தாக்காமற் கோவிந்தன் கோவத்தனகிரியால் மறைத்ததுபோலும், மேன்மேல் மன்மதன் சரமாரிகள் தாக்காமல் இன்றைக் கெதிர்நின்று தன்னது தனகிரியால் மறைத்தது இத்தலைமகளெனத் தலைமகன் மகிழ்ந்து கூறுநிற்றல்.

---

1 வேழம்—யானை. 2 உடைவாய்—தளர்வாகி. 3 வனப்புடை—காட்டுப்பக்கம். 4 அல்வளர்—இருள்மிகுந்த. 5 மூழ்த்து—முதிர்ந்து. 6 அமை—மூங்கில்.

(145) [1]அன்று னிரையும் புரப்பக்கன் மாரி யடாதரிநீள்
குன்றூன் மறைத்தனர் குற்றால வெற்பினிற் கோரமதன்
இன்[2]றாகத் திற்சர மாரிபெய் யாம லெனக்குழன்னே
நின்றுவ லாய்த்தனக் குன்றால் மறைத்ததிந் நேரிழையே.

மாயோன் கோவத் தனமலை போலும்
ஆயோள் முலையெனத் தோன்றலுண் மகிழ்தல்.

## புகழ்தல்.

புகழ்தல் — என்பது, இணைவிழிவேலால் எற்றுண்டு புண்பட்ட நெஞ்சத்து அவள் கொங்கைக் கண்ணாகிய சிலீமுகம் தைத்தும் தழாரு பெறுமிடத்துச் சற்றுஞ் சுறுக்கிட்டுத் தையாமல் இன்பமுற்றமையால் தலைமகளது தனவரையின் மேலே சமானகரணி என்னும் மருந்துண் டெனத் தலைமகன் புகழாநிற்றல்

(146) சுற்றுஞ் சடாதரர் குற்றாலர் வெற்பிற் றுணைவிழிவேல்
எற்று முரத்திற் [3]சிலீமுகந் தைத்து மினிதணைக்கிற்
சற்றுஞ் சுறுக்கின்றி இன்புற லாற்பொற் றனவரைமேல்
முற்றுஞ் [4]சமான கரணியுண் டோஇந்த மொய்குழற்கே.

மனனுமத் தழீஇயவன் மடவால் கொங்கைக்
கனவரைச் சமான கரணியுண் டென்றல்.

## தலைமகன் விடுத்தல்.

தலைமகன் விடுத்தல்—என்பது, காமதகனராகிய குற்றால நாயகர்சொரூபத் தியானத்தை யடைந்து பேதத்தை நீத்த பெரியோர்கள் ஓரிடத்து அளிக்கவேண்டிய காலத்து அழைக்க வந்து வேண்டினவற்றைக் கொடுத்துப்போம் காமதேனுவைப்போல வந்து, எனக்குத் தரவேண்டின போகமெல்லாந் தந்தாய். இனி ஆயத்துச் செல்கெனத் தலைவியைத் தலைமகன் விடுத்தல்.

(147) [5]பொருங்கா மனைப்பொருங் குற்றாலர் நேயத்தைப் பூண்டு
ளத்தால்
அருங்காம நீக்கு முனிவோர் அழைக்கவந் [6]தற்புமின்னே

1 அன்றூன்-மறைத்தனர்-கண்ணன் கோவர்த்தன கிரியைக்குடையாகப் பிடித்த வரலாறு. 2 ஆகம்-மார்பு. 3 சிலீமுகம்-அம்பு, முலைக்கண். 4 சமானகரணி-இர ணத்தழும்பு தீர்க்கும் மருந்து. இதில், மலைகளில் மருந்து இருப்பதுபோல தனவரையில் சமானகரணி இருப்பதாகச் சொல்லும் நயம் காண்க. 5 பொரும் —பிரிந்தாரொடுப்போர்செய்யும். 6 அற்பு மின்னே-அன்புள்ள பெண்ணே!

இருங்காம தேனு நினைக்கின்ற பானந்தந் தேருதல்போல்
தருங்காம போகந்தந் தாயினி யாயந் தனிற்செல்கவே.

1தேனுவைப் போலத் தெவிட்டாப் போகம்
தானுத வினையர் தன்னாக வென்றல்.

**பாங்கி மெல்லியற்சார்ந்து கையுறைகாட்டல்.**

பாங்கி மெல்லியற்சார்ந்து கையுறைகாட்டல்—என்பது, தலைவற்குக் குறியிடங்கூறிய தோழி அவ்விடத்துத் தலைவியைக்கொண்டு சென்று இருவர்க்கும் நேர்நின்று சொல்லாது அங்ஙன் நிறுத்தி அவர்கள் தம்மிற்கண்டு கூடிப்பிரிந்துழி வந்து, உன்னை இங்ஙன் நிறுத்திச்சென்றேகியது இந்த மலர்த்தொடைகொணர்ந்து உனக்குத் தருவதாக என்று அத்தலைமகளைப் போற்றாநிற்றல்.

(148) [2]செறுத்தார் புனற்குள நன்ன கரார்மெய் சிவந்துகண்டங்
கறுத்தார்குற் றூலர் வரையினில் லாயென்று கன்னியுன்னை
நிறுத்தே கினதிம் மலர்கொய்து மேகண்ணி யாய்ப்பிணித்து
மறுத்தெதிர் வந்து புனைவதற் காய்நெறி வார்குழற்கே.

நிறுத்தவட் சென்றோள் நேர்ந்தவண் தாங்கோர்
[3]நறுந்தொடை காட்டி நன்னுதற் பேணல்.

**மையுறுகண்ணியைப் பாங்கிற்கூட்டல்.**

மையுறுகண்ணியைப் பாங்கிற்கூட்டல்—என்பது, நாமிருவருமாகத் தனிவந்து நெடும்பொழுதாயிற்று. பந்து புடைக்கின்ற மாதர்களும் தேடாநிற்பர். ஆதலால், ஆயக்கூட்டத்து விரைந்துசெல்வோம் எனப் பாங்கி தலைவியைப் பாங்கிற்கூட்டாநிற்றல்.

(149) முடிக்கின்ற பைங்கதிர் வெண்பிறைச் செஞ்சடை முன்ன வன்றான்
நடிக்கின்ற சித்ர சபையுடை யான்நன் னகர்வரைமேல்
துடிக்கின்ற சேற்கண்ணி யிங்குவந் தேபொழு தோமிகப்பந்
தடிக்கின்ற மாதருந் தேடுவர் செல்குவ மாயத்துக்கே.

நீடின பொழுது நிற்பதன் றாயத்
தாடிடம் புகுவமென் றறிவைக் குரைத்தல்.

---

1 தேனு-பசு ஈண்டுக்காமதேனு. 2 செறுத்து + ஆர் + புனல் + குளம்-அணைகட்டி நிறைந்த நீரையுடைய தடாகம். 3 நறுந்தொடை-வாசனையுள்ளமாலை. இது எதுகைநோக்கி நறுந்தொடை என வந்தது.

## நீங்கித் தலைவர்க் கோம்படை சாற்றல்.

நீங்கித் தலைவர்க் கோம்படை சாற்றல்-என்பது, வடவாக்கினியினும் கொடிய காமாக்கினியை இருவர்க்கும் இடைநின்று யான் ஆற்றியது என்பலமன்று; தழல்நிறக் கடவுளாகிய குற்றாலரைச் சிந்தித்துப் பழகிய வாசனுபலம். ஆதலாலே, ஏக யோசனையாகிய நாம் ஒரு மூவர்க்கும் குற்றம் வாராதவண்ணம் ஓம்புதலாக நும்மூர் போய் அடைவீரெனப் பாங்கி தலைவியை நீங்கி வந்து தலைவர்க்கு ஓம்படை சாற்றுநிற்றல்.

(150) [1]பொருவற்ற காமத் தழலை யுனக்குமிப் பூவையுடன்
இருவர்க்கும் யான்நடு நின்றாற் றியதெரி வண்ணமுற்றுச்
[2]சொருவக்குற் றாலரை நெஞ்சாற் பழகித் தொழும்பலன்நம்
மொருவர்க்கு மே[3]நவை வாராதின் றேம்பி நும் மூர்செல்கவே.

[4]நாம்ப லொருமூவர்க்கு நண்ணா
தோம்பல் செய்துநு மூர்புக வென்றது.

## உலகியன் மேம்பட விருந்திறை விலக்கல்.

உலகியன் மேம்பட விருந்திறை விலக்கல்—என்பது, இன்றைக்கோர் விருந்தாக வைகி எங்கள் உணவாகிய தினையமுதும் தேனுமாக அமுதுசெய்துகொண்டு இவ்வரையினுள்ள வளங்களையெல்லாம் பார்த்துகந்து நாளைச்செல்வீராகெனப் பாங்கி உபசரியா நிற்றல்.

(151) தண்டேனும் வெண்டினை [5]மூரலு மேவிருந் தாகச்செய்ய
உண்டே மனங்களிப் பாயிவ் வரைவள னுள்ளதெல்லாங்
கண்டே குகபங் கயத்தடத் துந்[6]துணர்க் [7]காவிடத்தும்
வண்[8]டேழ் இசைபயில் குற்றால நன்னகர் மன்னகர்க்கே.

வெண்டினை மூரல் விருந்துண வாகக்
கொண்டுசெல் வீரெனக் கோற்றொடி விலக்கல்.

---

1 பொருவு-ஒப்பு. 2 சொருவம்-வடிவம். 3 நவை-குற்றம். 4 நாம்பல்—குற்றம், குறைவு. 5 மூரல்—சோறு 6 துணர்—பூங்கொத்து 7 கா-சோலை. 8 ஏழ்இசை-குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம்.

### பெருந்தகை விருந்திறை விரும்பல்.

பெருந்தகை விருந்திறை விரும்பல்—என்பது, ஒருவர்க்கு விருந்து செய்யினும் கொள்ளினும் உலகறியச்செய்யலாம். உதராக்கினி தீர்ப்பது பாரமன்று. என்னுடைய காமாக்கினிக்கு இத்தனை அந்தரங்கமாகத் தலைமகளாகிய புத்தமுதத்தைக்கொணர்ந்தளித்தாய். இதுவொன்றே போதுமெனத் தலைமகன் விருந்திறை விரும்பாநிற்றல்.

(152) வைத்தாவ லாய்வந்த காமக் கனலையு மாற்ற[1]மின்னே
புத்தா ரமிழ்தைக் கொணர்ந்துதந் தாயிது போதுமல்லால்
இத்தா ரணியி லுதரக் கனலெவ ருந்தவிர்ப்பார்
முத்தா ரருவித் துறையார்குற் றூலர் முகில்வெற்பிலே.

[2]விம்மலை யாற்றும் விருந்தமு தினிலும்
[3]பொம்மலை மாந்தல் புதிதோ வென்றது.

இவற்றுள், பாங்கி கூற்றாயின வெல்லாங் கூட்டற்கும் வேட்டற்கும், தலைமகன் கூற்றாயினவெல்லாம் கூடற்கும் பாங்கியிற் கூட்டற்கும் உரியவாமெனக்கொள்க.

அற்றமில் சிறப்பினிவ் வறுபத் தொன்றும்
குற்றமில் பாங்கியிற் கூட்டத்து விரியே. (ந. அ. களவு. 34)

குறியிடங் கூறல் முதலாப் பெறலரும்
விருந்திறை விரும்பல் ஈறாப் பொருந்தப்
பகர்ந்தபன் னிரணடும் பகற்குறி விரியே. (ந- அ. களவு. 36)

பாங்கியிற் கூட்டம் முற்றும்.

## ஒருசார் பகற்குறி.

இரங்கல் வன்புறை யிற்செறிப் புணர்த்தலென்
றொருங்கிய மூவகைத் தொருசார் பகற்குறி. (ந. அ. களவு. 37)

கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்
பொழுதுகண் டிரங்கலும் பாங்கி புலம்பலுந்
தலைவன் நீடத் தலைவி வருந்தலுந்
தலைவியைப் பாங்கி கழறலும் தலைவி

---

1 மின்னே-பெண்ணே. 2 விம்மல்-காமத்துன்பம். 3 பொம்மல்—சோறு.

முன்னிலைப் புறமொழி மொழிதலும் இன்னுயிர்ப்
பாங்கியொடு பகர்தலும் பாங்கியச் சுறுத்தலும்
நீங்கற் கருமை தலைவிநினைந் திரங்கலும்
தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றலும்
சிறைப்புற மாகச் செறிப்பறி வுறுத்தலும்
முன்னிலைப் புறமொழி மொழிந்தறி வுறுத்தலும்
முன்னின் றுணர்த்தலும் முன்னின் றுணர்த்தி
ஓம்படை சாற்றலும் மேம்படு கிழவோன்
தஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தலும்
என்ற ஈரேழும் எல்லுக்குறி விரியே. (ந. அ. களவு. 38)

## கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுது கண்டிரங்கல்.

கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுது கண்டிரங்கல்—என்பது, குழல்வாய்மொழி நாச்சியாரும் குற்றாலநாயகர் அந்திவண்ணம் படைத்தல் கண்டன்றோ நீங்கினா லென்செய்யுமோ என்று ஒருகணமும் பிரியாதிருந்தாள். நம்மிடத்து வந்து அந்தத் தலைவருமோ பிரியாநின்றார் ஆயிடைச் [1]செக்கர்ப் பொழுதுமோ தழற்பிழம்புபோலெழுந்தது. இப்பொழுதினுக் கென்செய்வேனெனத் தலைமகள் இரங்காநிற்றல்.

(153) [2]கொந்த[3]ற் குழல்குழல் வாய்மொழி யாளுங்குற் றாலர்[4]அந்தி
யந்தச் சொரூபம் படைத்த தனாற்பிரி யாதிருந்தாள்
வந்தத் தலைவரு மோபிரிந் தார்[5]வன்னி போலெழுந்த
இந்தப் பொழுதினுக் கென்செய்கு வேன்சொல்லு
மேந்திழையே.

அந்திவண் ணார்க்கக லாளுமை யெனில்யான்
இந்த[6]அந் திக்கென் செய்வே னென்றது.

## பாங்கிபுலம்பல்.

பாங்கிபுலம்பல்—என்பது, பகற்குறிகொண்டு முடிக்குந் தலைமகன் நம்மிடமாகத் தமது நிறத்தவாகிய மாணிக்கத்தைக் கையுறை கொடாமல் சந்திரன் நிறத்தவாகிய முத்துமாலையைக் கொடுத்து மணந்தது பொறுப்பின்றியா மன்மதன் செங்களம்போன்ற மாலைப்

1 செக்கர்–செவ்வானம் 2 கொந்து–பூங்கொத்து. 3 அல்–இருள். 4 அந்தி அந்தச்சொரூபம்–அந்த அந்திவர்ணம் 5 வன்னி–தீ. 6 அந்தி-மாலைக் காலம்

பொழுதையும் விளைத்துவிட்டு ஆதித்தன் அத்தமனகிரியை யடைந் தான் எனப் பாங்கி தலைமகள் வருத்தங்கண்டு புலம்பாநிற்றல்.

(154) [1]கம்மாலை யும்புனை குற்றாலர் வெற்பிற் கனிந்திறைவர்
எம்[2]மாலை யுந்தலை விம்மா லையுந்தவி ரென்றுமுத்தின்
அம்மாலை தந்து புணர்க்தல் பொறுத்திலை யா[3]மதனன்
செம்[4]மாலை யுந்தந்து வெய்யோன் [5]விழுமலை சென்றனனே.

பொழுதுகண் டிரங்கும் [6]பூவைகண் டிரங்கி
விழுமலை சென்றவெய் யோனைநொந் துரைத்தல்.

### தலைவன் நீடத் தலைவி வருந்தல்.

தலைவன் நீடத் தலைவி வருந்தல்-என்பது, செக்கர்ப்பொழுதை எனக்குப் பகையாக வைத்துச்சென்ற தலைவர் பனிப்பகை உதயமாகியும் வரக் காண்கிலேன். இனி எனக்கு யாரையெல்லாம் பகை யென்பேன்? முன்னாள் அயன் எழுதிய வண்ணமே யென்னத் தலைமகள் வருந்தாநிற்றல்.

(155) தனிப்பகை மாலைய தாகவைத் தேகுந் தலைவர்சென்ற
[7]பனிப்பகை கண்டும் வரக்கண்டி லேன்பல தாய்க்கருவின்
[8]செனிப்பகைத் தென்னைப் புரந்தோன்குற் றாலச் செழுங்கிரிவாய்
இனிப்பகை யாரென்று சொல்வேன் அயன்முன் எழுதியதே.

மாலையும் நீங்கி மறுபொழு தாகியும்
மாலையை யளித்தோன் வாராததற் குநோதல்.

### தலைவியைப் பாங்கி கழறல்.

தலைவியைப் பாங்கி கழறல்—என்பது, மயங்காநின்ற தலைவனது பிரிவை யெண்ணி வதனாரவிந்தம் பதனழிந்து, வாடவேண்டிய தென்னை? உன்வேட்கையினும் அவர் வேட்கையதிகமே. பிரிவு வாராததுதான் யாவர்க்கு எனப் பாங்கி கழறாநிற்றல்.

---

1 கம்–தலை. 2 மால்–மயக்கம். 3 மதனன்–மன்மதன். 4 மாலை–மாலைப்பொழுது. 5 விழுமலை–அத்தமனகிரி. 6 பூவை–பெண். 7 பனிப்பகை–சூரியன். 8 செனிப்பு அகைத்து–பிறப்பறுத்து.

(156) [1]தயங்குஞ் செழுமறை வண்ணர்குற் றாலர் தடவரைமேல்
முயங்கும் இறைவர் பிரிவினை யெண்ணி [2]முகவனசம
[3]கயங்குவ தேனணங் கேயவர்க் குன்னிலும் காதல்நெஞ்சம்
மயங்கும் பிரிவு வராத தெவர்க்கிந்த வையகத்தே.

செவ்வி யழிந்த திருமுகம் நோக்கி
[4]நவ்வியங் கண்ணி நகையெனக் கழறல்.

## தலைவி முன்னிலைப் புறமொழி மொழிதல்.

தலைவி முன்னிலைப் புறமொழி மொழிதல்-என்பது, தலைவன் பிரிவாற்றாமைக்கு அழுது அழுங்குற்றது கண்டு அறக்கழறாநின்றாய். அன்பறாவிடத்துக் கண்ணீர் அறுமோ? நீ தடுக்கில் யான் யாரொடு சொல்லித் துயராற்றுவேன். சொற்றற்கு இடனில்லையே எனத் தலைமகள் தனக்குப் பிறருண்மையின்மை கூறாநிற்றல்

(157) [5]செருந்திக் கரைத்தடஞ் சூழ்வள நன்னகர்ச் செல்வர்விடம்
அருந்திக் கறைக்களம் பெற்றகுற் றாலர் அணிவரைமேல்
வருந்திக் கலுழ்ந்ததற் கேநீ கழறின் மடக்கொடியே
பொருந்திக் கலந்திவை யாருடன் சொல்லிப் புலம்புவனே.

வார்கலுழ் புலம்பு மறுத்துக் கழறில்
யார்முன் துயர்விண் டாற்றுவே னென்றல்.

## இன்னுயிர்ப் பாங்கியொடு பகர்தல்.

இன்னுயிர்ப் பாங்கியொடு பகர்தல்-என்பது, குற்றாலநாயகர் பாததாமரையை மெய்யன்பர்கள் கண்பனி துளிப்ப மெய்மயிர் பொடிப்பத் தேடுவதோர் ஆனந்த பரவசத்தைப்போலும், எனது தனத்தாமரையானது அன்பர் கரத்தாமரைகளை வேண்டி யிருதய கமலத்துக்கு வருவதோர் அவசம் இத்துணை யென்பதில்லை யெனப் பாங்கியுடன் தலைமகள் சொல்லாநிற்றல்.

(158) [6]அனத்தா மரைப்பொய்கை நன்னகர் மேவுங்குற் றாலர்தன்[7]னுற்
பனத்தா மரைப்பதம் அன்பர்கள் தேடும் பரவசம்போல்

1 தயங்கும்—விளங்கும். இது மறைக்கு அடைமொழி 2 முகவனசம்—முகமாகிய தாமரை. 3 கயங்குதல்—வாடுதல், குழைதல். 4 நவ்வி—மான். 5 செருந்தி—ஓர்மரம். 6 அனம்-அன்னம், இடைக்குறை. 7 உற்பனம்—உத்தமம்.

தனத்தா மரையன்பர் கைத்தா மரைகள் தனைநினைத்தே
மனத்தா மரைக்கு [1]வருகும் பரவச [2]மட்டல்லவே.

தனத்தா மரைகரத் தாமரை நயந்து
மனத்தா மரைநுயர் வருதனைப் பகர்தல்.

### பாங்கியஞ்சி யச்சுறுத்தல்.

பாங்கியஞ்சியச்சுறுத்தல்-என்பது, தலைமகளது பரவசத்தால் தினைக்[3]குரல்களைக் கிளிகள் கொய்துபோயுந் துரப்பதுவேண்டி நின் குரலோசை காணுததைக் கண்டால், உன்னை இவ்வயிற் றினைக் காவலுக்குத் தாயர்கள் விடுக்கமாட்டார்கள் எனப் பாங்கி அச்ச முற்றுத் தலைமகட் கச்சமுறுத்தாநிற்றல்.

(159) செந்தினை யின்குரற் பைங்கிளி கொய்துந் திகழு[4]முலைப்
பந்தினை நின்குரல் காணுகி லேன்றும் பரவசங்க
ளுந்தினைச் சாரலிற் கண்டால் விடாரிங் குனையனைமார்
[5]நந்தினை யே[6]குழை வேய்ந்தகுற் றலமுன் னோர்வெற்பிலே.

எய்தினை வாட்ட மிவைதமர் அறிகிற்
கொய்தினைக் காவல் கூடா தென்றது.

### நீங்கற் கருமை தலைவி நினைந்திரங்கல்.

நீங்கற்கருமை தலைவி நினைந்திரங்கல்—என்பது, பிரியுங்கா லத்துச் சோகத்தையடைவாளென்றல்லவோ சரசோதியைத் தன் நாவினிடத்தே வைத்துக்கொண்டான் அப்படிக்கொத்த பிரமா. என்னையும் என் இறைவரிடத்திருக்க விதியாத தென்னவஞ்சக மென்றறியேன் எனத் தலைமகன் பிரிவாற்ருமையால் இரங்காநிற்றல்.

(160) பொன்வாய் மலர்ப்பதம் போற்றுந் [7]தொழும்பர்கள் போத மனத்
தின்வா யிருக்குங்குற் றலர் வரையி லிறைமனைவி
தன்வா யிருக்கச்செய் தான்பிரிந் தாற்றுயர் சார்வளென்றென்
[8]மன்வா யிருக்க வெனைப்படை யாததெவ் வஞ்சகமே.

[9]நுதியயிற் காளை நோக்கமிக் காகி
விதியினை வெறுத்து மெல்லியல் கூறல்.

---

1 வரும்—வருகும் என்று விரித்தல் விகாரம்பெற்றது. 2 மட்டு-அளவு. 3 குரல்-கதிர். 4 முலைப்பந்தினை-தனமாகிய பந்தினையுடையாய். 5 நந்து—சங்கு 6 குழை-குண்டலம். 7 தொழும்பர்-தொண்டர். 8 மன்-தலைவன். 9 நுதி அயில்—கூர்மை யானவேல்.

### தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றல்.

தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றல்—என்பது, தன் நிலையிற கூடி நிலைக்கொள்காறும் தன் அன்பர்க்குத் தோன்றாத் துணையாயி ருந்து அவர்கள் பக்குவத்தில் அருளுருக்கொண்டு வருவதுபோலும் இப்போது இறைவர் வருவர்; வந்தால் எதிர்நில்லாது உன்மேல் இருக்கிற பேரன்பை அறிவளவும் ஓரிடத்துச்சென்று மறைந்திருந்து பின்னைத் தோன்றிக்கொள்வோம். செல்வாயாகெனப் பாங்கி தலை விக்கு வற்புறுத்தாநிற்றல்.

(161) நிறைந்தெங்கு நின்றகுற் றல ருணர்வின் நிலைப்பளவும்
மறைந்துபின் அன்பர்க்குத் தோன்றுதல் போல்வரு வாரி றைவர்
குறைந்துவிடா தன்பிறு லுன்னைத் தேடுங் குறிப்பறிய
உறைந்திப் புனத்தில் மறைந்துபிற் றோன்றுவம் ஊரன்னமே.

தோழியுங் கடவுள் சோதனை யுணர்த்தியாங்
[1]ஆழியன் உளத்தை யறிவோ மென்றது.

### பாங்கி சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல்.

பாங்கி சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல்—என்பது, நாளைத்தினமெல்லாம், நமராகிய குறமக்கள் தினைக்கதிர்கொய்யத் தொடங்குவார்கள். நாமும் தினைக்காவல் ஒழிந்து மனைக்காவலிற் புகுவோமெனப் பாங்கி தலைவிக்கு இற்செறிப்புணர்த்தாநிற்றல்.

(162) [2]நனைக்கா வலர மது[3]வளி யுண்ணன்ன கர்க்கிறை[4]வந்
தனைக்காவ லுற்றவர் நேயர்குற் றலர் தடவரைவாய்த்
தினைக்காவ லீங்கக் கதிர்கொய்வர் நாளைத் தினஞ்சிலம்பா
மனைக்காவ விற்புகு வோம்யா மிதுநிசம் வாணுதலே.

தினைக்காப் பொழியச் செறித்தகத் திருத்தி
புனைக்காப்ப ராம்நனி யுற்று ரென்றது.

### முன்னிலைப் புறமொழி மொழிந்தறிவுறுத்தல்.

முன்னிலைப் புறமொழி மொழிந்தறிவுறுத்தல்-என்பது, தலை மகளும் யானும் எங்கள் சிற்றூரின் கண்ணே சென்று புக்கோமாயி

1 ஆழியன்—ஆக்ஞா சக்கரத்தையுடைய தலைவன். 2 நனை—பூ வரும்பு. 3 அளி—வண்டு. 4 வந்தனைக்கு—துதித்தற்கு.

னும் இவ்விடத்துத் தலைவன் வந்து எங்களைத் தேடுவார். அப்போது அவர்க்குத் தேறும்படி நன்மொழி சொல்வீரென்று கிளிகளுடனும் வண்டுகளுடனும் பாங்கி முன்னிலைப்புறமொழியாகத் தலைவிக்கு இற்செறிப்புணர்த்தாநிற்றல்.

(163) [1]நாரமு லாவிய வேணிக்குற் றுலர் நகரிறைவர்
தூரமி ருந்துவந் தாற்றேறும் வாசகஞ் சொல்லுமெழில்
[2]மாரன்ற டாவிய [3]மாவே [4]அவன்வில் வனைவடமே
[5]ஆர நகைமின் னுடன்றுசிற் றார்சென் றடையினுமே.

வண்டொடுங் கிளியொடு மனைப்புக லுணர்த்திக்
கொண்டிறை மகட்குக் குணங்தெரி வித்தல்.

### முன்னின்றுணர்த்தல்

முன்னின்றுணர்த்தல்—என்பது, பாங்கி தலைமகன் முன்னிலையாகவும், முன்னிலைப் புறமொழியாகவும இற்செறிப்புணர்த்திப் பின்பு தலைவன் முன்பாகவும் நேர்ந்து, இந்தச்சாரலிற் றினைகளெல்லாம் கதிரொழிந்து தாளாக நிற்பக் கதிர்கொய்து ஏகுவமாகில் இந்தக் காவலும் இல்லாதேபோம். அப்பால் எங்கள் சீறூருக்கு வரத் திடமுண்டோ? உமக்கு எனக் கேளாநிற்றல்.

(164) [6]ஏறார் நெடுஞ்சங்க வீதிக்குற் றுலத் திறைவர்[7]கன்னற்
சாறார் பணைநன் னகரிறை வாபுனந் தங்குதினைக்
[8]காறார் கதிரின்றி நிற்பக்கொய் தேகிலிக் காவலின்றாஞ்
சீறூர் வரவு முளதோ வுமக்குத் திடமதுவே.

மனைக்கடி புகவே தினைக்கடி நீங்கும்
கினைத்தெம தூர்வர நினைவுண் டோவெனல்.

### முன்னின்றுணர்த்தி ஓம்படைசாற்றல்.

முன்னின்றுணர்த்தி ஓம்படைசாற்றல்—என்பது, நமது கூட்டத்துக்கு ஏதுவாயதால் இந்தத் தினைக்காவற்கிருந்த பரணைது தலைமகட்குச் சுவர்க்கலோகமாயிருந்தது. இனித் தமரொடு பிரியாதிருத்தல், அவட்கு முள்ளிடைநின்றதோடொக்கும். ஆதலால் இடை

---

1 நாரம்-நீர்-இங்கு கங்கையைக்குறிக்கிறது. 2 மாரன்—மன்மதன். 3 மா—குதிரை ஈண்டு மன்மதன் குதிரையாகிய கிளி 4 அவன்வில்வடம்-வண்டு. 5 ஆரம்-முத்து. 6 ஏறு-காளை. 7 கன்னல்—கரும்பு. 8 கால் + தூர்—தாளாகிய அடிப்பாகம்.

யரு அன்போடிருந்தருளிச் செய்வீராகெனப் பாங்கி தலைவர்க்கு ஓம்படைசாற்றுநிற்றல்.

(165) நந்தக் குழையினர் குற்றுலர் வெற்பின் நறுந்தினைசேர்
இந்தப் புனத்[1]திதை னும்புணர்ப் பெய்த விசைகுதலால்
[2]கந்தக் குழலிக்குப் பொன்னுல காம்மனைக் கண்ணிலினிப்
[3]பந்தத் திருத்தல்முள் மேனிற்ப தாமன் பருதிருமே.

அண்ணலுன் னருளான் ருங்கெமர்ப் புகுதல்
முண்ணிலை யொக்கும் மொய்குழற் கென்றது.

### மேம்படுகிழவோன் றஞ்சம்பெருது நெஞ்சொடுகிளத்தல்.

மேம்படுகிழவோன் றஞ்சம்பெறாது நெஞ்சொடுகிளத்தல்—என்பது,ஐம்புலனுலுந்துய்க்கப்படுவதோர் மாதானவள் இப்புனத்தை விட்டுப்பிரிந்தவுடனே அப்புலன்பொறியெல்லாம் பிரிந்து அவள்பின் தொடர்ந்துபோயது. நீயும் அவற்றுடன் செல்வாயன்றி என்னுடன் வாராய். நான் ஊர்போய்ச்சேறற்குச் செயலேதுமில்லை. இப்புனமே எனக்கு ஊரும் பதியும்—எனத் தலைமகன் நெஞ்சொடு கூறுநிற்றல்.

(166) [4]மறிவாய்க் குரல்செவி கொண்டகுற் றுலர் வரையினெஞ்சே
பிறிவாய்ப் புனத்தைவிட் டேகவிம் மாதினைப் பின்றொடர்ந்தே
பொறிவாய்ப் புலனெடு சென்றது யானகர் போதஅரு
நெறிவாய்ப் புகச்செய லேதா ரெனக்கிந் நெடும்புனமே.

புலன்பொறி யவளுடன் போயதின் றெனக்கிந்
நிலம்பதி செல்ல நிலையிலை யென்றது.

இவற்றுள், கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுது கண்டிரங்கலும், பாங்கி புலம்பலும், தலைவனீடத் தலைவி வருந்தலும், முன்னிலைப் புறமொழிதலும், பாங்கியொடு பகர்தலும், நீங்கற் கருமை தலைவி நினைந்திரங்கலும், தலைவன் றஞ்சம்பெறாது நெஞ்சொடு கிளத்தலும் ஆகிய ஏழும் இரங்கற்கும், இவற்றுட் கிழவோன் றஞ்சம் பெறாது நெஞ்சொடு கிளத்தல் ஒழித்து ஆறும் வரைதல் வேட்கைக்கும், தலைவியைப் பாங்கி கழறலும், தலைவியைப் பாங்கி யஞ்சியச்சுறுத்தலும், தலைவிக்கு அவன் வரல் பாங்கி சாற்றலும் ஆகிய மூன்றும் வன்புறைக்கும், சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்

1 இதண்–பரண். 2 கந்தம்–வாசனை. 3 பந்தம்–கட்டுப்பாடு. 4. மறி–மான்.

தலும், முன்னிலைப் புறமொழி மொழிந்தறிவுறுத்தலும், முன்னின்றுணர்த்தலும், முன்னின்றுணர்த்தி ஓம்படை சாற்றலும் ஆகிய நான்கும் செறிப்பறிவுறுத்தற்கும் உரியவெனக்கொள்க. இந்நான்கும் வரைவுகடாதற்குரியவாம். ஆகச்செய்யுள் 166. பாங்கியிற்கூட்டத்து எடுத்து ஓதப்பட்ட பதின்மூன்றும் இவை பதினான்கும் கூட்டி இருபத்தேழும் பகற்குறியாமெனக்கொள்க. பகற்குறி முற்றும்.

## பகற்குறி யிடையீடு.

விலக்கல் சேறல் கலக்கம் என்றாங்
கிகப்பின்மூ வகைத்தே பகற்குறி யிடையீடு. (ந. அ. களவு. 39)

இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கலும்
இறைவியைக் குறிவரல் விலக்கலும் இறைமகள்
ஆடிடம் நோக்கி அழிதலும் பாங்கி
ஆடிடம் விடுத்துக்கொண் டகறலும் பின்னாள்
நெடுந்தகை குறிவயின் நீடுசென் றிரங்கலும்
வறுங்களம் நாடி மறுகலும் குறுந்தொடி
வாழுமூர் நோக்கி மதிமயங் கலுமெனும்
எழும் பகற்குறி இடையீட்டு விரியே. (ந. அ. களவு. 40)

### இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கல்.

இறைவனைப் பாங்கி குறிவரல் விலக்கல்—என்பது, ஒரு சாரானே பகற்குறி வந்தவிடத்துப் பாங்கி தலைமகட்கு வரைதல்நயந்து வற்புறுத்தியும் தலைமகற்கு வரைவுகடாவியும் நீங்கிய பிற்பகல் தலைமகன் குறியிடத்து வந்தமைகண்டு,

"கண்டது மன்னு மொருநாள் அலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று" என்னுங்

குறளினை 'அலரறிவுறுத்தல்' என்னும் அதிகாரத்துக் கற்றுணர்ந்திருக்க, கற்றிலர்போல இவள் பொருட்டாக முற்குறியிடைவந்தால் இருவருக்கும் குற்றமன்றி வேறில்லை எனப் பாங்கி குறிவரல் விலக்கா நிற்றல்

(167) தொண்டர் குழாம்பணிந் தேத்துங்குற் றாலச் சுடரொளியார்
[1]கொண்டல் படிதிரி கூட வரையினிற் கொற்றவநீ
[2]"கண்டது மன்னு மொருநா ளெனு"ங்குறள் கற்றிலையோ
[3]விண்டன தோளி விருப்பால் வரின்[4]நவை மேவுவமே.

அயலவர்க் கஞ்சி யமைவுறுந் தலைவர்க்
கியலுணர் வுறுத்தி யெதிர்குறி விலக்கல்.

---

1 கொண்டல்—மேகம். 2 திருக்குறள். 1146. 3 விண்டு—மூங்கில். விண்ட(ன்)ன—மூங்கிலை ஒத்த. 4. நவை—குற்றம்.

### இறைவியைப் பாங்கி குறிவரல் விலக்கல்.

இறைவியைப் பாங்கி குறிவரல் விலக்கல்-என்பது, உனக்குப் பெண்தன்மைக்காகிய பருவம் மிகவும், உன்னைக் காப்பது கடனுகை அன்னைமார்க்குக் கண்படைபெறுது. பொன்போல்வதோர் அன்ன நடையுடையாளே! விளையாடுதற்கு இஃதிடமல்லவெனப் பாங்கி தலைவிக்குக் குறிவரல் விலக்காநிற்றல்.

(168) [1]மின்னைச் [2]சடிலத்தில் வைத்தகுற் றாலர் வியன்கிரியி
னுன்னைப் பருவ மிகமிகக் காக்கு முறுதிவைத்தே
அன்னைக் குமேதுயில் வாரா தினிவிளை யாடுதற்குப்
பொன்னைப் பொருமன்ன மேயிது வல்ல புகுமிடமே.

காப்பது கடனுய்க் கண்டுயில் வாரா
மாப்பதி [3]அனைக்கென வருங்குறி விலக்கல்.

### இறைமக ளாடிட நோக்கி யழிதல்.

இறைமகளாடிட நோக்கி யழிதல்—என்பது, யாம் காத்திருந்த தினைவிளைதல் கண்டு கானவர்கொய்யக் கதிரிழந்து தாள்களாய் நின்றனபோல, நம்மிருவரையுமிழந்தது நம்மைத் தாங்கியிருந்த இதண் என அறிந்து மனத்துள்ள மகிழ்ச்சியொழிந்ததெனத் தலைமகள் பாங்கிமுன் உரையாநின்றது.

(169) வானவர் வந்தனை செய்யுங்குற் றால மகேசுரர்மா
மோனம் முனிவர் புரிதிரி கூட முகில்வரைவாய்
[4]ஏனல் [5]குரலிழந் தென்ன இதணம் இருவர்துணை
யான திழந்தது கண்டிழந் தேனெஞ் சகமகிழ்வே.

தினைப்புனக் காவல் தீர்ந்ததின் றிங்கன்
எனக்கிலைப் [6]பொய்தலென் றேந்திழை மயங்கல்.

### இறைவியைப் பாங்கி யாடிடம் விடுத்துக்கொண்டகறல்.

இறைவியைப் பாங்கி யாடிடம் விடுத்துக்கொண்டகறல்—என்பது, யானும் தலைவியும் இவ்விடம் விட்டுச் செல்வதால், இவளடித் தாமரை நடந்த வழிச்சுவடுதானே தலைவர்க்குத் தெரியப்படும். வந்தாராகில் அது வழியே வரச்சொல்வீர், மயிற் குலங்காள்! எனப்பாங்கி தலைமகளோடு அகலாநிற்றல்.

---

1 மின்னை—கங்கையை. 2 சடிலம்—சடை. 3 அனைக்கு-அன்னைக்கு. 4 ஏனல்—தினை. 5 குரல்-கதிர், 6 பொய்தல்-விளையாட்டு.

(170) [1]ஏட்டா ரணிசடைப் பெம்மான்[2]சம் பந்த ரிசைத்ததிருப்
பாட்டார் [3]பதாம்புயர் குற்றாலர் வெற்பினிற் பைங்கொடியின்
தாட்டா மரைகள் படருந் தடமண்ணல் தானறிவார்
[4]சூட்டார் சிரமஞ்ஞை காள்வந் திடில்வரச் சொல்லுகவே.

மயில்களோ டிறைவர் வரினுரைப் பீரென்
[5]றயில்விழி தனைக்கொண் டவர்பதி சேறல்-

### பின்னுள் நெடுந்தகை குறிவயி னீடுசென்றிரங்கல்

பின்னுள் நெடுந்தகை குறிவயினீடு சென்றிரங்கல்—என்பது, தலைவன் தலைவி இருவரையும் குறிவரல் விலக்கியவிடத்துத் தலைவி யாடிடம் நோக்கி அழியப் பாங்கி அவ்விடம் விட்டகன்ற பின்னர் நாடொறும் தலைமகன் குறியிடத்து வந்துவந்துநின்று, தலைமகள் [6]உரத்தனபாரங்கள் எனது உடலிற் பழகியதால் அப்பழக்கத் தோடே செல்லத் துணிந்த மனத்தை என்னிடத்துக் கொண்டுவந்து விட எப்போது வருமோ? வண்டுகாள்! எனக்கு முன்சென்று பார்ப் பீராகென இரங்குறாநிற்றல்.

(171) பாகத் திமயமின் வைத்தகுற் றாலர் பனிவரைமேல்
[7]ஆகத்திற் கொங்கை யடுத்துப் பழகிய தாலதனோ
டேகத் துணிந்தநெஞ் சென்னுகஞ் சேர்க்கமின் என்றுவரும்
மோகத் துடன்குறித் தேவரல் பாருமென் முன்[8]பளியே.

என்மன மவளோ டேகிய ததுதரப்
பின்வரல் பாரெனப் [9]பிரமரத் தொடுசொலல்.

### வறுங்கள நாடி மறுகல்.

வறுங்கள நாடி மறுகல்-என்பது, இத்தலைப் பூங்கொத்துக்கள் விரிந்த வேங்கைகளை நீங்கி அப்பாலுள்ள நற்[10]றருக்களிற்சென்று கள்ளருந்திய வண்டுகாள்! யானும் இக்களங்கடந் தப்பாற்சென்றால் என் மனமாகிய வண்டு உண்ணுதற்கு ஓர் பூங்கொம்பு எய்துமோ எய்தாதோ? சொல்வீரெனத் தலைமகன் மறுகாநிற்றல்.

---

1 ஏடு–பூ. 2 சம்பந்தர்-திருஞானசம்பந்தர். 3 பதாம்புயர்-திருவடித்தாமரையுடையர். 4 சூடு–உச்சிக்கொண்டை. 5 அயில்விழி-வேற்கண்ணையுடையவள். 6 உரம்–நெஞ்சு. 7 ஆகம்–மார்பு. 8 அளி-வண்டு. 9 பிரமரம்–வண்டு. 10 தரு-மரம்.

(172) [1]வள்ள [2]மலரிறை போற்றுங்குற் றூல மகேசர்வெற்பில்
விள்ள மலர்க்[3]கணி நீங்கிநற் பூந்தரு மேவிநறுங்
கள்ள மலருண் [4]ணளிகாள் நும்போலிக் களங்கடந்தால்
உள்ள மலரளிக் கேபூங்கொம் பெய்தலுண் டோசொல்கவே.

இக்களங் கடந்தவர் எயிற்புறத் தேகத்
தக்கது குறித்துத் [5]தமரவண் டொடுசொலல்.

### குறுந்தொடி வாழூர்நோக்கி மதிமயங்கல்.

குறுந்தொடி வாழூர் நோக்கி மதிமயங்கல்—என்பது, தேனெடுக்கச் சென்றவர் ஈக்கடிக்கு அஞ்சித் தேனெடாது மீள்வதுபோலத் தலைமகள் தமராகிய [6]கிராதர்கட்கஞ்சி அவ்விடத்துச் செல்லாதிருந்தோமாறல் எப்போது அவளைத் தோயக்கிட்டுமென்னும் யோசனையால் தலைமகன் மயங்கி நெஞ்சொடு புலம்பாநிற்றல்.

(173) தாக்கும் [7]புலியதட் குற்றூலர் வெற்பிற்றண் டேனசையார்
காக்கின்ற ஈக்கொடி நெண்ணுதல் போல்நம் கருத்தில்
வைத்து
நோக்குஞ்செந் தேனைவைத் தேகாக்கும் வேடர்செய் நோத
வினைத்
தூக்குந் தகைமையுற் றூலெந்த நாட்சென்று தோய்வை
நெஞ்சே.

அமர்வேற் கண்ணியம் மதியடுத் தேகத்
தமரார் காப்புத் தலைமக னெண்ணல்.

இவற்றுள், முன்னைய இரண்டும் விலக்கற்கும், பாங்கி ஆடிடம் விடுத்துக்கொண்டகறலாகிய ஒன்றும் சேறற்கும், ஏனைய நான்கும் கலக்கத்திற்கும் உரியவாமெனக்கொள்க. ஆகச்செய்யுள் (173). பகற்குறியிடையீடு முற்றும்.

## இரவுக்குறி.

வேண்டல் மறுத்தல் உடம்படல் கூட்டல்
கூடல்பா ராட்டல் பாங்கிற் கூட்டல்
உயங்கல் நீங்கலென் றென்பது வகைத்தே
இயம்பிப் போந்த இரவுக் குறியே. (ந. அ. களவு. 41)

---

1 வள்ளம்–கிண்ணம்போன்ற 2 மலரிறை-பிரமன். 3 கணி–வேங்கை 4 அளிகாள்–வண்டுகாள். 5 தமரம்-ஒலி. 6 கிராதர்-வேடர். 7 புலியதள்-புலித்தோல்.

இறையோன் இருட்குறி வேண்டலும் பாங்கி
நெறியின தருமை கூறலு மிறையோன்
நெறியின தெளிமை கூறலும் பாங்கி
அவன்நாட் டணியியல் வினுதலுங் கிழவோன்
அவள்நாட் டணியியல் வினுதலும் அவற்குத்
தன்னாட் டணியியல் பாங்கி சாற்றலும்
இறைவிக் கிறையோன் குறையறி வுறுத்தலும்
நேரா திறைவி நெஞ்சொடு கிளத்தலும்,
நேரிழை பாங்கி யொடுநேர்ந் துரைத்தலும்
நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குரைத்தலும்
குறியிடம் நிறீஇத் தாய்துயி லறிதலும்
இறைவிக் கிறைவன் வரவறி வுறுத்தலும்
அவட்கொண்டு சேறலுங் குறியுய்த் தகறலும்
வண்டுறை தாரோன் வந்தெதிர்ப் படுதலும்
பெருமக ளாற்றின தருமைநினைந் திரங்கலும்
புரவலன் தேற்றலும் புணர்தலும் புகழ்தலும்
இறைமக ளிறைவனைக் குறிவிலக் கலுமவன்
இறைவியை இல்வயின் விடுத்தலும் இறைவியை
எய்திய பாங்கி கையுறை காட்டலும்
இற்கொண் டேகலும் பிற்சென் றிறைவனை
வரவு விலக்கலும் பெருமகன் மயங்கலும்
தோழி தலைமகள் துயர்கிளந்து விடுத்தலும்
திருமகட் புணர்ந்தவன் சேறலு மென்றாங்
கிருபத் தேழு மிரவுக்குறி விரியே. (ந. அ. களவு. 42)




### இறையோன் இருட்குறி வேண்டல்.

இறையோன் இருட்குறி வேண்டல்—என்பது, தினைப்புனங் காவல் ஒழிந்தமையாலுந் தலைமகட்குப் பெண்பருவம் நேர்ந்தமையாலும் இப்பொழும்பரில் விளையாட வருதற்கு ஓரிடையூறுயிற் றென்றெண்ணிய தலைமகன், கலைஞானம் சிவஞானம் இல்லார் இருவர் மனத்திருளும் ஒன்றுசேர்ந்ததுபோலக் கார்மேகந் தொந்தித்த பேரிரவில் தனியே நுமதூர்வந்தடைகுவன். இதனை என்னுயிர்போல்வாட்கு அவளுயிர்போலுந் தோழீ! நீ சொல்லெனச் சொல்லாநிற்றல்.

(174) கல்லார் மனத்தின் இருளுங்குற் றூலர் கழல்கருதாப்
பொல்லார் மனத்திரு ளுஞ்சேர்ந் தெனமைப் புயலும் மொய்த்த
[1]அல்லான திற்றனி யேநும தூர்வந் தடைகுவன்யான்
சொல்லா ருயிரெனு மென்மா தினுக்குமென் றோழியரே.

வீரவரி தாய வேட்கைகொ டிறைவன்
இரவர லுரையென் றிகுளைக் குரைத்தல்.

**பாங்கி நெறியினதருமை கூறல்.**

பாங்கி நெறியினதருமை கூறல் — என்பது, கண்ணுக்கு விழித்தலின்றி இமைபொருந்துஞ் சூக்கும சரீர காலத்தில் தூலசரீர விழிப்புக்கும் நடப்புக்கும் வழித்தடங் காண்பதெவ்வாறு? தலைமகள் பொருட்டு வருவேனென்றது, தான் செத்து உலகாளுந்தன்மையோ டொக்கும் என்று பாங்கி தலைவற்கு வழியருமை கூறுநிற்றல்.

(175) கண்ணிணை [2]தாரை மறைக்கின்ற காலத்துட் கண்ணினுக்கே
விண்ணிடை யாரிரு ளிற்[3]றூரை காணும் விதமெவனோ?
பண்ணினை யார்க்குங் குழல்வாய் மொழியொரு பாகர்வெற்பில்
பெண்ணினை நோக்கிவந் தாலெளி தோவண்ணல் பேரிருளே.

[4]துனித்தலைக் கொண்டோர் சுடர்த்தொடி பொருட்டுத்
தனித்திர வருதற் கவல்வே னென்றது.

**இறையோன் நெறியின தெளிமைகூறல்.**

இறையோன் நெறியின தெளிமைகூறல்— என்பது, எழு தீவு எழு கடலனைத்தும் ஒரு [5]தபனலோசனத்தினாலே விளக்கிய தேசோன் மயராகிய குற்றாலநாயகர் உண்டு. என் கண்ணுக்கு இருளில்லை. அன்றியும், வழித்துணைக்கு அத்தசந்திரனைப்போலும் நுதலுடையா ளொருத்தியுண்டு. எனக்கேது பயமெனத் தலைமகன் நெறியெளிமை கூறுநிற்றல்.

(176) [6]ஆதி யளந்த உலகமெல் லாங்கண்ணொன் றால்விளக்கும்
சோதி யெனுந்திருக் குற்றால ரேயுண்டு சூழிருளைக்

---

1 அல்—இருள். 2 தாரை—கண்மணி. 3 தாரை—வழி. 4 துனி—வருத்தம். 5 தபனலோசனம்—சூரியனாகியகண். 6 ஆதி—திருமால்.

[1]காதி யடர வழித்துணைக் கேயென் கருத்திலென்றும்
பாதி மதிநுத லா[2]ளுண்டு மென்ன பயமணங்கே.

[3]இருள்வலிக் கண்ணார் இருளது கடியும்
மருளிலை யான்வரும் வழிக்கெளி தென்றல்.

### பாங்கி அவன் நாட்டணி இயல்வினுதல்.

பாங்கி அவன் நாட்டணி இயல்வினுதல்-என்பது, நெறியினது அருமை கூறிய விடத்து நில்லாதனை கண்டு இரவுக்குறி நேர்ந்த தோழி, தன்னிலத்து மகளிர் கோலத்தை அவன் வினுவுவது காரணமாக நீழலந்துறையின்கண் விளையாட நின் ஊருள்ளோர் என்ன துகிலுடுத்து என்ன சாந்தணிந்து என்ன மாலையணிந்துகொள்ளா நிற்பர்? எனத் தலைமகனை வினுவாநிற்றல்.

(177) [4]வண்டல் கொழிக்கும் புனற்றுறை வாய்[5]வண்ட லாடமின்னார்
கொண்ட பணித்துகில் என்புனை சாந்தமென் கோதையுமென்
[6]புண்டரி கத்தனுங் காணுர்குற் றுலர் பொருப்பிலண்ணல்
கண்ட படியிதென் றுன்னுட் டணியல் கழறுகவே.

எனையநின் னுட்டணி எனத்தனை வினவ
அனையவ னதுகாட் டணியியல் வினுதல்.

### கிழவோன் அவள் நாட்டணி இயல்வினுதல்.

கிழவோன் அவள் நாட்டணி இயல்வினுதல்—என்பது, அவன் நாட்டணி இயல் வினுவிய உட்கோளறிந்து, என் நாட்டணி இயல் கேட்கச் சொல்லுங்காலை, எனக்குக் குறைதீர்வதொன்றில்லை. நின் நாட்டவர் அணிஇயல் யாதோ? எனக்குத் தெரியும்படி இன்னதெனச் சொல்வாயெனத் தலைவன் பாங்கியை வினுவா நிற்றல்.

(178) எனதுபொன் னுட்டின் அணியியல் கேட்ப இயம்பிடிலென்
கனதுயர்க் காற்றல் செயுமோசெய் யாது கருத்தொருமை
மனதுடை யார்க்கருள் குற்றுலர் வெற்பினின் மாதரெல்லாம்
உனதுபொன் னுட்டி னணியியல் யாதெனக் கோதுகவே.

அணியியல் கேட்ப அதுகுறிப் பறிந்து
மணிமுடி வேந்தன் மறுத்தவை வினுதல்.

---

1 காதி—கூறுசெய்து. 2 உண்டும்—உம் சாரியை. 3 இருள்வலி—சூரியன்.
4 வண்டல்—சேறு முதலிய அடைதல். 5 வண்டல்—மகளிர் விளையாட்டு.
6 புண்டரிகத்தன்—பிரமன்.

## பாங்கி அவர்க்குத் தன் நாட்டணி இயல்சாற்றல்.

பாங்கி அவர்க்குத் தன் நாட்டணி இயல் சாற்றல்—என்பது, உட்கோளறிந்துகொண்டு, நின்று விளையாடுமிடம் யாதென்று வினவிய தலைமகனுக்கு விருப்பத்துடனும் சுனைகுடைந்தாடித் துகிலணி திருத்திச் சந்தனகளபமாலை முதலியனவும் புனைந்துகொண்டுநின்று விளையாடுமிடம் யாதென்றால் விரிமலர்க்கொத்துக்கள் பொருந்திய அசோகவனமெனத் தலைவனுக்குப் பாங்கி குறியிடந்தோன்றக் கூறாநிற்றல்.

(179) [1]கருப்பா வையர்கட் டெய்தாமல் எம்முயிர் காத்தருளும்
[2]பொருப்பா கிய[3]தனுக் கொண்டகுற் றாலர் பொருப்பில்மகா
விருப்பாற் சுனைகுடைந் தாரமென் சாந்தமும் வேய்ந்துவிரி
[4]அருப்பார் அசோகத் தருநிழ லாமெங்க ளாடிடமே.

> இவையிருட் குறியென் றின்மொழிப் பாங்கி
> நவையறத் தேர்ந்து நன்மகற் குரைத்தல்.

## இறைவிக் கிறையோன் குறியறிவுறுத்தல்.

இறைவிக் கிறையோன் குறியறிவுறுத்தல் என்பது, ஆதித்த பகவான் இரதாரோகணமாக வருங்காலத்துத் தானும் அவ்வண்ணம் வாராநின்ற தலைமகன் மன்மதன் வாரணத்து ஊர்ந்து வருவதாகச் சொன்னால் நாம் இதற்கு என்சொல்லக் கடவேமென்னப் பாங்கி தலைவிக்கு இரவுக்குறி அறிவுறுத்தாநிற்றல்.

(180) கொடுந்தேர் [5]இரவிவின் னூர்கின்ற போதுங்குற் றாலர்வெற்பில்
நெடுந்தேர் நடாத்தி வருமண்ண லுள்ள நினைவெனைத்தோ
தொடும்பூங் கணை[6]மதன் வாரணத் தேவரல் சொல்லலுற்றார்
[7]அடும்பா கினிய மொழியேயென் சொல்லுவ மியாமிதற்கே.

> நெடும்பகல் வருவோன் [8]நிசிவர வதனைக்
> கொடுங்குழை மடந்தைக் குணர்த்தா நின்றது.

## நேராதிறைவி நெஞ்சொடு கிளத்தல்.

நேராதிறைவி நெஞ்சொடு கிளத்தல்—என்பது, சிங்கத்தின் கண்கள் அழற்பொறி சிந்தப் பார்த்துக்கொண்டிருக்கவும் அதற்கு

1 கரு—கருப்பம். 2 பொருப்பு—மலை. 3 தனு—வில். 4 அருப்பு-அரும்பு. 5 இரவி—சூரியன். 6 மதன் வாரணம்—இரவு. 7 அடும்பாகு—காய்ச்சிய சருக்கரைப்பாகுபோன்ற. 8 நிசி—இரவு.

அஞ்சாமல் அவ்வழிக்கு அதனை ஒரு கைவிளக்காகக் குறித்து நம்மாற் றுணிந்து வருகைக்கு நம்மை, ஏன் படைத்தான் பிரமன் என்று தலை மகன் வருதலை நேராது தலைமகள் நெஞ்சொடு புலம்பாநிற்றல்.

(181) புனலரு வித்துறைக் குற்றாலத் தே[1]வயப் போத்தின்கண்கள்
கனலெரி போல்[2]நகற் கஞ்சா [3]ததர்க்கிருள் காய்கதிராம்
எனவுநம் மாற்றுணிந் தண்ணல் வரநெஞ்ச மேநமையேன்
[4]வனசன்முன் னுட்படைத் தானென்ன பாவம் வழுத்தரிதே.

இரவையு மிகலையு மெண்ணிவெற் பண்ணல்
வரவுநே ராது மனத்தொடு பிதற்றல்.

**நேரிழைப் பாங்கியொடு நேர்ந்துரைத்தல்.**

நேரிழைப் பாங்கியொடு நேர்ந்துரைத்தல்-என்பது, தலைமகன் குறையிரப்பக் குறைநேர்ந்து அவர் வருதலைச் சொல்ல வந்தால் யான் அதற்கு நேராமை சொல்லத் தகவோ எனத் தலைமகள் பாங்கியொடு நேர்ந்துரையாநிற்றல்.

(182) இறுதி முதல்நடு வாயகுற் றாலர் இலங்கருவிச்
சிறுதி வலைக்குளிர் வெற்பர் இரவிற்சென் றேவரலும்
உறுதி யினிற்பகர்ந் தாயவர் வார்த்தைக்கு முன்மொழிக்கும்
[5]பொறுதியென் னுஞ்சொலத்தகு மோசொலும் பூங்குழலே.

தேரா திருட்குறி தேறி ரிருவரும்
நேரா திருக்க நெறியோ வென்றல்.

**நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குரைத்தல்.**

நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குரைத்தல்—என்பது, இரு வகைத் தோற்றமும் புதையச் செறிந்த இருட்காலத்து, நீ வருதலை, அக்காலத்துக் காட்சி தலைப்படும்நாள் நீ தெய்வமென்றெண்ணியவளை விசேடித்து வழிபாடுசெய்து நேர்வித்து இருதயகமலமலர்ச்சியும் மகிழ்வுங்கண்டு வந்தேனெனப் பாங்கி தலைவர்க்கு உரையாநிற்றல்.

(183) [6]சுதையவிர் நீண்மதிள் குற்றாலர் வெற்பினிற் றேற்றமெல்லாம்
புதைய வளரிருள் நீவந் ததுபுகன் றே[7]னிரவி

---

1 வயப்போத்து-சிங்கம். 2 நகற்கு-பிரகாசித்தற்கு. 3 அதர்-வழி. 4 வனசன்-பிர மன். 5 பொறுதி-தாமதம்.(அட்டி)தடை. 6 சுதை-சுண்ணும்பு. 7 இரவி-சூரியன்

[1]உதைய மிலாதுமுன் றெய்வத்தைச் சென்னி யுறவணங்கி
[2]இதைய கமல நகைவிள்ளக் கண்டுவந் தேனண்ணலே.

அணங்கெனக் கருதா மணங்கினை வணங்கி
இணங்கின கண்டுவந் திறைமகற் குணர்த்தல்.

### குறியிடம் நிறீஇத் தாய் துயிலறிதல்.

குறியிடம் நிறீஇத் தாய் துயிலறிதல்-என்பது, சத்துருக்களது மகுடகோடிகளைத் துணிக்கின்ற வேற்படையுடைய வேந்தன் மெலிவுற்று இங்ஙனம் வந்தடைய நொய்தாயதோர் பெண்படைவேந்தன் கணைதூரக்கும்படி சிலைவளைத்தேற்றும் நாணொலி சற்றும் கேளாமையால் தாயார்க்கும் கொடிய நித்திரையாக வேணும் இக்காலமே குறியிடைச் சேறற்கு வேளையெனப் பாங்கி தலைவிக்குச் சொல்லாநிற்றல்.

(184) ஒண்படை வேந்தன்நங் குற்றுலர் வெற்பில்வந் தொன்ற
வொன்றப்
[3]பெண்படை வேந்தன் கணைதுரந் தேவப் பிணிவடமாம்
பண்படை வண்டு முழங்கல் செவிப்புலன் பற்றிலதாற்
[4]கண்படை யோகொடி தாமன்னை மார்க்கும்இக் காலமின்னே.

அமரொலி கேளா அன்னைத் திரைகண்
படைதன மேசெல் லெனத்துணி கின்றது.

### இறைவிக் கிறையோன் வரவறி வுறுத்தல்.

இறைவிக் கிறையோன் வரவறி வுறுத்தல்-என்பது, கொடையினுலும் வீரத்தினுலும் அணிந்தருளிய கழலொலிகேட்டு [5]நடைமலையாகிய யானைத் திரள்கள் அஞ்சிப் பக்கத்தே செல்லா நிற்கின்றன. ஆதலால், தலைமகன் யான் சொல்லிய குறியிடத்து வந்தான் எனப் பாங்கி தலைமகட்கு வரவுணர்த்தாநிற்றல்.

(185) படைவாள் விழிபொற் றனத்தி குழல்மொழிப் பாவையொரு
புடையார்குற் றுலமுன் னேர்திரி கூடப் பொருப்பிலண்ணல்
கொடைவீரத் தாலணி யுங்கழல் ஓசைக் குறிப்பையுற்றே
நடைமா மலையஞ்சி ஏகுதல் பார்ஒளிர் நன்னுதலே.

[6]கருணிகள் அகலக் கழற்கால் வேந்தன்
வருவதைப் பாங்கி மாதுக் குரைத்தல்.

---

1 உதையம், 2 இதையம்—இவை எதுகை நோக்கி ஐகாரம்பெற்றன. 3 பெண்படைவேந்தன்-மன்மதன். 4 கண்படை—நித்திரை. 5 நடைமலை—யானை. 6 கருணி—யானை.

## அவட்கொண்டு சேறல்.

அவட்கொண்டு சேறல்—என்பது, இந்த இரவுக் காலத்திலே முடிபொறுத்தருளிய நம்பெருமான் வரவேண்டிற்றோர் எண்ணம் வைத்த மனத்தின் கண்ணே மகிழ்ச்சியுண்டாக மலரடி பெயர்ந்து செல்வாயாகெனப் பாங்கி தலைமகளை அவ்விடத்துக்கொண்டு செல்லா நிற்றல்.

(186) [1]கனநகை விண்மலர் காவூரும் நன்னகர்க் [2]காமர்[3]துத்தித்
தனநகை யாள்குழல் வாய்மொழி பாகர்தம் வெற்பிலிருள்
தினநகை யார்மகு டத்திறை யோன்வரச் சிந்தைவைத்த
மனநகை தோன்ற மலரடி போந்துசெல் வால்வளையே.

தாய்துயில் அறிந்தவள் தலைவியைக் கொண்டு
போய்மெலச் செல்லெனப் போந்து நின்றது.

## குறியுய்த் தகறல்.

குறியுய்த் தகறல்—என்பது, தலைவன் தலைமகள் தலைப்பெய்து கூடுவதாக எண்ணிப் பாங்கியானவள் உனக்குப் புதிதாக ஓர் தழை கொண்டுவந்து சூட்டுகிறேன். இங்ஙனம் நில்லெனச் சொல்லிச் சற்று அயலே நீங்காநிற்றல்.

(187) வெந்தழை வார்செவி [4]வேழ [5]மிடங்கர்வெள் வாய்ப்புகுந்து
[6]நொந்தழை [7]மால்பணி குற்றாலர் வெற்பில்நுண் [8]டாத[9]ளிகள்
வந்தழை பூங்குழற் கே[10]புனிற் றாய்மலர்க் காவினிற்போய்ப்
பைந்தழை கொய்துவந் தேசூட்ட விங்குநில் பைங்கொடியே.

தலைப்பெய் திருவருஞ் சார்கவென் றெண்ணி
நிலைபெயர்ந் திங்ஙன் நில்லெனச் சொல்லல்.

## வண்டுறை தாரோன் வந்தெதிர்ப் படுதல்.

வண்டுறை தாரோன் வந்தெதிர்ப் படுதல்—என்பது, முற்காலத்துக் குற்றாலம் இக்காலத்துக் குறும்பலாவெனத் திருப்படை வீடு

---

1 கனநகை விண்மலர்காவூரும்—விண்ணை அளாவும் மலர்ச்சோலையில் மேகம் தவழும் 2 காமர்-அழகு. 3 துத்தி-தேமல். 4 வேழம்-யானை. 5 இடங்கர்—முதலை. 6 நொந்துஅழை-வருந்திக் கூப்பிட்ட 7 மால்—திருமால். 8 தாது—பூந்தாது. 9 அளி-வண்டு. 10 புனிறு—புதுமை.

கொண்டருளிய குழல்மொழி பாகனைப் போலும் நின்னது [1]பஞ்சசயனத்தை நீங்கி என்னது [2]சரீராமளியினது [3]சுகுமாரத்தையறிய இந்த இரவிலே அலர்தல் குவிதல் இன்றி இயற்கையாகிய வதனாரவிந்தம் துலங்க வந்தது அற்புதம் எனத் தலைமகன் வந்து எதிர்கூறுகிற்றல்.

(188) வல்லி குழல்மொழி பாகர்குற் றாலம் வருக்கையெனப்
புல்லி யிருந்தன போலனை மார்கண் புதைத்துமின்னே
மெல்லிய பஞ்ச சயனமு நீங்கியென் மெய்யமளிக்(கு)
[4]அல்லியற் [5]கோகன கந்தோன்ற வந்த ததிசயமே.

உனதுட லமளி யுறங்கா திங்குற
வெனதுட லமளி யெய்த வோவெனல்.

## பெருமகள் ஆற்றின தருமை நினைந்திரங்கல்

பெருமகள் ஆற்றின தருமை நினைந்திரங்கல் என்பது, அத்த சாமங்கூடித் திருப்பள்ளி யெழுந்தருளும் வரையுங் குற்றால நாயகர் திருப்படை வீடு திருக்காப்புக் கொண்டிருப்பதையறிந்திருந்தும் சஞ்சரிக்கப்படாத இந்தப் பேரிரவுக் காலத்துத் தனியே கொடுங்குன்றேறிவந்தீர். ஆனல் வழிதெரியுமோ? தெரிவதுமரிது எனத் தலைமகள் இரங்காநிற்றல்.

(189) [6]குருக்கோ அருண னுதிக்கும் வரையுங்குற் றாலருறுந்
திருக்கோ யிலுந்திருக் காப்பிட் டிருக்குஞ் செயலறிந்தும்
[7]மருக்கோதை மார்பண்ண லேதனி யேவந் தனையிருளின்
பெருக்கோ கடின [8]மதர்தெரி யாதென்ன பேசுவதே

இருட்புனத் தருஞ்சுரம் எய்தலை நோக்கி
அருட்பெருங் கொடிச்சி ஆவெனக் கூறல்.

## தலைவன் தேற்றல்.

தலைவன் தேற்றல்—என்பது, சுந்தரமூர்த்தி நாயனரிடத்துள்ள கருணையினல் இரவுக்காலத்துப் பரவை நாய்ச்சியார்க்குத் தூதுசென்ற திருவடியுடைய திருக்குற்றால நாயகர் நீங்காது எம் உள்ளத்து இருத்த

1 பஞ்சசயனம்- அன்னத் தூவி, இலவம்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, மயிர் இவற்றாற் செய்யப்படும் படுக்கை. 2 சரீராமளி—உடலாகிய படுக்கை. 3 சுகுமாரம்—மிருதுத்தன்மை. 4 அல்-இரவு. 5 கோகனகம்-தாமரை. 6 குரு—நிறம். 7 மருக்கோதை—வாசனையுடைய மாலை. 8 அதர்—வழி.

லால் இரவுக்காலம் மிகவும் எமக்கெளிதெனத் தலைவன் தலைவியைத் தேற்றுகிற்றல்.

(190) [1]மங்குன் மழைசொரிந் தென்னத் [2]தமிழ்மொழி வாழ்நருக்காய்க்
[3]கங்குலிற் றூதுசென் றேமுன் பழகும் கழலுடைத்தாம்
பொங்கு [4]மிதழிக்குற் றலரெம் முள்ளம் பொருந்துதலால்
இங்குவரக் கங்குல் தானெளி தாமெமக் கேந்திழையே.

சுந்தரற் கிரவிற் றூதூர் தாளிணை
சிந்தையுண் டிரவெளி தென்னு கிற்றல்.

## புணர்தல்.

புணர்தல்— என்பது, இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, தெய்வ ஏதுவாகவும், பாங்கற்கூட்டம், பாங்கியிற் கூட்டம் துணை ஏது வாகவும் முன்னைப் பகற்குறி முடிந்தது. அஃதின்றியும் இப்போது இரவுக்காலத்துப் பாங்கி துணை ஏதுவாகத் தலைவியை நேர்ந்து புணர்ந்ததரிது. அதனாற் சென்ம பரம்பரையாகச் செய்த நல்வினை யாதோ? அறிகிலேனெனத் தலைமகன் வியப்புற்று மகிழாநிற்றல்.

(191) மொய்தளிர்க் கேய்குழல் வாய்மொழி மேவு விமலரெழு
[5]மைதவ ழுந்திரி கூட வரைமட மாதிடத்தே
எய்த வரிதெனும் இன்ப நுகர்ச்சியின் றெய்தவும்யான்
செய்த தவமென்ன வோவறி யேன்முற் செனனத்திலே.

அல்வயின் தமர்கடந் தரிவைநேர்ந் தமையால்
நல்வினைப் பயனை நரபதி வியத்தல்.

## புகழ்தல்.

புகழ்தல்—என்பது, தேனும் கனியும் சருக்கரையும் பாலும் ஒன்றுபடக் கலந்த இரதபுருச மாயினும் தலைமகள் கொணர்ந்து இயற்கையாயளிக்கப்பட்ட அதரபானத்தினது சுவைக்கு இணையல்ல வென்று தலைமகன் அவளது நலம்பாராட்டாநிற்றல்.

---

1 மங்குல்-மேகம். 2 தமிழ்மொழிவாழ்நர் - சுந்தரர். 3 கங்குல்-இரவு.
4 இதழி - கொன்றை. 5 மை—மேகம்.

(192) [1]பூங்கம லாசனை கேள்வனும் வேதனும் போற்றுஞ்சிந்தை
நீங்கலில் லாத்திருப் பாதர்குற் றாலர் நெடுங்கிரிமேல்
தேங்கனி சர்க்கரை பாலுமொன் றாகத் திரள்செய்யினும்
ஈங்[2]கத ரத்தின் சுவைமான் தருதற் கிணையல்லவே.

குவியிள முலையாள் கொவ்வையஞ் செவ்வாய்ச்
சுவைபல விளையும் தோல்வி செய்தது.

### இறைமகள் இறைவனைக் குறிவரல் விலக்கல்.

இறைமகள் இறைவனைக் குறிவரல் விலக்கல்—என்பது, குற்றாலக் கடவுளாரும் தனது திருமேனிக்குப் பகையாமென்றல்லவோ புலி சிங்கம் யானை முதலியவற்றுக்குத் தாம் ஒரு பற்றலராக உரித்துப் புனைந்துகொண்டருளினர். அப்படி அனேகம் வல்விலங்குகள் இவ் வரையின் கண்ணுள்ளன. இதனை யெண்ணாது நும்முடைய மயக்கத் தால் இரவுக்காலத்துத்தானே வருதலை யொழிவீர் யான்வேண்டுமென் பதுண்டானல் எனத் தலைமக ளிரவுக்குறி விலக்காநிற்றல்.

(193) குற்றால ருந்தற் பகையென்றல் லோபுலி கோளரிமாப்
[3]பற்றா ரெனவுரித் தேபுனைந் தாரிப் படிவிலங்கெண்
முற்றா தனேகமுண் டிவ்வரை மீதண்ணல் மோகமதால்
[4]அற்றான் வரலொழி வீரென்னை வேண்டலுண் டாயினுமே.

வெல்விடை யவர்க்கிகல் விளைவொன் றுரைத்து
வல்விலங் குள்ள வழிவிலக் கியது.

### இறைவன் இறைவியை இல்வயின் விடுத்தல்.

இறைவன் இறைவியை இல்வயின் விடுத்தல்—என்பது, நீ இவட் சென்றுவரும்போது, பாங்கியானவள் நின்னது அன்னைமார் துயில் சோதித்துச் செலுத்துவிக்க வந்தாய். அவர்கள் உன்னைக் கனவினும் மறவாதவர்கள். கண் விழித்தாற் காணாது, ஏதெனப் பத றிப் பொள்ளெனத் தேடாநிற்பார்கள். ஆங்குச் செல்வாயெனத் தலைமகன் விடுப்பியாநிற்றல்.

(194) [5]தினகர சந்திர[6]விலோசனர் [7]பாசனச் சென்னியங்கைத்
[8]தனபதி தோழர்நங் குற்றால நாதர் சயிலத்திலே

---

1 பூங்கமலாசனை கேள்வன்-திருமால். 2 அதரம்—உதடு. 3 பற்றார்—பகைவர். 4 அல்+தான்-இரவுதானே. 5 தினகரன்-சூரியன். 6 விலோசனர்-கண்ணையுடையவர். 7 பாசனச் சென்னி—உண் கலமாகிய தலையோடு. 8 தனபதி—குபேரன்.

கனவினும் உன்னை மறவார்நின் அன்னையர் கண்விழித்தால்
வினவுவ ரெங்ஙெனச் சிந்தை பதறிமின் னேசெல்கவே.

விழித்திடில் அனைமார் வினவுவர் செல்கெனப்
பொழிற்றலைப் பாங்கிமுன் புகவிடுத் துய்த்தல்.

**எய்திய பாங்கி கையுறை காட்டல்.**

எய்திய பாங்கி கையுறை காட்டல்—என்பது, குறியிடத்து அயலே நின்ற தோழி, தலைமகள் தலைவனை விட்டு நீங்கா முன்னமே கிட்டிச் சென்று உன்னைத் தோயுங்காலத்துச் சொருக்கவிழ்ந்த கூந்தலைத் திருத்தி முடிக்க என்று அவர் இந்த முல்லை மாலையைத் தந்தார் எனக் கொணர்ந்து கையுறை காட்டா நிற்றல்.

(195) பாய்ந்தடல் செல்லும் [1]விடையார் குழல்மொழி பங்கர்கங்கை
வேய்ந்த சடாதரர் குற்றாலர் வெற்பில்வை வேலிறைவர்
தோய்ந்தவிழ் கூந்தல் வகிர்ந்தே முடித்துச் சொருகநறை
வாய்ந்தவிழ் முல்லையங் கண்ணிதந் தார்மட மாமயிலே.

வனத்தயல் நின்ற வல்லிகைத் தழையோ (டு)
அனத்தை யொப்பாள்முன் அன்புறத் தோன்றல்.

**இற்கொண்டேகல்.**

இற்கொண்டேகல்-என்பது, இவ்விரவுக்காலத்துத் தலைமகன் துணிந்து வந்தமையால் போற்றுதற் பொருட்டு வந்தனம். இனி அன்னைமார்க்குச் சுழுத்தி நித்திரையாக ஒடுங்கிய பொறி புலன் கரணங்கள் சொப்பன சாக்கிரவியாபகமாகா முன்னமே செல்வோமெனத் தலைவியைப் பாங்கி இற்கொண்டேகாநிற்றல்.

(196) பிறங்கு மருக்கொன்றை சூடுங்குற் றாலப் பிரான்வரைமேல்
[2]மறங்கொண் டிறைவர் இருள்வர லால்வந் தனமினியாம்
உறங்கும் படியன்னை மார்க்கும் நிலைபெயர்ந் துட்புகுந்தே
இறங்குங் கரணங்க ளேறுமுன் செல்குவம் ஏந்திழையே.

அன்னையர் கண்விழிப் பஞ்சிய தோழி
மின்னைஇற் கொண்டு விரைவொடு புகுதல்.

---

1 விடையார்-காளைவாகனனாகிய சிவன்.  2 மறம்—வீரம், துணிவு.

## பிற்சென்று இறைவனை வரவுவிலக்கல்.

பிற்சென்று இறைவனை வரவுவிலக்கல்—என்பது, தலைமகளானவளை நீ மதிமுகமாதென்று நோக்கிவந்தால் நின்னது மயக்கமாகிய அந்தகாரத்தை அறுக்குமோ? அதுமுகத்துக்கே உவமை. உன்னைக் கலைமதிவல்லன் என்று அவள் விரும்பினால் உன் அறிவுக்கே விசேடம். அன்றி இந்த இருட்படலத்தை அறுக்கமாட்டாது. ஆனதால் இந்த இருட்குறி வருதல் துணிவல்ல எனப் பாங்கி பின்வந்து வரவு விலக்காநிற்றல்.

(197) கொலைமழு வாளியர் குற்றாலத் தார்திரி கூடமெனும்
மலையிறை வாமின் மதிமுகம் நோக்கி வரலுமுன்னைக்
கலைமதி வல்லனென் றம்மான் விரும்பலும் காரிருளைத்
தொலைவுசெய் தல்நிச மன்றிவ் வருதல் துணிவலவே.

அற்குறி வருதல் ஆசையின் பொருட்டே
நற்குறி யன்றென நாதனை விலக்கல்.

## தலைமகன் உயங்கல்.

தலைமகன் உயங்கல்—என்பது, யான் வருதலை நீ தடுக்கில் வருவேனோ? வாரேன். என் மனதானால் எனக்குத் தறுகாது. இங்ஙனம் வராது என் மனத்தைத் தறுக்க உன்னாலாயினும் தகுமோ? தகமாட்டாது. இப்படியிருக்கத் தடுத்தால் என்செய்வேனெனத் தலைமகன் வருந்தாநிற்றல்.

(198) அரவே [1]பணி[2]புல் [3]லதளே [4]கலையருந் [5]தூண்முயலா
[6]திரவே யெனக்கொண்ட குற்றாலர் வெற்பினில் ஏந்திழையே
வரவே விலக்கில் வரேனிங் கெனக்கு வராமனது
தரவேயுன் னாலுந் தகுமோ தகாதென் தடுப்பதுவே.

வாரே னெனக்கு வாரா மனது
தாராய் நீயுந் தாலரி தென்றல்.

## தோழி தலைவி தோயா கிளந்து விடுத்தல்.

தோழி தலைவி தோயா கிளந்து விடுத்தல்—என்பது, இவ்வரையிடத்து அனேக துட்டமிருக சஞ்சாரமானதால் நின் ஊர் செல்லு

---

1 பணி—ஆபரணம். 2 புல்—புலி. 3 அதள்-தோல். 4 கலை —வஸ்திரம். 5 ஊண்—உணவு. 6 இரவு—பிச்சை.

மனவின் மகா அச்சத்தொடுங் கூடியிருக்குந் தலைமகட்குத் தேற்ற மாம்படி வெற்றிக்கொம்பு குறிப்பீராக எனத் தலைவர்க்குத் தலைவி தோயாகூறி விடுக்காநிற்றல்.

(199) [1]கழைக்கேயுந் தோளி குழல்மொழி பாகம கேசர்வெற்பின்
[2]உழைக்கே [3]வியாக்கிரம் [4]பஞ்சா னனங்களி றுண்டதனுல்
மழைக்கேணி சூழ்நன் னகர்க்கேசென் றூலெம் மனதி[5]டை[6]வார்
குழைக்கே யுறுதி பெறக்குறிப் பீர்[7]கொம்பைக் கொற்றவரே.

கார்க்குழல் மனதிற் கவலை தீர்கவின்
ஊர்ப்புகிற் கொம்பொன் றூதுக வென்றது.

## திருமகட் புணர்ந்தவன் சேறல்

திருமட் புணர்ந்தவன் சேறல்—என்பது, குற்றாலக்கடவுளார் திருவடித்துணைகள் எனக்கு உண்டு. ஆதலால் பயமென்பதொன்று எனக்கு இல்லை யான் வருதலும் போதலும் அரிதன்று. தலைமகளைக் குறியிடத்துக் கொண்டுவரலும் பின்னர் மனைக்கட்கொண்டு சேறலு மாகிய நின் பணியே பெரிதெனச் சொல்லி யுபசரித்துத் தலைமகன் செல்லாநிற்றல்.

200 [8]ஒருதலை யோட்டிற் பலிகொள்குற் றாலர் உபயபதங்
கருதலி னற்பய மொன் றிலை யானிந்தக் கங்குன்மின்னே
வருதலும் போதலு மோதா னரிதுநின் மாதைஎன்பாற்
றருதலும் பின்பு மனைக்கேகொண் டுய்த்தலும் தானரிதே.

பனிமொழிப் பாங்கி பண்பினை வியந்து
தனியுப சரித்துத் தலைமக னேகல்.

இவற்றுள், இறையோன் இருட்குறி வேண்டலும் நெறியின தெளிமை கூறலும் அவன் நாட்டணியியல் வினாதலும் இறைவிக்கு இறையோன் குறியறிவுறுத்தலும் ஆகிய நான்கும் வேண்டற்கும், பாங்கி நெறியினது அருமைகூறலும் இறைமகள் இறைவனைக் குறிவரல் விலக்கலும் ஆகிய மூன்றும் மறுத்தற்கும், கிழவோன் அவள் நாட்டணியியல் வினாதலும் அவர்க்குத் தன்னாட்டணியியல் சாற்றலும், நேரிழைப் பாங்கியொடு நேர்ந்துரைத்தலும் ஆகிய மூன்றும் உடன்

---

1 கழை—மூங்கில். 2 உழை-பக்கம். 3 வியாக்கிரம்—புலி. 4 பஞ்சானனம்—சிங்கம். 5 இடை—வருந்துகிற. 6 வார்குழை—நீண்ட குண்டலத்தையுடைய தலைவி. இது அன்மொழித்தொகை. 7 கொம்பு—ஊதுகொம்பு. 8 ஒரு-ஒப்பற்ற.

படற்கும், நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக்குரைத்தலும், குறியிடை நிறீஇத் தாய்துயிலறிதலும் இறைவிக்கு இறைவன் வரவறிவுறுத்த லும், அவட்கொண்டு சேறலும் ஆகிய நான்கும் கூட்டற்கும், வண் டுறைதாரோன் வந்தெதிர்ப்படுதலும், தேற்றலும், புணர்தலுமாகிய மூன்றும் கூடற்கும், புகழ்தலும், எய்திப் பாங்கி கையுறைகாட்டலு மாகிய இரண்டும் பாராட்டற்கும். இறைவன் இறைவியை இல்வயின் விடுத்தலும், பாங்கி இற்கொண்டேகலும் ஆகிய இரண்டும் பாங்கிற் கூட்டற்கும், நேராதிறைவி நெஞ்சொடு கிளத்தலும், தலைமகள் ஆற் றினதருமை நினைந்திரங்கலும், பெருமகன் மயங்கலும், தோழி தலைவி தோயா கிளந்துவிடுத்தலும் ஆகிய நான்கும் முயங்கற்கும், பாங்கி குறியுய்த்தகறலும், திருமகட்புணர்ந்தவன் சேறலும் ஆகிய இரண்டும் நீங்கற்கும் உரியவாமெனக் கொள்க. இவற்றுள், நேர்ந்திறைவி நெஞ்சொடு கிளத்தலும், ஆற்றினதருமை நினைந்திரங்கலும், இறை வனைக் குறிவரல் விலக்கலும், ஆகிய மூன்றும் வரைதல் வேட்கைக் கும், பாங்கி நெறியினதருமை கூறலும், இறைவனை வரவு விலக்க லும், தலைமகள் துயர்கிளந்து விடுத்தலும் ஆகிய மூன்றும் வரைவு கடாதற்கும், உரியவாமாறுணர்க.

ஆகச் செய்யுள் 200

இரவுக்குறி முற்றும்.

## இரவுக்குறியிடையீடு.

அல்லகுறி வருந்தொழிற் கருமை யென்றுங்
கெல்லுக்குறி யிடையீ டிருவகைத் தாகும். (ந. அ. களவு. 43).

இறைவிக் கிகுளை யிறைவர வுணர்த்துழித்
தான்குறி மருண்டமை தலைவியவட் குணர்த்தலும்
பாங்கி தலைவன் றீங்கெடுத் தியம்பலும்
புலந்தவன் போதலும் புலர்ந்தபின் வறுங்களம்
தலைவிகண் டிரங்கலும் தன்றுணைக் குரைத்தலும்
தலைமக ளவலம் பாங்கி தணித்தலும்
இறைவன்மேற் பாங்கி குறிபிழைப் பேற்றலும்
இறைவிமேல் இறைவன் குறிபிழைப் பேற்றலும்
அவள்குறி மருண்டமை அவளவற் கியம்பலும்
அவன்மொழிக் கொடுமைசென் றவளவட் கியம்பலும்
என்பிழைப் பன்றென் றிறைவிநோ தலும்என
ஒன்றுபன் னொன்றும் அல்லகுறிக் குரிய. (ந. அ. களவு. 44).

## இறைவிக் கிருளை யிறைவரவுணர்த்தல்.

இறைவிக் கிருளை யிறைவரவுணர்த்தல்—என்பது, ஒருதாயிடத்துச் சூற்கொள்ளு மிடத்து முட்டையாகச் செனித்துப் பிறந்து, பிறகு புள்ளினமாய் உருக்கொண்ட கிளியும் மயிலும் தலைமகன் எடுப்பச் செய்தலினால் சேக்கைகளை விட்டுப் பிரிந்து பிரிந்து வந்தடைகின்றன. ஆதலால், தலைமகன் வருங்குறியாகக் காணப்பட்டதெனப் பாங்கி தலைவிக்கு இறைவரவுணர்த்தாநிற்றல்.

201 ஒருகருப் புக்கி இருபிறப் பாயுருக் கொண்டபசுங்
கருநிறக் [1]கிள்ளையும் [2]மஞ்ஞையுங் காவிற் கலைகுதுபார்
[3]செருவினிற் செல்[4]விடை யார்திரி கூடச் சிலம்பினன்பர்
வருவது போலணங் கேதோன்று தென்றன் மனத்தினுக்கே.

இறையோன் புள்ளினை எடுப்பல்கண் டிருளை
யிறையோட் குணர்த்தி சேர்ந்தவட் சேறல்.

## தான் குறிமருண்டமை தலைவியவட் குணர்த்தல்.

தான் குறிமருண்டமை தலைவியவட் குணர்த்தல்—என்பது, நமது சிறைப்புறத்து அசோக வனமே குறியிடமாகவும், அவ்விடத்துப் புள்ளெழுப்பல் முதலாயினவே வரவுணர்த்தலாகவும் குறித்தகன்று அல்லாத குறித் தலைவன் போந்து மருண்டமையால், யான் குறியிடத்துப் புலருமளவும் நின்று அவர் வாராமையால் இவ்விடத்து வந்தேனெனப் பாங்கி தானும் மருண்டமை தலைமகட்கு உணர்த்தாநிற்றல்.

(202) [5]உரத்தா டரவப் பணியார்குற் றலர் உயர்வரைவேற்
கரத்தார் குறிபிழைப் பெய்திய தாற்கங்குல் [6]காய்கதிரா
யிரத்தான் வருமள வுந்தேடி நின்றுநின் றேங்கியவர்
வரத்தா மதங்கண்டு வந்தேன் புரிகுழல் வாணகையே.

அல்லாக் குறிவந் தடைந்தவர் குறிக்குச்
செல்லா நின்றவள் திருந்திழைக் குணர்த்தல்.

---

1 கிள்ளை—கிளி. 2 மஞ்ஞை—மயில். 3 செரு—போர். 4 விடையார்—இடப வாகனத்தையுடைய சிவன். 5 உரம்—மார்பு. 6 காய் கதிர் ஆயிரத்தான்—ஆயிரம் கிரணனை சூரியன்.

## பாங்கி தலைவன் தீங்கெடுத்தியம்பல்.

பாங்கி தலைவன் தீங்கெடுத்தியம்பல்—என்பது, இவ்விரவில் தலைமகன் வரவுணர்ந்து துயிலொழிந்து குறியிடத்து நெறிதவறுது யான் சென்று நின்று தனியே வெருவுற அவ்விடத்து வாராது பிழைப்புற்றூர். அதை யாராயுமிடத்து நல்வினை கூட்டாது தீவினை மேலீட்டால் இன்றைத் தினத்துக்கு அவர் கொடியார் எனப் பாங்கி தலைமகட்குச் சொல்லாநிற்றல்.

(203) [1]முறிபிழை யாதுமெய்க் கேய்உமை பங்கர்முன் னன்பரெச்சிற்
கறிபிழை யாதுண்ட குற்றூலர் வெற்பிலிக் கங்குலிலே
நெறிபிழை யாது துயில்நீங்கி யுஞ்சென்று நிற்பமின்னே
குறிபிழை யாகச்செய் தா[2]ரன்பர் பார்க்கிற் கொடியவரே.

நெறிவர வுணர்ந்து நேர்ந்தவ ளிறைவன்
குறிவில கியவாற் கொடிய ரென்றது.

## புலந்தவள் போதல்.

புலந்தவள் போதல்—என்பது, வரவுணர்ந்து குறியிடை நேராநின்ற பாங்கியும் நீங்கக் குறிபிழைப்புற்ற தலைமகன் புலர்காலமாகக் கண்டு இன்றைக்கும் தலைமகளின்பத்தை யடையலாமென்று வந்தோம். அஃது எய்தாத காலத்தெய்துமோ வென மனதைச் சரிப்படுத்திக்கொண்டு செல்லாநிற்றல்.

(204) கைதாழ் முகத்துக் களிற்றுரி போர்த்த கடவுள்விரி
[3]பைதாழ் அரவப் பணியார்குற் றூலர் பனிவரைமேல்
மைதாழ்கண் ணூளையின் றுந்தோய லாமென்று வந்தனம்யாம்
எய்தாத காலத்தி லெய்திடு மோஇன்பம் ஏகநெஞ்சே.

செல்குறி பிழைத்த செம்மல்வை கறைகண்
டில்புக நெஞ்சுட னியம்பா நிற்றல்.

## புலர்ந்த பின் வறுங்களந் தலைவி கண்டிரங்கல்.

புலர்ந்தபின் வறுங்களந் தலைவி கண்டிரங்கல்— என்பது, இருள் புலர்ந்ததின் பின்னரும் தலைமகன் வாராத குறியிடைச் சென்று வண்டினங்களைப் பார்த்து இரவுக் குறிவந்த தலைமகற்கு

---

1 முறி—தளிர். 2 அன்பர்—கண்ணப்பநாயனூர். 3 பை—பாம்பின் படம்.

சென்று வண்டினங்களைப் பார்த்து இரவுக்குறிவந்த தலைமகற்கு நாம் துயிலொழிந்து வந்து நின்று காறாது போனதைச் சொல்ல வில்லையோவெனத் தலைமகள் இரங்காநிற்றல்.

(205) அரும்பலர் கொன்றையந் தாமர்குற் றலர் அணிவரைமேல்
வருங்குறி யுந்தவ றிக்கங்குல் வாயிடை வந்தவர்முன்
[1]சுரும்பினங் காள்சொல்ல வில்லைகொல் லோதுயில் நீங்கிவந்திப்
பெரும்புனத் தேநின்றி யான்சென்ற வாறு பிறித்துரைத்தே.

[2]தண்டலைப் புகுந்த தலைவனில் களத்தைக்
கண்டவா வண்டொடு கருதி விறைதல்.

### தலைவி தன்றுணைக் குரைத்தல்.

தலைவி தன்றுணைக் குரைத்தல்—என்பது, குறிபிழைத்துச் செல்லும்போது தலைமகன் அலர்க் குறியாக ஒரு வேயின் கண்ணே தாமரைப் பூவை வைத்துப் போனதைப் புனத்தயற்சென்று பார்ப்பளவிற் கண்டேன். அவர் வந்ததும் உள்ளதே அவருள்ளத்தன் புமுள்ளதே எனத் தலைவி பாங்கிக்கு உரையாநிற்றல்.

(206) வரன்றன் றகைமை தெரியா துலகெங்கும் வானும்நின்றான்
அரன்[3]றந்த வேழ முரித்தோர்குற் றலத் தமர்ந்திடுநம்
[4]பரன்றந்தை வாய[5]யன் றாய்வைத் திருக்கும் பரிவுகண்டேன்
[6]உரன்றந்த வேலண்ணல் வந்ததுண் டன்புமுண் டொண்ணுதலே.

அலர்க்குறி காட்டி யவன்சென் றதற்பின்
இலகிழை யவள்கண் டிகுளைக் குரைத்தல்.

### தலைமகள் அவலம் பாங்கி தணித்தல்.

தலைமகள் அவலம் பாங்கி தணித்தல்—என்பது, எம்பெருமானது திருவுளத்தையறியாமல் நானு விசாரத்தையுமுற்று மருளாநின்றனையே. இவ்வனத்தின்கண் அவரைத் தவிரத் தாமரைப் போது ஒன்று வரவேண்டியதில்லையே. யான் இப்போது அவரைக் கண்டு வருகிறேனென்று பாங்கி தலைமகளை ஆற்றுவித்து அவட்செல்லா நிற்றல்.

---

1 சுரும்பு—வண்டு. 2 தண்டலை—சோலை. 3 தந்தம்—ஆனைக்கொம்பு. 4 பரன் தந்தை—வேய். (சிவனுக்கு வேய்தந்த முத்து என்னும் பெயருண்மை புராணத்துக் காண்க) 5 அயன் தாய்-தாமரை. பிரமா தாமரையிற் பிறந்தவன் ஆதலின். 6 உரன்—வலிமை.

(207) வில்லாக மேரு வரைவளைத் தே[1]சமர் வெற்றிகொண்ட
வல்லார்குற் றாலர் வரையி லிறைவர் மனதறியா
தெல்லா விசாரமு முற்றே மருண்டனை யேயவரை
அல்லாம லிவ்வனத் [2]தம்புய மேதுசொல் லாரணங்கே.

அண்ணலைத் தவிர அம்புய மிவ்வனத்
தொண்ணுத லேதென் றுளத்துயர் தணித்தல்.

### இறைவன்மேற் பாங்கி குறிபிழைப் பேற்றல்.

இறைவன் மேற் பாங்கி குறிபிழைப் பேற்றல்—என்பது, தலைமகன் அலர்க்குறி காட்டிச் செல்லத் தலைமகள் கண்டு சொல்லக் கேட்ட பாங்கி அங்ஙனஞ் சென்று அவனைக் கண்டு நுமது குறி பிழைத்தமையால் சூரலும் [3]வேரலும் கிழிக்கும் புனமெங்குந்தேடித் தலைமகள் இடைதலைக் கண்டு நின்னூர்க்கு வருதற்கு நினைவுள்ளது. அவ்விடமறியாமல் இங்ஙன் நின்றேனெனப் பாங்கி சொல்லா நிற்றல்.

(208) பார்க்கும் விசும்புக்கு மொன்றா யவர்பற்றி லார்வினையை
தீர்க்குங்குற் றாலர் வரையிற்பைஞ் [4]சூரல் செறி[5]வெதிர்கள்
ஈர்க்கும் புனத்திடை தேடியு மாதிடை வானுநும
தூர்க்கும் வரநினை வுண்டறி யாமலிங் குற்றதுவே.

எம்மூர்க் குறிபிழைப் பெய்திய வாற்றால்
நம்மூர்ப் புகநினை வுற்றன மென்றது.

### இறைவிமேல் இறைவன் குறிபிழைப் பேற்றல்.

இறைவிமேல் இறைவன் குறிபிழைப் பேற்றல்—என்பது, யான் இற்றை யாமத்துக் கண்துஞ்சாது குறியிடத்தெய்தித் தலைமகளைக் காணாமல் உற்றதோர் [6]அல்லலைக் கண்டிருந்தமையால் அவ்விடத்து அஃறிணைப் பொருள்களும் வாய்[7]விண்டு பேசத்தெரியுமானால் அவள்மீதே குறைசொல்வதாயிருக்குமெனத் தலைமகன் குறிபிழைப் பேற்றா நிற்றல்.

(209) கொண்டு செலுத்தும் நெறியாரை வாழ்விகுற் றாலர்வெற்பிற்
கண்டுயில் நீங்கிவந் தேயா னுறுமல்லல் கண்டதனால்

1 சமர்—போர். 2 அம்புயம்—தாமரை. 3 வேரல்—மூங்கில். 4 சூரல்—பிரம்பு. 5 வெதிர்—மூங்கில். 6 அல்லல்—வருத்தம். 7 விண்டு—திறந்து.

வண்டு களுஞ்சிறைப் புட்களும் பூத்த வனங்களும்வாய்
விண்டுசொல் லத்தெரிந் தாற்சொல் லுமேகன்னி மேற்
குறையே.

தன்னிருட் குறிசுடர்த் தொடிபிழை யென்னத்
தன்னது குறிக்குச் [1]சான்றவ னுரைத்தல்.

### தலைவி குறி மருண்டமை தோழி தலைவற் குணர்த்தல்.

தலைவி குறி மருண்டமை தோழி தலைவற் குணர்த்தல்—என்பது, நீவிர் வந்து புள்ளெடுப்பல்செய்ய வரவுணர்ந்து குறியிடத் துய்ப்பச்சென்று நும்மைக் காணாது செண்பகப் பொழிலின்கண் கோடுகள் ஆடித் தேனிறாலைச் சிதைப்ப அதன் [2]பன்னத்துச் சொட்டிய தேன்றுளியினது அரவத்தைப் பின்பு நும் குறியாமென்று வந்து நைதலையுற்றாள் தலைமகளெனப் பாங்கி தலைவற்கு உணர்த்தா நிற்றல்.

(210) சூடிய கொன்றைச் சடையார்குற் றாலத்தர் தொல்வரைமேல்
நீடிய செண்பகக் காவிற் [3]சதனத்தின் நீண்டெழு[4]கோ
டாடி [5]யிறால்சிதைத் தேவீழ் [6]நறவின் [7]அரவமதை
நாடியிங் கேநின் குறியென்று வந்துநைந் தாளண்ணலே.

செய்யாக் குறியைச் செய்குறி யென்ன
கையா நின்றவள் [8]நாம்பலை யுரைத்தல்.

### அவன் மொழிக் கொடுமை சென்றவட் கியம்பல்.

அவன் மொழிக் கொடுமை சென்றவட் கியம்பல்—என்பது, இடையறாத வேட்கையை யடைந்து அணையப் பெறலாமென்று வருங் காலத்துத் தலைமகள் வந்தெய்தாதது என்ன தீவினையோ வென்று ஊழினை நொந்துகொண்டாரென்று தலைவனது மொழியின் கொடுமையைப் பாங்கி தலைமகட்கியம்பாநிற்றல்.

(211) பூவினை மேவுந்திப் போதனும் வேதனும் போற்றிட[9]முக்
கோவினை யும்பெற்ற குற்றாலர் வெற்பினிற் [10]கொற்றவா

1 சான்று—சாக்ஷி. 2 பன்னம்–இலை. 3 சதனம்–இலை. 4 கோடு–கொம்பு. 5 இறால்–தேன்கூடு. 6 நறவு–தேன். 7 அரவம்-ஒலி. 8 நாம்பல்-(இளைத்தல்) வருத்தம். 9 முக்கோவினை—படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய சிறந்த முத்தொழில்கள். 10 கொற்றவர் அவாவினை உற்று—தலைவர் வேட்கையை அடைந்து.

வர்வினை யுற்று வருங்கால மாது வராததென்ன
தீவினை யோவென்று கூறுகின் றார்பசுந் தேமொழியே.

ஒருவரை நோவா தூழினை நொந்தார்
திருமொழிக் கொடுமை செல்விக் குரைத்தல்.

### என்பிழைப்பன்றென்றிறைவி நேர்தல்.

என்பிழைப்பன்றென்றிறைவி நேர்தல்— என்பது, நமக்குத் தமராகியவர் சிறைசெய்த செறிப்பினை நீங்கிக் குறியிடத்துச் சென்றதும் குறிப்பிழை செய்ததும் நீயன்றோ அறிவாய். என்பிழைப் பன்று. பிரமா இட்ட [1]பொறிப்பிழையே எனத் தலைமகள் பாங்கி முன் னொந்துரையாநிற்றல்.

(212) [2]மறிப்பிணை யேந்திய குற்றால நாதர் வரையிலெமர்
செறிப்பினை நீங்கி யிறைவர் குறியிடஞ் சென்றதுமக்
குறிப்பிழை செய்ததும் நீயறி வாய்[3]குர வன்பொறித்த
பொறிப்பிழை யாமணங் கேயென்ன வாறு புகலுவதே.

என்பிழைப் பன்றே யிறையோ னெழுதிய
முன்பிழைப் பென்ன மொய்குழல் மொழிந்தது.

தாயும் நாயுமூ ரும்துஞ் சாமை
காவலர் கடுகுதல் நிலவுவெளிப் படுதல்
கூகை குழறுதல் கோழிகுரற் காட்டுதல்
ஆகிய ஏழும் அல்லகுறித் தலைவன்
வருந்தொழிற் கருமை பொருந்தத வுரிய. (ந. அ. களவு. 45)

### தாய்துஞ்சாமை.

தாய்துஞ்சாமை—என்பது, அல்லகுறிக்கு எதிர்ப்பட்டுச் சென்ற தலைமகன் பிற்றை ஞான்று இரவிற் குறியிடைவந்து நிற்பச் சிறைப்புறத்துள்ள தலைமகள், நமதன்னைமார் கண்டுஞ்சாமுன்னமே அவர்பேரன்புடையாராயினும், புள்ளெடுப்பல் முதலியன வருங்குறி காட்டி வருதற்கு ஒல்குவாரெனப் பாங்கியொடு சொல்லி வருந்தா நிற்றல்.

(213) சடை[4]யாரக் கங்கை தரித்தவர் முன்னம் தழல்நகையால்
[5]அடையார் புரமெரி குற்றாலர் வெற்பில் [6]அனையர்[7]திட்டிக்

1 பொறி—எழுத்து. 2 மறிப்பிணை—பெண்மான். 3 குரவன்—பிரமன். 4 ஆர—நிறைய. 5 அடையார்–பகைவர். 6 அனையர்—தாய்மார். அன்னையர் என்பதன் இடைக்குறை. 7 திட்டிக்கடை—கடைக்கண்.

கடையே பொருந்த அடைத்துறங் காமுனம் காதலரன்
புடையா ரெனினும் வாரரொல்கு வார்மன தொண்ணுதலே.

நல்கனே றஞ்சா நாட்டத் தவர்வரற்
கொல்குவ ரெனவுயிர்ப் பாங்கிக் குரைத்தது.

## நாய்துஞ்சாமை.

நாய்துஞ்சாமை—என்பது, எழுத்துஞ் சொல்லும் கற்றறியாதார் புல்லாவெழுத்திற் பொருளின்மை கூறுமிடத்து அவையெல்லாம் கற்றோர்ந்த நல்லோர் விலகிச் செல்வதுபோல நம்மூர்ப் புறத்துக் குரைக்கும் ஞாழியினது குரலொலி கேட்டஞ்சி நமதன்பர் வாராரெனத் தலைமகள் தோழிக்குச் சொல்லாநிற்றல்.

(214) [1]கல்லார்[2]புல் லாச்சொல் லுரைக்கின்ற [3]கோட்டியிற் கற்றுணர்ந்த
நல்லார்செல் லாரவை போலவு மேநன் னகர்ச்[4]சயில
வில்லார்குற் றாலத்தர் வெற்பின் மிகவெகுண் டேகுரைக்கும்
பொல்லாச் [5]சுணங்கன் கண்டஞ்சிவா ராரன்பர் பூங்கொடியே.

வீரக் கழலோன் மேவலைத் தடுக்கும்
[6]கூரக் குரலின் கொடிதனைக் குரைத்தல்.

## ஊர் துஞ்சாமை.

ஊர்துஞ்சாமை—என்பது, எனது சீர்மை தங்கிய நிதம் பானுபோகத்தை யறிய வேண்டி வந்த தலைமகன் இவ்வூர் துஞ்சாதொலித்தலைக் கேட்டு வாராதுநிற்பர் இஃதெல்லாம் என் ஊழின் பயனென்று தலைமகள் வருந்தா நிற்றல்.

(215) காரர வப்பட மத்தன் [7]பரதர்கை கூப்புநம்பர்
ஆரர வப்பட லைத்தாள் புனையுங்குற் றாலர்வெற்பென்
[8]சீரர வப்படங் காணவந் தார்திகைப் பாரணங்கே
ஊரர வப்படக் கண்டாலென் செய்வதென் ஊழ்விதியே.

இன்புற வந்தவர்க் கிடரூர் விழிப்பென
அன்புறு தலைவி யழுங்க லுற்றது.

---

1 கல்லார்—படியாதவர். 2 புல்லாச்சொல்—பொருத்தமில்லாத சொல். 3 கோட்டி—சபை, கூட்டம். 4 சயிலவில்லார்—மலையை வில்லாகவுடைய சிவன். 5 சுணங்கன்—நாய். 6 கூரன்—நாய். 7 பரதர்—நடனத்தையுடையோர். 8 சீரரவப் படம்— அழகிய பாம்பின் படம்போலும் அல்குல்.

## காவலர் தடுத்தல்.

காவலர் தடுத்தல்—என்பது, குறியிடத்து வந்து நிற்குந் தலைமகனுஞ் சிறைப்புறத்திருக்கும் யானும் ஒரு தலை கூடாது அங்குமிங்குமாய்த் தனித்தனியிருந்து இந்நகரத்துக் காவலாளர் அறையும் பறையொலிக்கு ஓர் அசுணப்புட்போல் இறந்துபடுவதாயினேனெனத் தலைமகள் வருந்தா நிற்றல்.

(216) நிறையும் புனற்பொய்கை சூழ்வள நன்னகர் நித்தர்சது
மறையும் பரவிய குற்றால நாதர் வரையிடத்தே
இறையும் இறையுடன் யானும்வன் காவலர் இந்நகரில்
அறையும் பறைக்[1]க சுணப்பக்கி போல அயர்ந்தனமே

மதிவா ணுதல்மன் வருதலைத் தடுக்கும்
பதிகா வலர்தம் பறையொலிக் கஞ்சல்.

## நிலவு வெளிப்படுதல்.

நிலவு வெளிப்படுதல்—என்பது, என்னைத் தழீஇக்கொள்ள வேண்டுமென்று துணிந்து இரவுக்காலத்து வரும் தலைமகன் தாய் துஞ்சாமை முதல் காவலர் தடுத்தல்வரை இவையெல்லாம் ஒழிந்தவிடத்து, வருங் குறிகாட்டி வருமுன்னமே பலர்கண்ணுக்கும் புலப்படவோர் ஒளிகாட்டாக வந்தனையே. முன்னாளில் விகாரவசத்தால் குருபத்தினியென்றும் பாராது நீ தொட்டமையை எண்ணிக் குறித்திலையே என்று தலைமகள் நிலவொடு புலம்பா நிற்றல்.

(217) கருதத் துணிந்தவர்க் கின்பமெஞ் ஞானக் கடலமிழ்தைத்
தருசித் திரசபைக் குற்றால நாதர் தடவரைவாய்
மருவத் துணிந்து வருவார் வருமுன்வந் தாய்நிலவே
[2]குருபத் தினியையுந் தொட்ட விகாரங் குறித்திலையே.

நலனுற வந்தோன் நண்ணுமுன்னம்
நிலவுக்கண் டிரிவை நெடுந்துயர் உரைத்தல்.

---

1 அசுணப்பக்கி—அசுணப்புள், இதனை ஒரு மிருகம் என்று கூறுவாரும் உளர். கம்பராமாயணம், சிறப்புப் பாயிரம். 2 சந்திரன் தன் குருவாகிய பிரஹஸ்பதியின் பத்தினி தாரையைச் சேர்ந்தானென்பது புராண வரலாறு.

### கூகை குழறுதல்.

கூகை குழறுதல்—என்பது, நமக்குச் செல்காலமும் செல்லாமையும் உணர்த்துவதாக நாலாம் யாமத்தைக் குறித்துத் தன்னைப் பகல் வென்ற காக்கைக்கு இரவிற் செல்லாதன நோக்கி ஓர் வெற்றி கூறுவதாகச் செவ்வுரையின்றிக் குழறிக் கொட்டாநிற்கிறது இக்குன்றக் கூகையென்று, தலைமகன் சிந்தாகுலமுற்று நிற்பானெனத் தலைமகள் தோழிக் குணர்த்தாநிற்றல்.

(218) இகல்வென்ற கண்ணுதற் குற்றாலர் வெற்பி லிறையறிவால்
அகல்குன்றக் கூகை நமக்குச் செல்கால மறிவதற்காய்
[1]பகல்வென்ற காக்கைக் கிரவிற்செல் லாமையைப் பற்றிவெற்றி
புகலுஞ் செவ்வின்றிக் குழறுமென் றேநிற்பர் பூங்கொடியே.

ஊமன் குழற லுசாவின் றுணர்ந்த
கோமன கருத்தைக் கொடுங்குழைக் குரைத்தல்.

### கோழி குரற்காட்டல்.

கோழி குரற் காட்டல் என்பது, நமது சிறைப் புறத்துக் குறியிடை வந்து நிற்கும் தலைமகனது மௌலியின்கண் மணிகள் உமிழாநின்ற பிரகாசத்தை இரவியின் தோற்றமென்றெண்ணியோ இவ் வூருள்ளாரையெல்லாம் பலமனைகளிலுமுள்ள சேவல்கள் கூப்பிட்டழைத்தாற்போல இரண்டு சிறையுந்தட்டிக் கூவி எழுப்பாநின்றதென வப் பாங்கியைத் தலைமகள் வினவாநின்று வருந்தல்.

(219) [2]சரும வுடையினார் குற்றாலர் வெற்பிற் றலைவர்தலைப்
பெரு[3]ம குடத்தின் நவமணி [4]காந்தலைப் பெய்வளைநீள்
[5]பருதியின் றோற்றமென் றேகூப்பிட் டூர்தனைப் பன்மனைப்புள்
இருசிறை வீசி யடித்தடித் தேநின் றெழுப்பியதே.

நினைப்புறு தோழியை நேரிழை யொலிக்கும்
மனைப்புள் நினைவின் வகையினைக் கேட்டல்.

இவை பத்தொன்பதும் அல்ல குறிக்கும், வருந் தொழிற் கருமைக்கும் உரியவெனக் கொள்க ஆகச் செய்யுள் (219).

---

1 பகல்வெல்லுங் கூகையைக் காக்கை இகல்வெல்லும், வேந்தர்க்கு வேண்டும் பொழுது. திருக்குறள் 481. 2 சருமம்—தோல். 3 மகுடம்—கிரீடம் 4 காந்தல்—பிரகாசித்தல். 5 பருதி—சூரியன்

## வரைதல் வேட்கை.

அச்ச முவர்த்த லாற்று மையென
மெச்சிய வரைதல் வேட்கைமூ வகைத்தே.

(ந. அ. களவு. 47)

பருவரல் வினவிய பாங்கிக் கிறைவி
அருமறை செவிலி யறிந்தமை கூறலும்
தலைமகன் வருந்தொழிற் கருமை சாற்றலும்
தலைமக னூர்க்குச் செலவொருப் படுதலும்
பாங்கி யிறைவனைப் பழித்தலும் பூங்கொடி
இறையோன் றன்னைநேர்ந் தியற்பட மொழிதலும்
கனவுநலி புரைத்தலும் கவினழி புரைத்தலும்
தன்றுயர் தலைவர்க் குரைத்தல் வேண்டலும்
அன்புறு பாங்கி சொல்லெனச் சொல்லலும்
அலர்பார்த் துற்ற அச்சக் கிளவியும்
ஆறுபார்த் துற்ற அச்சக் கிளவியும்
காமம் மிக்க கழிபடர் கிளவியும்
தன்னுட் கையா றெய்திடு கிளவியும்
நெறிவிலக் குவித்தலும் குறிவிலக் குவித்தலும்
வெறிவிலக் குவித்தலும் பிறவிலக் குவித்தலும்
குரவரை வரைவெதிர் கொள்ளுவித் தலுமென
உரைபெற வகுத்த ஒன்பதிற் றிரட்டியும்
வரைதல் வேட்கை விரியெனப் படுமே.

(ந. அ. களவு. 48)

### பாங்கி தலைவியைப் பருவரல் வினவல்.

பாங்கி தலைவியைப் பருவரல் வினவல்—என்பது, கையிற் செறிக்கப்பட்ட வளைகள் கழலவும் கண்ணீர் வழிந்தோடி எழுதிய மையினை அழிக்கவும் உனக்கு வந்த துன்பம் யாதெனத் தலைவியைப் பாங்கி வினவாநிற்றல்.

(220) பொய்யே யிழுக்கின்ற அன்பர்மெஞ் ஞானம் புகுந்திடத்தம்
மெய்யே யிழுக்கின்ற குற்றால நாயகர் வெற்பில்வளை
கையே யிழுக்கக்கண் ணீர்வழிந் தோடிக் கரைந்திருகண்
மையே யிழுக்கமின் னேவந்த வாறு வழுத்துகவே.

மையறக் கண்ணீர் வழிந்தன கண்டு
[1]பையரா வல்குலைப் பாங்கி வினாதல்.

---

1 பையரவு அல்குல்—பாம்பின் படம்போன்ற பெண்குறியையுடையாள். இது அன்மொழித் தொகை.

## பருவரல் வினவிய பாங்கிக்கு இறைவி அருமறை செவிலி யறிந்தமை கூறல்.

பருவரல் வினவிய பாங்கிக்கு இறைவி அருமறை செவிலி யறிந்தமை கூறல் — என்பது, செவிலித் தாயானவள் என்னைப் பார்த்து வெகுண்டு ஒப்புமையால் கண்களை வடுப்பிளவு என்பார்கள். அதுவன்றி இப்போது ஊணின்றி அதரங்கள் கரிந்து உலரவும் முலைகள் பசப்பூரவும் ஓர் குற்றத்தைப் பொருந்தப் பெற்றாய். ஈது உலகம் நகைத்தற்கோ விதியின் வண்ணத்துக்கோ வந்ததென்று சொன்னாளெனப் பாங்கிக்குத் தலைவி சொல்லாநிற்றல்.

(221) முப்பாரும் போற்றிய குற்றாலர் வெற்பின் [1]முனிந்தெம்மன்னை
ஒப்பால் [2]வடுவென்பர் கண்ணையூ ணின்றி யுதடுலரச்
செப்பா முலைபசப் பூரவு மோர்[3]வடு சேரப்பெற்றாய்
இப்பார் நகைப்பதற் கோவிதி யோவென் றியம்பினனே.

செவிலி யறிந்தமை தெளிதோழிப் பாங்கிக்
கவலை யுற்றவ ளழுதுரைக் கின்றது

## தலைவி வருந்தொழிற் கருமை சாற்றல்.

தலைவி வருந்தொழிற் கருமை சாற்றல் — என்பது, செவிலி யறிந்தமைக் கஞ்சிய தலைவி, தலைமகன் அல்லகுறிப்பட்டு அப்பாற் குறியிடைவந்து நிற்ப, தாய் துஞ்சாமை முதல் கோழி குரற்காட்டல் வரையும் யான் அறிந்தறிந்து உணர்த்த நீயும் அறிந்தும் அவ்விடையூற்றைக் கடந்து சென்றுய்த்தற் கில்லாததை இப்போது நினைந்து அன்பர் இன்பந்தர வாராத வண்ணம் பகை விளைத்தது இவையல்லவோ வெனப் பாங்கி முற்கூறி வருந்தாநிற்றல்.

(222) தன்னைப் பொருவிலாக் குற்றால நாதர் சயிலத்திலே
[4]இன்னை விளைத்தன்னர் வாராத வண்ண மிகல்விளைத்த
அன்னையும் [5]ஞாளியு மூருமன் காவ லரும்பிறவும்
கொன்னை மிகுமொழிக் கூகையுஞ் செவ்வலும் கோதையரே.

வருந்தொழிற் கரிதாய் வன்பகைக் கஞ்சும்
திருந்திழை யிறைவன் சேறற் கிரங்கல்.

---

1 முனிந்து—கோபித்து. 2, 3 வடு—முன்னது, மாவடுப்பிளவு, பின்னது குற்றம். 4 இன்—இன்பம். 5 ஞாளி—நாய்.

### தலைமகனூர்க்குச் செலவொருஉப்படுதல்.

தலைமகனூர்க்குச் செலவொருஉப்படுதல் — என்பது, தலைமகனூர்க்குச் சென்றேமேயானல் அவரகத்திலும் புறத்திலும் உனது கொங்கைகளாகிய சக்கரவாளங்களும் கைவளைகளாகிய குருகுகளும் ஒக்கவந்து அடையும்படி வந்து தழீஇக்கொள்ளா நிற்பர். பிறர் பழி வந்ததுகொண்டென்னை? அவ்வண்ணமே செல்வோமெனப் பாங்கி தலைவிக்கு அருவருத்துரையாநிற்றல்.

(223) [1]அக்கணி யுந்திருக் குற்றால வெற்பர் [2]அகத்துமது
[3]சக்கர வாளம் புகப்பா ணியினிற் றரித்த[4]குரு(கு)
ஒக்கவு மேபுறஞ் செல்லத் தழீஇக்கொள்வர் உன்னைவந்தம்
மிக்கவ ரூர்க்குச்சென் றூற்செல்லு வோம்பழி மீறிலென்னே.

அவனூர்ப் புக்கின் அன்புசெய் வாரெனத்
[5]தவர்வா ணுதற்குத் தையல் மறுத்தது.

### பாங்கி இறையோற் பழித்தல்

பாங்கி இறையோற் பழித்தல் - என்பது, நீ அவர்மேற் பொருந்திய ஆர்வத்துக்குத் தலைமகன் வழுவின்றி நிறைபுகாராயின், பெற்றதாய் பசித்திருக்க உண்பானது பழி பாவமாயினும், இப்பழி பாவத்துக் கீடாகா எனப் பாங்கி தலைவிக்குக் கூறாநிற்றல்.

(224) [6]சேய்வைத் திடும்[7]பொருளோர்ந்தகுற் றாலர் செழும்பொருப்பில்
நீவைத் திடுமன்புக் கன்பர் நிறையிழந் தாற்[8]சென்னியாற்
பாய்வைத்[9]தம் மாலைக் கின்ற வுலகிற் பசித்திருக்கத்
தாய்வைத்துண் பார்பழி தானிக ரோவெதிர்க் காற்குழலே.

நீ[10]பசத் திருக்கவன் னேரா னாற்
றாய்பசிக் களியான் றன்னிலுங் கொடிதெனல்.

### பூங்கொடி யிறையோன்றன்னை நேர்ந்து இயற்பட மொழிதல்.

பூங்கொடி யிறையோன்றன்னை நேர்ந்து இயற்படமொழிதல் - என்பது, இன்பதுன்பங்கட்கீடாகிய நல்வினை தீவினை உயிர்க்கெல்லாமே

---

1 அக்கு—எலும்பு. 2 அகத்தும்—மார்பிலும். 3 சக்கரவாளம்—ஒருவகைப்புள். 5 குருகு—ஒருவகைப்புள், கைவளை. 5 தவர்—வில். 6 சேய்—குழந்தையாகிய முருகன். 7 பொருள்—பிரணவத்தின் அர்த்தம். 8 சென்னியாற்பாய்வைத்து—தலையாற் பரப்பவைத்து. 9 அம்மால்—அந்த விஷ்ணு, உலகறிசுட்டு 10 பசத்தல்—காமத்தால் பொன்னிறப் புள்ளியுண்டாதல்.

யல்லது, நம்மளவுமல்ல. நமக்குப் பிரமா எழுதியவாறே யன்றி வேறில்லையெனத் தலைமகள் பாங்கிக்கு இயற்படமொழியாநிற்றல்.

(225) இன்பதுன் பங்க ளெனவே வகுத்த [1]இருவினையும்
மன்பதை யாவுக்கு மோகம்மட் டோமன்னர் மேற்குறையென்
னன்பரா ரந்திருக் குற்றாலர் வெற்பினி னாரியரே
முன்[2]பது மாசனத் தானே விதித்த முறைப்படியே.

இருவினைப் பயன தியற்கையைப் பாங்கிக்
குரிமையிற் கூறி யொண்ணுதல் வருந்தல்.

### கனவு நலிவுரைத்தல்.

கனவு நலிவுரைத்தல்—என்பது, ஓர் வரைவினின் முடிந்த தொழில்கட்குக் காலவிரைவுபற்றி 'மூடினகண்ணுக்குள்ளது விழித்த கண்ணுக்கில்லை' என்று இவ்வுலகங்கள் சொல்லும் மொழியானவை தலைமகனை வரக்கண்ட கனவுக்கே இசைந்தது எனத் தலைமகள் பாங்கியுடன் சொல்லி வருந்தாநிற்றல்.

(226) [3]தென்னவன் [4]மாறாடி யேற்குங்குற் றாலர் செழும்பொருப்பின்
மன்னர் கனவில்வந் தார்விழித் தேன்மறைந் தாரதுதான்
இந்நில மூடுங்கட் குள்ள விழிக்குங்கட் கில்லையென்னும்
சொன்னிச மிந்தக் கனவுக்கு நேராக்குந் தோகையரே.

காட்டி மறைத்த கனவிற் கினைந்து
[5]மோட்டு முலையவள் மெய்த்துயற் றுரைத்தல்.

### கவினழிபுரைத்தல்.

கவினழிபுரைத்தல்—என்பது, முயன்று இட்டப்பட்ட நிதிகளை மறுமைக்குத் துணையாக இட்டுண்ணாது இறந்தவர்போல எனது தோற்றப் பொலிவின் நலங்களைத் தலைமகன் வரையக் கொடாதே அவமே பசலை பூத்தழிந்ததெனத் தலைமகள் பாங்கியுடன் ஆற்றாமை கூறாநிற்றல்.

(227) பூட்டும் [6]பொருப்புச் சிலையார்குற் றாலர் பொருப்பிடத்தே
இட்டும் பொருளைவைத் திட்டுண்ணும் வண்மை இறந்தவர்போல்

---

1 இருவினை—நல்வினை, தீவினை என்பன. 2 பதுமாசனத்தான்—பிரமன்.
3 தென்னவன்—பாண்டியன். 4 மாறு—பிரம்பு 5 மோடு—பெருமை, உயர்ச்சி
6 பொருப்புச்சிலை—மலையாகிய வில்.

தீட்டுந் தமிழுண்ணற் றென்னலந் தோய்வித்துச் செவ்விதழ்த் தேன்
ஊட்டுந் திறனின்றி வீண்பசப் பாயிழந் தோமணங்கே.

சயிலர் சிதிபோ வெழினலந் தலைவி
யோயவை தோழி புலப்பட வுரைத்தல்.

**தலைமகள் தன் துயர் தலைவர்க்குரைத்தல் வேண்டல்.**

தலைமகள் தன் துயர் தலைவர்க்குரைத்தல் வேண்டல்—என்பது, பூருவ புண்ணிய முடையார்க்கு ஓரிடுக்கண் வரின் அவை யொழியக் குற்றால நாயகர் விரைந்து கருணை பாலிப்பதுபோல எனது வேட்கையைத் தலைமகற்குச் சென்றுரைப்பாருண்டாகில் அந்தப் பொழுதே வந்து அருளிச்செய்யாது அங்கிருப்பார் கொல்லோ எனத் தலைமகள் பாங்கிக்குணர்த்தி வேண்டாநிற்றல்.

(228) தவப்பய னோர்க்கின்னல் துன்னிற்குற் றாலர் [1]சடுதியில்வந்(து)
உவப்பக் கருணை புரிகுதல் போலுமென் உள்ளுடைமை
அவர்க்குச்சென் றேயுரைப் பாருள ரேல்அங் கிருப்பர்கொலோ
சிவக்குந்[2]துகிரித ழாய்வந்தந் நேரத்திற் சேர்குவரோ.

உறுதுயர் தலைவர்க் குரைப்பா ரில்லென
மறுகிப் பாங்கிமு னவர்க்குரை புலம்பல்.

**துன்புறு பாங்கி சொல்லெனச் சொல்லல்.**

துன்புறு பாங்கி சொல்லெனச் சொல்லல்—என்பது, தூது விடுவாளாதற் பயன்பட ஆற்றாமையால் உரைத்த தலைமகட்குப் பாங்கியானவள், கடும்பசியையுடைய மக்கட்கு அறுசுவை யுண்டாறும் அமுதெடுப்பித்துக்கொண்டுபோய் ஊட்டுவிக்கும் கணக்கு வேண்டியதில்லை. அத்தன்மைபோல நின்குறை நீயே சொல்லவேண்டுமென்றுநிற்றல்.

(229) [3]குடும்படர் [4]பூக வனஞ்சூழும் நன்னகர்க் கோனடைந் தோர்க்(கு)
இடும்பை யொழிக்குநங் குற்றாலர் வெற்பின் இறையவர்க்கே
தொடும்பக ழிக்கண்ணி நின்துயர் நீசொல வேணுமல்லாற்
கடும்பசி மைந்தர்க் கமுதெடுத் தூட்டுங் கணக்கில்லையே.

---

1 சடுதி—சீக்கிரம். 2 துகிர்—பவளம். 3 குடும்பு—காய்க்கொத்து. 4 பூகம்—கமுகு.

ஊட்டுவா ரென்னே யுறுபசி யினர்க்கெனக்
காட்டிநின் தறைநீ கடிதுரை யென்றல்.

**அலர்பார்த்துற்ற அச்சக்கிளவி.**

அலர்பார்த்துற்ற அச்சக்கிளவி—என்பது, ஆற்றாமைப்பட்ட தலைமகளைப் பாங்கி அருவருத்தல் கண்டு மன்மதன் கையாலாகிய பாணங்கள் மிகவுங் கொடியதென்று நம் உய்யானத்துக் கொய்யும் மலர்களைச் சூட்டிக்கொள்ளாதிருந்தேன். அந்தக் குணத்தைக் கண்டு இவ்வூரின்கட் பெண்மக்களும் எனக்கு வாயலர் சூட்டுவித்தார்கள். இவையெல்லாம் என்விதி யென்று அத்தலைமகள் அச்சங் கூறாநிற்றல்.

(230) பொய்யலர் சூட்டப் பொறாதகுற் றாலர் பொருப்பின்மதன்
கை[1]யலர் [2]சூட்டு மலராமென் றெண்ணிநங் காரிகையே
கொய்யலர் சூட்டுவ தன்றிருந் தேனக் குணங்கண்டிவ்வூர்த்
தையல ரும்[3]அலர் சூட்டுவித் தாரென் றலைவிதியே.

[4]ஏவல [5]அழல இனிதலர் வெறுக்க
[6]நாவலர்க் கச்சம் நன்னுத லுற்றது.

**ஆறுபார்த்துற்ற அச்சக் கிளவி**

ஆறுபார்த்துற்ற அச்சக் கிளவி—என்பது, எழுந்து சீறப்பட்ட கரிய வேங்கைகட்கும், வெள்ளுடற் சிங்கங்கட்கும், மரைகளுங் களிறுகளும் மெலிவுற்றுச்செல்லும் ஆற்றிடைத் தலைமகன் வரில் என்படுமோ என்று என்னுள்ளம் பதறியதெனத் தலைமகள் பாங்கியொடு அச்சங் கூறாநிற்றல்.

(231) ஓங்கிய நீள்கரு [7]வேங்கைக்கும் வெள்[8]ளறு குக்குமெலிந்
தேங்கிய தாமரை யோடாம்பல் கண்டிவ ராற்றிறைவர்
பாங்கிவந் தாலென்ன வோவின்ன வென்று பதறுதுள்ளம்
வாங்கிய குன்றச் சிலையார்குற் றாலர் வரையிடத்தே.

---

1 அலர்—பூ. 2 சூட்டுமலர்—உஷ்ணத்தையுடைய பூ 3 அலர்—பலரறிந்த பழிதூற்றல். 4 ஏ—பாணம். 5 அழல—எரிக்க. 6 நாஅலர்—நாவினாற் சொல்லப்படும் பழிச்சொல். 7 வேங்கை—ஓர் மரம், புலி. 8 அறுகு—ஒருபுல், சிங்கம். இதில் வேங்கைமரம் அறுகம்புல், என நிலப்பொருளுருப தாமரை. ஆம்பல் என நீர்ப்பொருளும் தோன்றவும் புலி, சிங்கம் என கொடுவிலங்கும் அவற்றுக்கு அஞ்சும் மான், யானை இவை தோன்றவும் மொழிந்திருக்கும் நயம் காண்க. அன்றியும் கருவேங்கை வெள்ளறுகு என முரண்டொடை வந்தமை காண்க.

புல்லறு கடநம் புனத்தா றஞ்சி
ஒல்கிடைத் தோழிக் கொண்டொடி யுரைத்தல்

**காமமிக்க கழிபடர் கிளவி.**

காமமிக்க கழிபடர் கிளவி—என்பது, தலைமகனைக் காணவிருப்புற்றுக் கண்துஞ்சாத தலைமகள் வேட்கை மிக்கனவாற் கேளாதவற்றைக் கேட்பவாக விளித்துக் குற்றால நாயகர் திருக்கரத்துக்குப் பலியோடாகக்கொடுத்த கபாலமொன்றுடையவனுக்குத் தாயும் மனையும் ஒன்றாகிய தாமரைகளே! அவர்க்குப் பரியாகிய அன்னத்தை நும்மிடத்து வைத்துக்காப்பதுபோலும் என்னைத் தம்மிடத்து வைத்துக் காக்க வாரா(து) நின்றதென்னவண்ணம் எனக் கூறாநின்றது.

(232) கனைகடல் வாய்த்திருக் குற்றாலர் கொண்ட [1]கபாலிதனக்
[2]கனையு மனையுமொன் றான வரே அவர் கிள்ளையன்னார்
தனையன் புறவைத்துக் காப்பது போலுந் தலைவரகத்
தெனையன் புறவைத்துக் காக்க[3]வா ரா(து)நின்ற தெவ்வண்ணமே.

[4]தேமுற் றவரைத் தேடியுள் வருந்திக்
காமுற் றவள்[5]கழி யோடு புலம்பல்.

**தன்னுட்கைா றெய்திடு கிளவி**

தன்னுட்கையா றெய்திடு கிளவி—என்பது, கலந்து பிரிந்து என்னை மன்மதன் கணைக்கு இலக்காக வைத்துச்சென்ற தலைமகன் இப்போது எய்து மாறுண்டோவென்ன நன்னகர் சூழ்ந்த கழிமுகத்து அன்னத்தையும், பெண்ணையையும் சொல்வீர் எனத் தன்னுட் கையாற்றை வினவாநிற்றல்.

(233) மடற்றலைத் தெங்கம் பழமுதிர் நன்னகர் மன்னகர்சூழ்
கடற்றலை வாய்ச்சுற வேயன்ன மேகரும் [6]பெண்ணைகளே!
அடற்றலை மாரன் றொடுங்கணைக் கேகுறி யாகவும்வைத்(து)
[7]உடற்றலைத் தந்தவர் வந்தெய்து மாறுண்டு மோசொல்கவே.

மெய்யாற் றுவதாய் விளங்கிழை தன்னுட்
[8]கையாற் றினைக்கழி முகத்து வினதல்.

---

1 கபாலி—இங்குப்பிரமா. 2 அனை—அன்னை. மனை—வீடு 3 வாரா—வாராது என்பதன் ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம். 4 தேம்—தேயம் என்பதன் இடைக்குறை 5 கழி—கடற்கரை. 6 பெண்ணை—பனைமரம். 7 உடற்றல்—அழித்தல். 8 கையாறு—செயலறுதல்.

### நெறிவிலக்குவித்தல்.

நெறிவிலக்குவித்தல்—என்பது, இக்குன்றுழைச் சிங்கத்தின் சஞ்சாரங் கண்டு யானைகள் தடுமாறித் தடம்புரண்டு செல்லும் ஆற்றிடைக் கைவேல் துணையாகப் புயத்தொடு சாய்த்துக்கொண்டு வருந் தலைமகன் இனிவாராவண்ணம் விலக்குவிப்பாயெனத் தலைமகள் பாங்கிக்குச் சொல்லாநிற்றல்.

(234) நூல்சாயு நுண்ணிடை வல்லி குழல்மொழி நோக்கமிக்கார்
மால்சாயுங் குன்ற மடங்கற்கு வேழ மடங்கவுற்றுக்
கால்சாயு மாற்றிடைக் காலினை பொத்துக் கடுங்கதிர்வை
வேல்சாயுந் தோளண்ணல் வாராத வண்ணம் விலக்கணங்கே.

கரியரிக் கஞ்சுங் கடத்தயிற் கையோன்
வரினல னழுமென வரவு விலக்கல்.

### குறி விலக்குவித்தல்.

குறிவிலக்குவித்தல்—என்பது, இறைமகன் முன்னைப்போல் குறியிடம் இத்தலைப் பாசடைப்புனத்துண்டென்று எண்ணவேண்டுவதின்று. என்னைப் பார்த்துத் தாய்மார் உனக்கு இந்தப் பசப்பு ஏதென்னும். வாய்க்கொடுமையாற் கன்னியென்னும் மதம் பொழிவதோர் தூருச்சுதென்று வருதலை விலக்கெனப் பாங்கிக்குத் தலைமகள் உரையாநிற்றல்.

(235) கறைசேருங் கண்டக் கடவுள்குற் றாலர் கமழ்பொருப்பில்
இறையோர் குறியிட முன்போற்பைங் காவென்றெண் ணுமன்மின்னே
உறையூ ரெம்மன்னை யரிப்பசப் பேதெனு மோகொடிதால்
நிறைமாறுந் தூறும தாச்செனத் தீர்வரு நேசத்தையே.

மாறுபா டுற்ற தூறினைக் கூறி
நாறுபைம் பொழிற்குறி நனிவிலக் கென்றல்.

### வெறிவிலக்குவித்தல்.

வெறிவிலக்குவித்தல்— என்பது, குற்றாலநாயகர் திருவடிகளைக் கருதியுணங்கிய தவத்தோர்க்குச் சிறிது அன்புடையார் அமுது அயில்வித்துத் தேற்றுவதில்லையே. தலைமகன் மயக்கத்தாற் பேய்புகுந்த எனக்கு விலக்கு வெறியாட்டல்லவே. அதன்பொருட்டுப் பலியிட ஓர் தகரைக் கொல்லாது விலக்குவாயெனத் தலைமகள் பாங்கிக்கு அறநிலை கூறாநிற்றல்.

(236) குற்றலர் பாதங் கருதி மெலிந்த குணத்தினர்க்கே
உற்றார் அமுதிட்டுத் தேற்றுவ ரோஇறை யோர்மயல்யான்
பெற்றால் விலக்கு[1]மை கோறல தோஅன்னை பேதமைதீர்
முற்றா முகிழ்முலை மாதே யுனக்கறம் முன்னிற்கவே.

அறிவாய் அறநிலை யென்றருட் பாங்கியை
வெறியாட் டொழிய விலக்குதல் கூறல்

**பிற விலக்குவித்தல்.**

பிற விலக்குவித்தல்—என்பது, தலைமகன் தெருண்டு வரைதலைக்குறித்து வருவதாய்த் திரிகூடத் தெய்வத்தைக் கண்டுகிழ்த்துப் புலனெருங்குற்றிருப்பது அயர்க்கப் பிறர்தூதுவந்து இவ்விடத் துணர்த்துவதை எனது செவிப்புலன் உணராநிற்கிறது. அதனை விலக்குவாயெனத் தலைமகள் பாங்கிக்குச் சொல்லாநிற்றல்.

(237) திணமுறு வேலர் பிரிந்த தனலவர் சேர்ந்தொருமுங்
கணர்திரி கூடரைச் சிந்தித் திருக்குங் கருத்தயர்க்க
மணமுற வேஅய லார்தூது வந்து வழுத்துவதை
யுணரு தெனது செவிப்புலன் மாற்றுவி யொண்டொடியே.

அயல்தூ துகள்வந் தடையா தகற்றென
மயற்பூ ணிளமுலை மாதுக் குரைத்தல்

**குரவரை வரைவெதிர் கொளுவித்தல்.**

குரவரை வரைவெதிர் கொளுவித்தல்—என்பது, தலைமகனது மணத்தூதுகள் வருங்காலத்துச் சிற்றாரின் கண்ணேயுள்ள நமது ஐங் குரவோரையும் வரைவு எதிர்கொள்ளும்படிச் செய்வித்து எனது கற்பை நிறுத்துவையோ? எனக்குத் திடம்பெறத் திருவாய் மலர்ந்து ஒரு சொற் சொல்வாயெனத் தலைமகள் பாங்கியைக் கேளாநிற்றல்.

(238) அரவரை யார்கச் செனவே புனைந்தகுற் றாலர்[2]திரி
சிரவரை யார்மணத் தூதுவந் தாலிச் சிறுகுடிவாழ்
குரவரை யேயெதிர் கொள்வித்தென் கற்புங்குன் றாமலுமே
வரவரை வேசெய்வை யோசொல்லு வாய்திரு வாய்மலர்ந்தே.

தூவரை யிறைவன் தூணத்தூ துகள்வரின்
வரைவெதிர் வித்த மாறு கேட்டது

1 மை கோறல்—ஆட்டைக்கொல்லுதல். 2 திரிசிரவரை—திரிகூடமலை.

இவற்றுள், பருவரல் வினவிய பாங்கிக்கு இறைவி அருமறை செவிலியறிந்தமை கூறலும், தலைமகன் வருந் தொழிற் கருமை சாற்றலும், அலர் பார்த்துற்ற அச்சக் கிளவியும், நெறி விலக்குவித்தலும், குறி விலக்குவித்தலும், வெறி விலக்குவித்தலும், பிறர் விலக்குவித்தலும், குரவரை எதிர் கொளுவித்தலும் ஆகிய ஒன்பதும் அச்சத்திற்கும் தலைமகனார்க்குச் செலவொருஉப்படுதலும், பாங்கி இறைவனைப் பழித்தலும் பூங்கொடி இறையோன் றன்னை நேர்ந்து இயற்பட மொழிதலும் நின் குறை நீயே சென்றுரை யென்றலும் ஆகிய நான்கும் உவர்த்தற்கும் பாங்கி பருவரல் வினவலும், கனவு நலிவுரைத்தலும், கவினழிபுரைத்தலும், தன்றுயர் தலைவர்க் குணர்த்து வேண்டலும், காம மிக்க கழிபடர் கிளவியும், தன்னுட் கையாறெய்திடு கிளவியும் ஆகிய ஆறும் ஆற்றாமைக்கும் உரியவாமெனக் கொள்க. ஆகச் செய்யுள் (238) வரைதல் வேட்கை முடிந்தது.

## வரைவு கடாதல்.

பொய்த்தல் மறுத்தல் கழறல் மெய்த்தலென்று
ஒருநால் வகைத்தே வரைவு கடாதல்.

(ந. அ. களவு 49)

வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பலும்
அலரறி வுறுத்தலும் தாயறி வுறுத்தலும்
வெறியச் சுறுத்தலும் பிறர்வரை வுணர்த்தலும்
வரைவெதிர் வுணர்த்தலும் வரையுநா ளுணர்த்தலும்
அறிவறி வுறுத்தலும் குறிபெயர்த் திடுதலும்
பகல்வரு வானை யிரவுவரு கென்றலும்
இரவுவரு வானைப் பகல்வரு கென்றலும்
பகலினு மிரவினும் பயின்றுவரு கென்றலும்
பகலினு மிரவினும் அகலிவண் என்றலும்
உரவோன் நாடும் ஊரும் குலனும்
மரபும் புகழும் வாய்மையுங் கூறலும்
ஆறுபார்த் துற்ற அச்சங் கூறலும்
ஆற்றாத் தன்மை ஆற்றக் கூறலும்
காவல்மிக வுரைத்தலும் காமமிக வுரைத்தலும்
கனவுநலி வுரைத்தலும் கவினழி புரைத்தலும்
எனமுறை நாடி இயம்பிய இருபதும்
வரைவு கடாதல் விரியெனப் படுமே.

(ந. அ. களவு 50)

**வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்.**

வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல் — என்பது, இரவுக் குறியிடை யீட்டிஞற் பிரியா நின்று மற்ருெரு பகற்பொழுது வந்தவிடத்து விளையாட்டொழிதல் ஏதெனக் கேட்ட செவிலிக்குத் தன்னது ஆற்ருமையை மறைத்துக் கொண்டு தான் புடைத்து விளையாடல் செய்யுங் [1]கந்துகத்தை யாரோ ஒரு கள்வர் கரந்து கொடுபோயினு ரெனத் தலைமகள் சொன்ஞள் எனப் பாங்கி தலைமகற் குணர்த்தி வரைவு கடாவா நிற்றல்.

(239) நீவிட் டனைவிளை யாடலு மேதென நேர்ந்தனைகேட்
டாய்விட்ட தொன்றுக்கு மல்லவென் [2]பந்தைக்கை யாடல்செய்தே
போய்விட் டன[3]ரொரு கள்வரென் ருளண்ணல் பூப்பமுகை
வாய்விட் டவிழ்பொழிற் குற்ருல நாதர் வரையிடத்தே.

காப்பினுள் ளிருப்பாள் களவு மறைத்தமை
யாப்பதிக் கிதனை வந்துமுன் னுரைத்தல்.

**அலரறி வுறுத்தல்.**

[4]அலரறி வுறுத்தல் — என்பது, பெரிதுணர்ந் தோர்களும் அருந் தமிழினல் எடுத்து அவயவ வருணனை பகர்தற் கரியவளை, என்னுரின்கட் பேதையர்களும் அவளுறுப்பினைக் கண்டு கண்டு [5]அம்பலைப் பகர்தலுற்ருரெனத் தோழி தலைவர்க் குணர்த்தா நிற்றல்.

(240) பூவா லெடுத்துரைக்கத் தன்னைச் செய்தவர் போர்மதனைக்
கோவா லெடுத்தம்மை யெய்யாமுன் வென்றகுற் ருலர்வெற்பிற்
பாவா லெடுத்தழ கோதப் படாதநம் பாவைதன்மேல்
நாவா லெடுத்தலர் தூற்றலுற் ருரென் னகரவரே.

உம்பலைப் பழித்த முயர்முலை யவட்குறும்
அம்பலைத் தலைவற் கறிவுறுத் தியது.

---

1 கந்துகம்—பந்து. 2 பந்தைக் கையாடல் செய்தல் என்பதில் விளையாடும் கந்துகத்தைக் கொள்ளலும், பந்துபோன்ற கொங்கையை அணைத்தலும், தோன்ற இரட்டுற மொழிந்த நயம் காண்க. 3 ஒரு கள்வன் என்ஞது தலைவன் மீதுள்ள அன்புடைமை தோன்ற ஒரு கள்வர் என்ற நயமும் அறியத் தக்கது. 4 அலர்—பழிச் சொல். 5 அம்பல்—பரவாத களவு. சிலரறிய நிகழும் பழிமொழி. அரும்பல் என்பதன் மரூஉ என்பர் அரும்பு போல விரியாது நிற்றலின்.

### தாயறி வுணர்த்தல்.

தாயறி வுணர்த்தல் — என்பது, வேங்கை மலரினது நறு நாற்றத்தையுடைய கூந்தலில் நின் தழையாகிய முல்லை மலரினது வாசத்தைக் கண்டு இவட்கு ஈதுண்டுமோ வென்று ஐயுறு நின்றாள் எமது அன்னை. ஆதலான் மகட் பேசுவார்க்குக் கொடுக்கவும் கூடுமெனப் பாங்கி தாயறி வுறுத்தி வரைவு கடாவா நிற்றல்.

(241) [1]வண்டுண் டிடாமலர் சேர்குழற் காவின் மதுகரந்தேன்
உண்டுண் டிசைக்குங் கொடிமுல்லை வாசனை யூடெழும்பக்
கண்டுண்டு மோவிவை யென்றா ளனைமன்ன கார்க்கடுவைப்
பண்டுண்ட கண்டர்நங் குற்றாலர் வெற்பிற் பனிமொழிக்கே.

[2]கணிமலர்க் குழற்றுட் கடிமுலை நாறப்
பணியிடை யவடாய் பகர்ந்தமை கூறல்.

### வெறியச்சுறுத்தல்.

வெறியச்சுறுத்தல் — என்பது, நன்னகர்த் தலைவராகிய புண்ணியக் கடவுளது திருவருளைக் கருதிய தலைவனே! உன்மீது அன்புற்றவள் மயலை வேறொரு மயலாக எண்ணித் தாய்மார்கள் வெறியாடல் செய்யத் துணிந்தாரெனப் பாங்கி வெறியச்சுறுத்தி வரைவு கடாவா நிற்றல்.

(242) கயலைக் [3]குரண்டந் துரந்துகொற் றித்தின் கழனியெழு
புயலைப் பரிந்த பொழில்சூழு நன்னகர்ப் புண்ணியர்தன்
செயலைக் கருதுந் தலைவா நும்மேலன்பு சேர்ந்தகன்னி
மயலைத் தவிர்க்க [4]வெறியேகொண் டாரன்னை மார்களுமே.

பிறியா மயலை யறியா மையினால்
வெறியா டுதலை வேண்டின கூறல்.

### பிறர்வரை வுணர்த்தல்.

பிறர் வரை வுணர்த்தல் — என்பது, அனவரதமும் குற்றாலக் கடவுளார் சந்நிதானத்துக்குக் கவிவாணர்கள் பாமாலை சூட்ட வருவது போலும் தலைமகள் மிக்க அழகினைக் கேட்டு மணமாலை சூட்டுவதாக திக்குகளெல்லாமிருந்து தூதுகள் வந்தன என்று பாங்கி தலைவர்க்குப் பிறர் வரை வுணர்த்தி வரைவு கடாவா நிற்றல்.

1 வண்டுண்டிடாமலர்-வேங்கை மலர். 2 கணிமலர்-வேங்கை மலர். 3 குரண்டம்-கொக்கு. 4 வெறி-வேலனாடல்.

(243) மின்னதி கப்பொற்பின் [1]நாற்கவி வாணர் விளங்குஞ்சித்ரா
நன்னதிக் கோவுக்குப் பாமாலை சூட்டளந் நாளுமவர்
சன்னதிக் கேவரல் போல்மண மாலை தரிப்பதெண்ணி
மன்னதிக் கெட்டி னிலுமிருந் தே[2]சந்து வந்தனவே.

பிறர்தூ துகள்மகட் பேசுத லுறுத்தி
அறநே றுறவரை வாமெனக் கூறல்.

### வரைவெதிர் வுணர்த்தல்.

வரைவெதிர் வுணர்த்தல் – என்பது, களவியற்கையாகிய காமப் புணர்ச்சியை யுடைய யாம் வெளிப்பட்டு வரைவெனத் தெருண்டு வருவது எவ்வாறென்று எண்ண வேண்டல். நின்னிடத்துத் தூது இவ்விடத்து வருங்காலத்துத் தாயர்க்கு யானும் வரைவெதிர் கொள்வதாயிருக்கும். நீயும் வரைவு எய்துவாயெனத் தோழி தலைவர்க்கு வரைவெதிர் வுணர்த்தா நிற்றல்.

(244) கரவருங் காமத் தொழிலென்றெண் ணேல்நின்கட் டூதிங்ஙனே
வரவருங் காலத்தில் யானுஞ்சொல் வேன்மெல்ல வாரிநஞ்சைத்
தரவருந் தாரணர் குற்றாலர் வெற்பிற் றமர்பலருங்
குரவருங் கூடி யெதிர்கொள்வர் நீமணங் கொள்குவையே.

மணத்தூ தொன்று வருங்காற் றமர்கட்
டுணர்த்துவ னெதிர்வரென் றெண்ணுத லுரைத்தது.

### வரையுநா ளுரைத்தல்

வரையுநா ளுரைத்தல் — என்பது, அங்கியங் கடவுள் அறிகரியாக வதுவை முடித்தற்கு ஏதுவாக, வளர்ந்த வேங்கை மரங்கள் நிறைந்த முகிழ்க் கொத்துக்களை விரித்து அலர்ந்து இந்நாளே நல்ல நாளெனக் காட்டா நின்றது. இக்காலம் பிழைக்கிற் கூடாது என நன்று ளுணர்த்தி வரைவு கடாதல்.

(245) [3]உன்னி[4]கை வேழஞ் செலும்வீதி நன்னகர் உள்ளவருஞ்
சென்னிகை கூப்புங்குற் றாலர் வரையிற்செந் தேன்மலைவாய்
வன்னிகைப் பற்ற லுறவே வளர்ப்ப வளர்[5]கணியார்
கன்னிகை ஏடவிழ்த் திந்நாள்நல் நாளெனக் காட்டினவே.

1 நாற்கவி-ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரம். 2 சந்து-தூது. 3 உன்னி-குதிரை. 4 கைவேழம்-துதிக்கையுடைய யானை. 5 கணி-வேங்கை.

தங்தலை மரபோர் தனிமணம் புரியும்
மங்கல நாளே மன்னர்க் குரைத்தது.

**அறிவறிவுறுத்தல்.**

அறிவறிவுறுத்தல் - என்பது, தலைமகள் பருவமாயுற்றிருப்பப் பொறையின்றி யான், இவ்விடத்து இறைமகன் ஒரு நாள் வந்து போயது எமர் பலரும் தூற்ற, இம்மகள் பழியும் பாவமும் ஏற்கவோ என்றழுங்கினேன். அக்கணமே தன் குண வேறுபாடுகளைத் தமர்க் கொளித்தலைப் பார்க்க என் மடங்கு எனக்கு மறைத்தாள். இவளறிவை ஏதென்றுரைப்பேனெனப் பாங்கி தலைவர்க்கு உணர்த்தாநிற்றல்.

(246) எமர்பலர் தூற்ற ஒருநா ளிறைவ ரிவண்வருதல்
[1]குமர்பழி யேற்பதற் கோவென் றனனங்குற் றூலர்வெற்பா
அமர்பொரு வாட்கண்ணி வேட்கைக் களவற் றழுங்குதலைத்
தமர்களி னுமறைத் தாளெனக் கேவஞ் சகமிதென்னே.

நின்னைவைத் துரைப்ப நிகழ்வேற் றுமைகள்
தன்னை மறைத்தனள் தாழ்தூழ லென்றது.

**குறி பெயர்த்திடுதல்.**

குறி பெயர்த்திடுதல் — என்பது, இரவுக்குறி பகற்குறி இரண்டுக்கும் ஏற்குமாறுணர்த்தி இங்ஙனம் ஆயக் கூட்டங்கள் வரலாயிருக்கும் இந்தப் பூம்பொழில் நீங்காது நிற்பது என்னை எனச்சற்றுத் தூரச் செலுத்தி எனது ஏழைக்குத் தேற்றத்தக்க கூட்டத்தைச் செய்வாயாகெனப் பாங்கி தலைவர்க்குக் குறிவேறு காட்டா நிற்றல்.

(247) உயராதி வேதனுந் தேடக்கிட் டாத ஒருவர்சதுப்
புயராதி நாயகர் குற்றூலர் வெற்பிலிப் பூம்பொழில்வாய்ப்
பெயராது நிற்பதென் போங்தோர் நிழலிலென் பேதைமின்னுட்
கயராது தேற்றப் புணர்வுசெய் வீர்வரும் ஆயமிக்கே.

நாட்பொழு திரண்டும் நணியொப் புதற்கோர்
சேட்குறிப் பாங்கி செலவுறப் பெயர்த்தல்.

**பகல் வருவானை இரவு வருகென்றல்.**

பகல் வருவானை இரவு வருகென்றல் — என்பது, இவ்வண்ணம் பகற்பொழுது வந்து புணர்ந்தால் எம்பெருமாட்டி திருமேனி முழுதுந்

---

1 குமர் - கன்னிகை.

தளிர்போன் றிருப்பதால் மிகவும் வாட்டப்படும் என்றறிந்து இப்பகற்கு வாராதே இரவுக் காலத்தே வருவாயெனப் பாங்கி தலைவர்க்கு இரவு வரவுரைத்தல்.

(248) அன்றமுல் ஆடிய குற்றால நாதரம் பொற்சிலம்பிற்
சென்றிகல் வெல்குஞ் சரத்தாயெம் மான்றிரு மேனியெல்லாம்
மென்றளி ராதலி னற்றேயக் திடமிக வாடுமிப்போ
தென்றினி மேற்பகல் வாரா திரவுங் கெழுந்தருளே.

பல்லவ மேனியள் பகற்குறிக் குணங்குமென்
றல்லிடை வருதற் கண்ணலைப் பகர்தல்

**இரவு வருவானைப் பகல் வருகென்றல்.**

இரவு வருவானைப் பகல் வருகென்றல் — என்பது, உள்ளத்திலே வாலறிவனாகிய குற்றாலப் பெருமானைச் சிந்தித்திருந்தும் அதுவன்றி வெள்ளைப் புகழ்படைத்தவனாக இருந்தும் நின்னுடைய நெஞ்சத்து மக்கள் வினையுற்று இருண்ட கங்குலிடை வரக் காரணம் யாது? இப்போது நாம் வைத்திருக்கிற குறியிடம் ஒருவர் கண்ணுக்கும் எட்டாது. நீவிரும் எங்களூருள்ளாருங் கண்டு இகழாத வண்ணம் பகலே வருவீராகெனப் பாங்கி பகல்வர வுரையா நிற்றல்.

(249) உள்ளத்தில் வெள்ளைப் புகழார்குற் றாலரை யுற்றுணர்ந்தும்
வெள்ளைப் புகழ்படைத் துந்தலை வாமின்னை வேண்டிநெஞ்சிற்
கள்ளத்தை யுற்றுக் கருங்கங்குல் வாய்வருங் காரணமென்
எள்ளப் படாதெங்க ளூரும் பகலுக் கெழுந்தருளே.

துலங்கியுந் துலங்கா திலங்கயி லோனைப்
பொலங்கொடி பகற்குறிப் புகவரக் கூறல்.

**பகலினு மிரவினும் பயின்று வருகென்றல்.**

பகலினு மிரவினும் பயின்று வருகென்றல் — என்பது, இரவும் பகலும் பிரியாதிருக்க வேண்டுமென்னும் மருட்கை இருவோர்க்கும் ஒன்றுபோல் இருப்பதால் அவ்வண்ணமே இருபோதும் வந்து தலைமகள் உள்ளங் களிப்புறும்படி துயரத்தைத் தவிர்ப்பாயெனப் பாங்கி தலைவனை இரவும் பகலும் வரவுணர்த்தியது.

(250) தெருட்டா பதரணி குற்றாலர் வெற்பிடத் தேபகலும்
இருட்டா ரிரவும் புணர்க்கும் நசையிரு பேர்க்குமுற்ற
மருட்டால் இலங்கிலை வேல்மன்ன வாவந்து வந்திருண்டு
சுருட்டாழ் குழலிக் குளங்களி கூரத் துயர்தவிரே.

*இருவரு மொருபடித் தியையக் கூவதால்*
*வருபக லிரவினும் வருகெனப் பகர்தல்.*

**பகலினு மிரவினு மகலிவ ணென்றல்.**

பகலினு மிரவினு மகலிவ ணென்றல் — என்பது, தலைமகள் நீ இரவுக் காலத்து வருவதற்கு இடையூறு ஏதோ வென்றஞ்சுகின்றாள். பகல் வருதற்கு நிறை மகளாதலால் நாணழிபு இரங்குவுற்றாள். இரவும் பகலும் வாரா தொழிதலே நன்றெனப் பாங்கி வரையறை வரைவு கடாவா நிற்றல்.

(251) பஞ்சினு மெல்லடி மாதன்ப னீபுய பாரமொளிர்
தஞ்சார கத்தார்குன் றலர் வரை[1]நள் ளிராவருதற்
கஞ்சலுற் றாள்நிறை யாற்பக லேவந் தனைதற்கு நாண்
டெஞ்சிலுற் றாளி[2]ரு போதும் வருதலை நீங்கல்நன் றே.

**உரவோன் நாடும் ஊருங் குலனும் மரபும் புகழும் வாய்மையுங் கூறல்.**

உரவோன் நாடும் ஊருங் குலனும் மரபும் புகழும் வாய்மையுங் கூறல் — என்பது, இரவும் பகலும் வருவதாய்க் குறிபெயர்த்துச் சேட்குறி நாட்டிய தோழி இருபோதும் அவ்விடத்து வாராது விலக்கி நாடு நகர் புகழ் வாய்மை மரபு குலன் இவைகளின் பெருமையைக் குறித்து நிற்கு நிலைகண்டு தலைமகனைப் பார்த்துப் பேரன்புற்றுப் பேராசை யூட்டுவித்து அவர்க்கு அந்தத் தலைமகள் சிற்றாரின் கண்ணுள்ள குரவரை முற்சென்று நிற்கில் எளிதாகுமோ? எளிதாகாது. நீ வந்து பின்னிற்கக் கண்டால் அவர்களும் வழி பார்த்து வரைவெதிர்வார்கள். பலவும் நினையாது வருவாயாகெனக் கழறி வரைவு கடாவாநிற்றல்.

(252) [3]செல்வள ருந்திருக் குற்றாலர் மாதிரி கூடவெற்பின்
[4]மல்வளர் நாடு நகர்புகழ் வாய்மை மரபுகுலன்
நல்வள மாகவுற் றோர்க்கொளி தோநசை யூட்டுவித்தவ்
வல்வளர் கூந்தல்சிற் றார்க்குர வோர்முன் னடுத்திடிலே.

*இல்வரைப் புகலெளி தோவெனக் கழறிச்*
*செல்வரை வரைவெதிர் செய்கெனச் செப்பல.*

---

1 நள்ளிரா - நடுநிசி. 2 இருபோதும் - இராப்பொழுதும் பகற்பொழுதும்.
3 செல் - மேகம். 4 மல்-வருவாய், வளம்.

### ஆறு பார்த்துற்ற அச்சங் கூறல்

ஆறுபார்த்துற்ற அச்சங் கூறல் — என்பது, இருபோதுக்கும் இயைந்ததோர் குறியிடத்து வந்து பின்பு வழிகூடிச்செல்லும் போழ்து பிடியினது ஊடலாற் களிறு ஆற்ருமையாகப் பிளிறிய குரற்ருெனி இடிக்கொத்து முழங்க, மழைபோலும் கண்ணீர் தலைமகளிடத்துற்றுப் பெருகியதெனப் பாங்கி ஆறுபார்த்துற்ற வச்சங்கூறி வரைவு கடாவா நிற்றல்.

(253) [1]வடிவே செயுந்தமிழ் சூடுங்குற் ருலர் வரையினில்வந்
தடியே பெயர்த்ததர் நீசெல்லும் போதண் ணலேகரிய
[2]பிடியூ டலாற்களி ருற்ருமை யாகப் பிளிறுகுரல்
இடிபோல் முழக்க மழைபோற்கண் ணீர்மின் னிடத்துற்றதே.

[3]கறையடி பிளிறெலி காதிற் கேட்டவள்
உறைவிழி சொரிந்த உயர்துயர் கூறல்.

### ஆற்ருத் தன்மை யாற்றக் கூறல்.

ஆற்ருத் தன்மை யாற்றக் கூறல் — என்பது, நீங்காத சிந்தையளாய் நெட்டுயிர்ப் பெறிந்து அழுது இறந்துபடுவதாய்க் கையமைத்தற் கொண்ணுத வண்ணம் தளர்ந்தழுங்கிய தலைமகட்கு அவ்விடத்து யாது ஆதரித்துச் சொல்லுவேன் சொல்வீராகெனப் பாங்கி தலைவனைக் கேளா நிற்றல்.

(254) நீங்கா நினைவுற்று [4]நெட்டுயிர்ப் பூதிநின் றேங்கியுங்கை
தாங்காத வண்ணந் தளர்ந்தே யழுங்கிய தையற்கென்னே
யாங்கா தரவுசொ லச்சொலு வீரண்ண லேகமழும்
பூங்கா வனஞ்செறி குற்ருல நாதர் பொருப்பிடத்தே.

கந்தார் களிற்றனைக் கன்னிகைக் கடங்கா
சிந்தா தலமுறிற் றேற்றுவ துரையெனல்.

### காவன்மிக வுரைத்தல்.

காவன்மிக வுரைத்தல் — என்பது, சீற்றத்தொடுங் கூற்றுக் கொண்டு போகா நிற்கும் வாணுளை நீடு வைத்துக் காப்பவராகப் பொய்

1 வடிவே செயுந் தமிழ்-அழகைச் செய்யுந் தமிழ் 2 பிடி-பெண்யானை 3 கறையடி-யானை. கறை-உரல் இது உரல்போன்ற அடியையுடைய யானைக்கு ஆயிற்று. 4 நெட்டுயிர்ப்பூதி-பெருமூச்சு விட்டு.

வாழ்வை யுண்டென்று நம்பிக் குற்றால நாயகர் திருவடியின்பம் நோக்கித் துறவடையாரைப்போல ஏதிலர் துய்க்க நலத்தொடு தோற்றிய மகட்கு என் தமரானவர்கள் இரண்டு போதுக்குங் கட்டாகக் கடிசெய்தார்களெனப் பாங்கி தலைவர்க்குக் காவலுரைத்து வரைவு கடாவா நிற்றல்.

(255) [1]காதி யமன்கொடு போமா வியைவைத்துக் காப்பவர்போற்
சோதியர் சித்ர சலையாரை யெண்ணித் துறந்திலரோத்(து)
[2]ஏதிலர் துய்க்க நலம்பெற்ற மங்கைக் கெமர்களிரு
போதினுங் காவல்[3]கட் டாகவைத் தார்கள் புரவலரே.

கூற்றுணர்ந் தந்தவங் கொள்ளா ரென்னவுன்
பேற்றினைக் கெடுக்கடி பெரிதெனக் கூறல்.

**காமமிக வுரைத்தல்.**

காமமிக வுரைத்தல் — என்பது, தலைமகளினது பேராசைகங்கு கரை காணாத கடல் போலும் பெருக அந்தக் கடலிடத்து வேலைக் கண்டு மகரக்கொடி உயர்த்தும்படி புட்ப பாணங்களை ஏவிக்கொண்டு மன்மதன் வாராநின்றான். இதற்கென் செய்வாள் எனப் பாங்கி தலைமகள் அவலங் கூறாநிற்றல்.

(256) பைத்தோகை யோர்பங்கர் ஞானக் கினியெனும் [4]பாலக்கண்பு
தைத்தோர் வளர்திருக் குற்றால நாதர் சயிலமின்னே
கைத்[5]தோணி விட்டு மகரம் பிடிப்பக் கருப்புவில்லி
மைத்தோயுங் கண்ணிதன் காமக் கடலிடை வந்தனனே.

அடல்வேள் பூங்கணைக் கற்சுதற் கஞ்சிக்
கடல்போல் விரிந்த காம முரைத்தல்.

**கனவு நலிவுரைத்தல்.**

கனவு நலிவுரைத்தல் - என்பது, பலகாலுந் துன்புற்றிருக்குஞ் சலிப்பினால் ஓர்காலத்து நித்திரைவர அக்காலத்து நினது உருவெளித் தோற்றத்தைக் கண்டு ஆகத்தைக் கட்டிக் கொங்கைகளால் நெருக்கிய வெப்பகலும்படி அதரபானத்தை யூட்டப் பொருக்கெனப் பதறி விழித்

---

1 காதி-கூறுபடுத்தி. 2 ஏதிலர்-அந்நியர். 3 கட்டாக-கட்டுப்பாடாக 4 பாலக்கண்-நெற்றிக்கண். 5 தோணி-அம்பு, நாவாய். இதில் மன்மதனுடைய செயல்கள் குறிப்பிடப்படுவதோடு கடல் வேட்டைக்குரிய செயல்களும் ஒருங்கு தோன்றக் கூறிய நயங்காண்க.

தேன். அந்த நேரமே சிலவுரையாது போயினரென்று இரங்கலுற்றாள் தலைமகளெனப், பாங்கி தலைவர்க்குரையா நிற்றல்.

(257) தேகத் திலேஇரு கூற்றாங்குற் றாலர் சிலம்பினன்பர்
[1]ஆகத்திற் கொங்கையைத் தாக்கி யணைந்தவெப் பாற்றரச
பாகத் திதழமு தூட்டப் பதறிக்கண் பார்த்திட்டதால்
ஏகத் துணிந்தன ரன்னேயென் றாள்மின் இறையவரே.

கனவிற் கண்டு கழிதலி யழுந்தும்
நினைவினைப் பாங்கி நெடுந்தகைக் குரைத்தல்.

**கவினழி புரைத்தல்**

கவினழி புரைத்தல் — என்பது, சிறிதுயிர்கள் நரசெனனத்து உற்பவித்துங் குற்றால நாயகர் கருணை செய்யும்படி தவத்தை முயலாது அவமே தளர்வது போலும், உன்னைத் தோயாமற் கொங்கைகளும் பூரிப்புக் குன்றிக் கட்டழகாகிய கை வளையும் கழலா நின்றாளெனத், தலைமகள் பதனழிவைப் பாங்கி தலைவர்க் குணர்த்தாநின்றது.

(258) [2]நரசென னத்திற் பிறந்துங்குற் றாலரை நாடியின்பந்
தரவிர தத்தை முயலார்கள் வீணிற் றளர்வதுபோற்
புரவல ரேயும்மைத் தோயாமற் கொங்கையும் பூரிப்பின்றிக்
[3]கரவளை யுங்கழன் றேயழிந் தாள்கட் டழகுமின்னே.

தவமின் றவமே தளர்வார் போல
அவள்நின் புணர்வின் றழகழிந் தனளெனல்.

இவற்றுள், வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பலும், அலரறிவுறுத்தலும், தாயறிவுறுத்தலும், வெறியச்சுறுத்தலும், பிறர் வரைவுணர்த்தலும் ஆகிய ஐந்தும் பொய்த்தற்கும், குறிபெயர்த் திடுதலும், பகல் வருவானை இரவு வருகென்றலும், இரவு வருவானைப் பகல் வருகென்றலும், பகலினும் இரவினும் பயின்று வருகென்றலும், பகலினும் இரவினும் அகலிவண் என்றலுமாகிய ஐந்தும் மறுத்தற்கும், உரவோன் நாடும் ஊரும் குலனும் மரபும் புகழும் வாய்மையும் கூறலாகிய ஒன்றும் கழறற்கும், வரைவெதிர் வுணர்த்தலும், வரையு நாளுணர்த்தலும் அறிவறி வுறுத்தலும் ஆறு பார்த்துற்றவச்சங் கூறலும்,

1 இதில், கொங்கைகளால் நெருக்கிவந்த வெப்பத்தைத் தணிக்க இதழ் அமுதை யூட்டுதலாகிய நயம்காண்க. 2 நரசெனனம்-மானுடப் பிறவி. 3 கரவளை-கையில் அணிந்த வளையல்.

ஆற்றாத் தன்மை யாற்றக் கூறலும், காவன்மிக வுரைத்தலும், காம மிக வுரைத்தலும், கனவினலிவுரைத்தலும், கவினழிவுரைத்தலும் என்னும் ஒன்பதும் மெய்த்தற்கும், உரியவாமெனக்கொள்க. ஆகச் செய்யுள் (258) வரைவு கடாதல் முடிந்தது

## ஒருவழித் தணத்தல்.

செலவறி வுறுத்தல் செலவுடன் படாமை
செல்வுடன் படுத்தல் செலவுடன் படுதல்
சென்றுழிக் கலங்கல் தேற்றியாற் றுவித்தல்
வந்துழி நொந்துரை யென்றெழு வகைத்தே
யொன்றக் கூறிய வொருவழித் தணத்தல்.

(ந. அ. களவு 51)

தன்பதிக் ககற்சி தலைவன் சாற்றலும்
மென்சொற் பாங்கி விலக்கலுந் தலைவன்
நீங்கல் வேண்டலும் பாங்கி விடுத்தலும்
தலைவிக் கவன்செல வுணர்த்தலுந் தலைவி
நெஞ்சொடு புலத்தலுஞ் சென்றோன் நீடலிற்
காம மிக்க கழிபடர் கிளவியுங்
கோற்றொடிப் பாங்கி யாற்றுவித் தலுமவன்
வந்தமை யுணர்த்தலும் வந்தோன் றன்னொடு
நொந்து வினாதலும் வெந்திறல் வேலோன்
பாங்கியொடு நொந்து வினாதலும் பாங்கி
இறைவியை யாற்றுவித் திருந்த வருமை
கூறலு மென்னு மாறிரு கிளவியும்
ஒருவழித் தணத்தலின் விரியெனப் படுமே.

(ந. அ. களவு 52)

### தன்பதிக் ககற்சி தலைவன் சாற்றல்.

தன்பக் ககற்சி தலைவன் சாற்றல்—என்பது, பாங்கி வரைவெதிர்வுணர்த்தி வரையு நாளுணர்த்திய பின்னர்த் தலைமகள் அறிவறிவுறுத்திக் குறிபெயர்த்து ஒரு பொதுக்குறியமைத்து இரவும் பகலும் வருவித்து இருபொழுது வாராத வழிவிலக்கித் தன்னூரின்கட் குரவரைத் தாழ்ந்து பின்னிற்பதோர் வரைவு கடாவிய நினைவையெல்லாம் தலைமகன் உட்கொண்டு ஒருவழிப் பிரிந்து வருவதாக இற்றைத் தினஞ்சென்று நாளைத்தினம் இதற்கு முன்னமே வருவேன் இதைத் தலைமகட்குச் சொல்வாயெனத் தன்பதிக் ககலாநிற்றல்.

(259) இன்றைங்கெம் மூர்புக்கு நாளைத் [1]தினக்கண் ணிதற்குமுன்னே
ஒன்றைக் கருத்திலெண் ணாதே வருவ னுயர்ந்தநிதிக்
குன்றைக் குனித்தநங் குற்றாலர் வெற்பினிற் கோதையரே
[2]கன்றைப் புனைந்தகை யாட்கிந்த வாய்மை கனிந்துரையே.

அணித்து வந்தவன் அணியிழைக் குணர்த்தென
அணித்திரு மார்பன் [3]அகனத்துச் சேறல்.

**மென்சொற் பாங்கி விலக்கல்.**

மென்சொற் பாங்கி விலக்கல் - என்பது, தலைமகட்கு உய்யத் தக்கதோர் இன்பத்தை இன்னொருக்கால் அருளிச் செய்யு முன்னமே நின்னூரின்கட் சென்று செய்யத் தக்கதோர் செயலுளவோ? செல் வீராணுற் செல்கவெனப் பாங்கி செலவுடன் படாதுநிற்றல்.

(260) [4]வியத்தக் கவைசெயும் மேலோரை வாழ்வித்து வேண்டலரை
நையத்தக் கவைசெயுங் குற்றாலர் வெற்பினி னன்னுதற்கே
[5]உயத்தக் கவையெனு மின்பகல் காமுன மூர்வயிற்போய்ச்
செயத்தக் கவையுள்ள தோசெல் விராகிற் செலுமன்னரே.

ஆற்ற நெஞ்சினட் கன்புசெய் யாமுனம்
வேற்றோர் செயலுள வோவென விலக்கல்.

**தலைவன் நீங்க வேண்டல்.**

தலைவன் நீங்கல் வேண்டல் — என்பது, எனக்கும் மென்மைத் தன்மையுடையாளாகிய தலைவிக்கும் இன்பம் துய்த்தற் பொருட்டு இரண்டாய்ப் பிரமா வகுத்ததன்றி இது காரணமாக உற்பவித்த உயிர்க் கும் பிரிவென்பதில்லை. மனமும் நினைவும் ஒன்றே. ஊரின்கட்சென்று விரைய வருவேன். இது நிசமெனச் சொல்லித் தலைமகன் நீங்கா நிற்றல்.

(261) கொதிக்குந் தழன்[6]மழுக் கையார்குற் றாலர்பொற் குன்றிலயன்
விதிக்கு முருப்பிரி வல்லா லெனக்குமென் மெல்லியற்கும்
உதிக்கு முயிர்க்கும் பிரிவதுண் டோநினை வொன்றலவோ
[7]பதிக்குச்சென் றுலங்கி ரேன்வரு வேன்நிசம் பாவையரே.

1 தினக்கண்-தினத்தில் இதில் அத்துச்சாரியை புணர்ந்து கெட்டது. 2 கன்று-வளையல். 3 அகன்-உள், வீடு. 4 வியத்தக்கவை-வியக்கத்தக்கவை. 5 உயத்தக்கவை-உய்யத்தக்கவை. 6 மழு-கோடரி. 7 பதி-ஊர்.

*உடற்பிரி வின்றி யுயிர்ப்பிரி வில்லெனக்*
*கடக்களிற் றண்ணல் கலந்துரைத் தேகல்.*

### தலைவனைப் பாங்கி விடுத்தல்.

தலைவனைப் பாங்கி விடுத்தல் — என்பது, இளமை, செல்வம், யாக்கை மூன்றும் பொய்யென்று விடாவூதி வாசனைகளைத் துறந்த விரதிகட்குக் குற்றால நாயகர் திருவடிகளே துணையானதுபோலும், எங்கள் குடிப்பிறந்தாட்கு உன்னையன்றி ஒரு பற்றுக் கோடில்லை. ஆனதால், ஊரின்கட் சென்று பின்பு வருதற்கு நீள மறந்திருந்தால் நன்றன்றெனப் பாங்கி தலைவனை விடுத்தல்.

(262) துறந்தார்க்குச் [1]சார்திருக் குற்றால மேவிய கோன்றலருட்
சிறந்தார் திருப்பத மாவது போலுஞ்சிற் றூர்க்குடியிற்
பிறந்தாட்குச் [2]சாருனை யன்றிலை யூர்சென்று பிற்றைவர
மறந்தால்நன் றல்லமன் னுநாளைப் போதிங்கு வந்துநில்லே.

*துறந்தார்க் கிறைவன் துணையா மவைபோற்*
*சிறந்தாட் கொருசார் செல்வநீ யென்றல்.*

### பாங்கி தலைவிக்கவன் செலவுணர்த்தல்.

பாங்கி தலைவிக்கவன் செலவுணர்த்தல் — என்பது, வேதங்கள் சொல்லிய நீதிமுறைமைகட்கும் கற்புடைப் பாவையர்க்கும் நீதிவழுவாராது காக்குஞ் செங்கோன்மைய ராதலில் அவ்விடத்தும் ஒரு நினைவுற்றுச் சென்றாரெனப் பாங்கி தலைவிக்கு அவன் செலவுணர்த்தாநிற்றல்.

(263) பங்கோ ருடலிற் குழல்மொழிக் கீய்ந்த பரமர்வெற்பார்
மங்காத வேத முறைமைக்குங் கற்பு மாதினுக்கும்
செங்கோல் நடாத்திப் புரக்குஞ் செயல்போலச் சீர்மையினல்
அங்கோர் நினைவுற்றுச் சென்றார் நகருக் கணியிழையே.

*நீதிகள் வழுவா நெறிமுறை காத்திப்*
*போதினில் வாற்துப் போந்தன ரென்றல்.*

### தலைவி நெஞ்சொடு புலத்தல்

தலைவி நெஞ்சொடு புலத்தல் — என்பது, தலைவரை நீங்காது கூடியிருத்தற்கு முன்னைச் செய்த தவங் குறைந்ததோ? மன்மதன்

---

1 சார்-பக்கம், இடம். 2 சார்-பற்றுக்கோடு.

நம்மை நோக்கிப் பொருதற்கு இந்நாளைச் செய்த தவம் நிறைவே றிற்றோ? அஃதன்றோ பிரிதற்கு இச்சையாயினர் நெஞ்சமே யெனத் தலைமகள் புலம்பா நிற்றல்.

(264) நீடிய மூன்று மதிலுமொன் றாய்வெந்து நீறச்செந்தீ
மூடிய [1]மூரலர் குற்றாலர் வெற்பின் முடிமன்னர்தாங்
கூடியி ருக்கமுன் னாட்செய் தவங்குறைந் தோநமைவேள்
நாடிப் பொரச்செய் தவமுடிந் தோதணந் தார்நெஞ்சமே.

தவக்குறை நேர்ந்தோ தணந்தா ரென்னக்
கவற்சியுற் றனங்கன் கணைக்கணங் கிடைதல்.

**சென்றோன் நீடலிற் காமமிக்க கழிபடர் கிளவி.**

சென்றோன் நீடலிற் காமமிக்க கழிபடர் கிளவி - என்பது, தலை மகன் பிரிந்துழிக் காமமிக்கவாற் கேளாதவற்றைக் கேட்பவாகக் குறித் துத் திரையுடைந் தெறிக்குங் கடலிடைப் படிந்து செல்லா நின்ற முகிலே! கணப்போதாகிலும் கண்ணுக்கு நித்திரை வரவில்லையே. இந்த நோதலைத் தலைவர்க்குச் சொல்வாயாகெனத் தலைமகள் சொல்லா நிற்றல்.

(265) [2]பெடைநடை மங்கை குழல்வாய் மொழிமணம் பெற்றவர்வெள்
விடைநட வுந்திருக் குற்றால நாதர் வியன்கிரிசூழ்
உடைதிரை[3]யுந்திச் சுழிவா யினும்படுத் தார்முகிலே
படைவிழி துஞ்சில னேயிந்த நோதல் பகரன்பர்க்கே.

தாழ மிக்க தாழ்தழ லடங்காக்
காம மிக்க கழிபடர் கிளவி.

**கோற்றொடிப் பாங்கி யாற்றுவித்தல்.**

கோற்றொடிப் பாங்கி யாற்றுவித்தல்—என்பது, முன்னை நாள் வந்து பிரிந்து செல்லும்போது அவர் சொல்லிய உறுதிக்கு அவ்விடத்து நீட்டித்து நிற்பதோர் சிந்தை வைப்பதின்று. இப்போது உனக்கு இனியனவாகிய கையுறை யெல்லாங் கொண்டே வருகுவர். அஃதெல்

---

1 மூரலர்-சிரிப்பையுடையவர். 2 பெடை-அன்னப்பேடை (போன்ற) 3 உந்தி-கடல்.

லாம் வருகிறதெனப் பார்ப்பாய். சிந்தாகுலத்தையடைய வேண்டிய தில்லையெனப் பாங்கி தலைமகளை யாற்றுவித்தல்.

(266) முன்னா ளெனக்கவர் போம்போ துரைத்த மொழியுறுதிக்
கென்[1]னா திபர்அங்கி ரார்கை யுறைய தெலாம்வருதென்(று)
[2]அன்னாளும் பூங்குழ லேபொர் மெலிவுற்[3]றயர்குவதென்
[4]பொன்னாக மால்பணிச் சேதத்துங்குற் றூலர் பொருப்பிடத்தே.

வரவெதிர் பார்ப்பென மகிழ்ச்சி கூறிக்
கரவளைப் பாங்கி கவலை யாற்றுதல்.

**தலைவன் வந்தமை யுணர்த்தல்.**

தலைவன் வந்தமை யுணர்த்தல் - என்பது, உன்னை அன்றைக்குப் பிரிந்து சென்றவர் இப்போது எம்முடற்கு உயிராயவளைப் பிரிந்து அவ்விடத்திருந்து உயிர்வாழ்வேனோ எனச் சொல்லிக்கொண்டே இங்ஙனம் வாராநின்றாரெனப் பாங்கி தலைமகன் வந்தமை யுணர்த்தா நிற்றல்.

(267) உன்னைப் பிரிந்தன்று சென்றவ ரெம்முடற் குற்றவுயிர்
தன்னைப் பிரிந்தங் கிருந்துய்வ னோவெனத் தாங்கு[5]புவி
யன்னைக் கிசைந்த மணவாள ரென்னுங்குற் றாலர்வெற்பின்
மின்னைப் பொருஞ்சிற் றிடையணங் கேவந்து மேவினரே.

சொற்றமை கூறும் நுடங்கிடைக் கிறைவன்
வந்தமை [6]யிகுளை மகிழ்வுறக் கூறல்

**வந்தோன் தன்னொடு நொந்து வினாதல்.**

வந்தோன் தன்னொடு நொந்து வினாதல் — என்பது, உண்டியும் கசப்புற்று வாய்புகாமல் உடுக்கையும் தொடியும் படுக்கையிற் சோர்வுறக்கிடப்ப நெற்றிக்கீழ் விழிகள் கலுழ்தல் வெள்ளத்தை யடையாது பிரிந்து சென்றீரே. எம்பெருமாட்டி இதற்கு ஆற்றுமென் றெண்ணியோ? சொல்வாயாகெனப் பாங்கி வந்த தலைமகனொடு நொந்து வினாவா நிற்றல்.

---

1 ஆதிபர்-தலைவர். 2 அல்-இராப்பொழுது, இருள். 3 அயர்குவது-தளர்வது. 4 பொன் + ஆகம் + மால்—இலக்குமி வசிக்கும் மார்புடைய விஷ்ணு 5 புவி அன்னை - உலக மாதாவான குழல்வாய்மொழி நாச்சியார். 6 இகுளை-தோழி.

(268) [1]மடைவாய் புகாமற் [2]கலையுங் [3]குருகும் வளரணைவாய்
இடையே புகக்[4]குளத் தின்கீழ்க் கசிவுற் றெழும்புனலை
அடையாது போயினி ரேயெந்தன் மானிதற் காற்றுமென்றொ
[5]முடையார் கபாலத் திரந்தகுற் றாலர் முகில்வெற்பிலே.

*ஆதலத் திடைந்தா ளாதலத் தடைந்த*
*மாதலப் பாங்கி மன்னனை வினாயது.*

**வெந்திறல் வேலோன் பாங்கியொடு நொந்து வினாதல்.**

வெந்திறல் வேலோன் பாங்கியொடு நொந்து வினாதல்-என்பது, தனது நுதல் போன்றும் போலாத சந்திரனிடுக்கத்துக்கு நெடிய கொந்தள முடைய தலைமகள் மெலியலள். புட்ப பாணங்களை ஏவிக் கலகத்தைச் செய்யும் மன்மதன் பகைக்கு எவ்வாறு நீ வைத்துப் பாது காத்தாயெனத் தலைமகன் பாங்கியொடு நொந்து வினாவாநிற்றல்.

(269) [6]இலகுந் தவளப் பொடியாரு மேனியர் ஏழ்முகிலுங்
குலவுங்குற் றாலர்[7]முக் கோட்டு வரையிற் குளப்பெருக்கால்
[8]அலவன் இடுக்கத்துக் கேநெடுங் [9]கொந்தளத் தாள்மெலியாள்
கலக மதன்பகைக் கெவ்வாறு நீவைத்துக் காத்தனையே.

*மதன்பகைக் கணங்கினை வைத்துக் காத்தமை*
*இதந்தரு தோழியோ டிறைமகன் வினாதல்*

**பாங்கி யாற்றுவித்திருந்த அருமை கூறல்.**

பாங்கி யாற்றுவித்திருந்த அருமை கூறல்—என்பது, கண்ணுதற் கடவுளான குற்றால நாயகர் திருவருளென்னுங் கவசத்தோர் காமம் வெகுளி மயக்கமாகிய வாளிக்குள் மூழ்காமல் மனத்தை விலக்கிக் கொண்டமை போலும், யானும் அக்கடவுளர் கிருபையினாலே மன்மதன் சிலையிற் பூட்டிய வாளியின் மூழ்காவண்ணம் வைத்துப் பாதுகாத்தேன். இனித் தலைமகளை நீயே காக்கக் கடவாயெனப் பாங்கி கூறாநிற்றல்.

1 மடை-சோறு, மதகு, ஜலதாரை. 2 கலை-வஸ்திரம், ஆண்மான். 3 குருகு-நீர்ப் பறவை, கைவளை. 4 குளம்-தடாகம், நெற்றி. 5 முடை-புலால் நாற்றம். இதில் குளத்தில் நீர் கசிந்து ஒழுகுதலையும், தலைவி சோறுண்ணாமல் சயனத்தில் அழுது கொண்டிருத்தலையும் சிலேடையிற் கூறிய நயம் காண்க. 6 இலகும்-ஒளிசெய்யும். 7 முக்கோட்டு வரை-திரிகூடமலை. 8 அலவன்-சந்திரன். 9 கொந்தளம்-கூந்தல்.

(270) திக்குற்ற பாலர்தங் குற்றால நாதர் திருவருளால்
[1]முக்குற்ற வாளியின் மூழ்காமல் உள்ளத்தை மூதறிவின்
மிக்குற் றிடத்தொண்டர் மீட்பது போலுநும் மின்னைமதன்
[2]இக்குற்ற வாளியின் மூழ்காமல் வைத்திருந் தேனண்ணலே.

*கண்ணுதற் கடவுள் கருணையைக் கூறிப்*
*பெண்ணினைக் காத்த பெருமிதங் கூறல்*

இவற்றுள், தன்பதிக் ககற்சி தலைவன் சாற்றலும் தலைவிக் கவன் செலவுணர்த்தலுமாகிய இரண்டும் செலவறிவுறுத்தற்கும், மென்சொற் பாங்கி விலக்கல் ஒன்றும் செலவுடன் படாமைக்கும், தலைவன் நீங்க வேண்டல் ஒன்றும் செலவுடன் படுத்தற்கும், விடுத்தலாகிய வொன்றும் செலவுடன்படுதற்கும், தலைமகன் நெஞ்சொடு புலத்தலும் காமமிக்க கழிபடர் கிளவியும் ஆகிய விரண்டும் சென்றுழிக் கலங்கற்கும், பாங்கி ஆற்றுவித்தலும் தலைமகன் வந்தமை யுணர்த்தலுமாகிய இரண்டும் தேற்றியாற்றுவித்தற்கும் வந்தோன் றன்னொடு நொந்து வினுதல் முதலாகிய மூன்றும் வந்துழி நொந்துரைக்கு முரியவாமெனக் கொள்க. ஆகச் செய்யுள் (270) ஒருவழித் தணத்தல் முற்றும்.

## வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல்.

*பிரிவறி வுறுத்தல் பிரிவுடன் படாமை*
*பிரிவுடன் படுத்தல் பிரிவுடன் படுதல்*
*பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை*
*வருவழிக் கலங்கல் வந்துழி மகிழ்ச்சியென்*
*றொருமையிற் கூறிய வொன்பது வகைத்தே*
*வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவே.*

(ந. அ. களவு. 53)

*என்பொருட் பிரிவுரை யேந்திழைக் கென்றலும்*
*நின்பொருட் பிரிவுரை நீயவட் கென்றலும்*
*நீடே னென்றவன் நீங்கலும் பாங்கி*
*ஒடரிக் கண்ணிக் கவன்செல வுணர்த்தலும்*
*பூந்தழை யிரங்கலும் பாங்கி கொடுஞ்சொற்*
*சொல்லலுந் தலைவி கொடுஞ்சொற் சொல்லலும்*
*வருதவர் மீண்டெனப் பாங்கி வலித்தலும்*
*பருவங் கண்டு பெருமகள் புலம்பலும்*

1 முக்குற்றம்–காமம், வெகுளி, மயக்கம். 2 இக்கு-கருப்பு. 3 வாளி–அம்பு.

இதனைவம் பென்றலும் இறைமகள் மறுத்தலும்
அவர்தூ தாகிவர் தடைந்ததிப் பொழுதெனத்
துணைவி சாற்றலும் பிணைவிழி யாற்றலும்
அவனவட் புலம்பலும் அவன்வருங் காலைப்
பாகன் றன்னொடும் மேகந் தன்னொடும்
சோகங் கொண்டவன் சொல்லலும் பாங்கி
வலம்புரி கேட்டவன் வரவறி வுறுத்தலும்
வலம்புரி கிழத்தி வாழ்த்தலும் வந்துழி
நினைத்தமை வினாதலும் நினைத்தமை செப்பலும்
அனைத்தகை யவனை யாற்றுவித் திருந்தமை
பாங்கிகூ றலுமென ஆங்கெழு மூன்றும்
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவின்
விரியென விளம்பினர் தெரிமொழிப் புலவர்.

(ந. அ. களவு 54.)

### என்பொருட் பிரிவுரை ஏந்திழைக் கென்றல்.

என்பொருட் பிரிவுரை ஏந்திழைக் கென்றல் — என்பது, வரைவு கடாவிய தோழி கருத்தறிந்து ஒருவழித் தணந்து வந்ததின் பின்னர் குழைக்காதளவும் நீண்டு பிறழ்ந்து ஒளிரா நின்ற விழியையுடையாள் கீழ்மேல் அல்குல் முலையினது தோற்றத்தினாலும் நடுவே உண்டென்பது காட்டாத மறைவினாலும் மின்போன்ற தன் இடையினை வாட்டமுடைத்தென் றெண்ணாது இரண்டு கையாலுங் கட்டிக் கொடுத்த தனத்துக்குக் கைம்மாறு ஒன்றில் லெனினும் என்னால் இயைந்தளவு கைப்பொருள்களைக் கொண்டு உங்கள் சிற்றூரின் கண்ணே வருகுவன். இற்றைக் கரும்பின் பாகுபோலும் மொழியாட்குச் சொல்லி ஆற்று கெனத் தலைமகன் வரைவு இடனாக வைத்துப் பொருள் இடனாகப் பிரியாநிற்றல்.

(271) [1]வெட்டிப் பிறழ்விழி [2]மின்னிடை [3]வாட்டமென் னாது[4]தனங்
கட்டிக் கொடுத்தற்குக் கைமா றெனக்கைப் பொருள்கொண்டு
[5]திட்டிக் குளத்தர்குற் றூலர் வரைவந்து சேருவன்ஈ(து)
[6]அட்டிக்குப் பாகு மொழியாட்கு நீசொல்லி யாற்றுகவே.

---

1 வெட்டிப் பிறழ்விழி—ஒளிவிட்டு வீசிப் பிறழும் கண்ணையுடையவள். 2 மின் இடை-மின்போன்ற இடை. 3 வாட்டம்-தேய்வு, சரிந்திருத்தல். 4 தனம்—கொங்கை, பொருள். 5 திட்டிக் குளத்தர்—நெற்றிக் கண்ணர். 6 அட்டு+இக்கு+பாகு—கருப்பஞ்சாற்றைக் காய்ச்சிய பாகு(போன்ற)

புணர்முலை விலைக்குப் பொருள்கொணர் வேனெனும்
[1]தணவது மாதுமுன் சாற்றெனச் சாற்றல்.

**நின்பொருட் பிரிவுரை நீயவட் கென்றல்.**

நின்பொருட் பிரிவுரை நீயவட் கென்றல்—என்பது, நீங்காதே எக்காலமுங் கூடியிருப்பதைச் சிந்தை செய்வாட்கு உன்னுடைய பிரிதலைச் சொல்வது எவ்வாறு? திரிகூட நாயகர் அடிவணங்கார் போலும் வாடியிருக்கச் செய்யாது நீ தானே யணித்து வருவேனெனச் சொல்வாயாகெனப் பாங்கி தலைமக ளாற்றாமை யறிந்து விரைய வரும்படி தலைவர்க்குச் சொல்லா நிற்றல்.

(272) கூடுந் தகைமையைச் சிந்திக்கும் வேட்கைக் குணத்தினட்கே
நீடும் பிரிவை வழுத்துவ தெவ்வகை நீயெழிலி
மூடுமுக் கோட்டுவெற் பார்தாளின் கீழ்முடி தாழ்த்திலர்போல்
வாடுந் தகைமைசெய் யாதே அணித்து வருவனென்றே.

ஊரிடை யகலு முள்ளினை வதனை
நேரிழை யவட்கு நீயே சொல்லெனல்.

**நீடேனென்றவன் நீங்கல்.**

நீடேனென்றவன் நீங்கல் — என்பது, வரைவுடன்பட்டுச் செல்லா நின்ற தலைமகன் எமது பேரூரின்கட் சென்று அனேக நிதிகளைக் கூட்டித் திரட்டிக்கொண்டு நமது மாதானவள் மகிழ்ச்சி கூரும்படி இதுவே நன்னாளாக விரைந்து வருவேனெனத் தோழிக் குணர்த்தி நீங்கா நிற்றல்.

(273) [2]தோட்டிப் படையுடை யார்தமைப் பெற்ற [3]துடிப்பறையர்
[4]மோட்டித் திரிமுடி வெற்பனை யாயெம் முதுநகர்போய்க்
கூட்டிற்று வான்பொருள் கொண்டுநம் மாதன்பு கூரவுநாள்
நீட்டித் திடாது வருவேன் விரைய [illegible]வைத்தே.

வரைவுடன் பட்டோன் வந்தவன் விரைந்தென
நிரைவளைக் குரைத்து நீங்கா நிற்றல்.

---

1 தணவு - பிரிவு 2 தோட்டி – அங்குசம் இப்படையினையுடையார் விநாயகர்
3 துடிப்பறை–உடுக்கையாகிய தோற் கருவி 4 மோட்டு + இத்திரி முடிவெற்பு–உயர்ச்சியையுடைய இந்தத் திரிகூடமலை.

### பாங்கியோடரிக் கண்ணிக் கவன் செலவுணர்த்தல்.

பாங்கியோடரிக் கண்ணிக் கவன் செலவுணர்த்தல் - என்பது, தேடுதற்கரிய நிதிபோல்வாளை வரையாவேண்டி உள்ள பொருளன்றியும் விசேடமாகத் தேடவேண்டிய பொருள்களுந் தேடிச் செறிவு செய்துகொண்டு நுமர்க்கு இட்டமாகக் கொடுத்து நிறைபுக வருவேனல்லது நெடிதுற நில்லேன். தலைமகளைப் பாதுகாத்தருள்வாயெனச் சொல்லா நின்றதைப் பாங்கி தலைவிக்குணர்த்தியது.

(274) தேடப் படாநிதி யன்னுளை வேண்டிற்றுத் தேடவந்து
கூடப் படும்பொருள் நுந்தமர்க் கீயக் கொடுவருவேன்
[1]நீடச்செய் யேன்திருக் குற்றாலர் வெற்பினின் னேரிழையாள்
வாடச்செய் யாதரு ளென்றே கினரன்பர் வாணுதலே.

*பொருள்வயிற் பிரியும் போதவன் உரைத்த*
*அருளினைப் பாங்கி அரிவைக் குரைத்தல்.*

### பூங்குழை இரங்கல்.

பூங்குழை இரங்கல்-என்பது, பொருள்வயிற் பிரிந்தமை பாங்கி சென்று சொல்லுமிடத்து அந்தச்சொற் செவித்துவாரத்து அழல் போற் புகுந்து பற்றி நெஞ்சை எரிப்ப நெஞ்சிற்பொருந்திய தரளவடமுங் கரியக் கண்ணீர் வழிந்தோடி அது நனையும்போது சுண்ணமாய்த் திரிந்து வேறுபட்டுப் போனாலும் பின்னும் அதை வேண்டுமென்பது பற்றியோ பொருள்கொண்டுவரச் சென்றார் எனத் தன் வருத்தத்தைத் தானே கூறித் தலைமகள் இரங்காநிற்றல்.

(275) சொரிந்[2]தா ரருவி [3]கறங்குங்குற் றாலர்தொல் வெற்பர்மின்னே
பிரிந்தா ரெனுஞ்சொற் றழல்செவிப் பற்றிப் பிடித்தகமும்
எரிந்[4]தாரப் பூணுங் கரிந்துகண் ணீர்பட் டிடச்[5]சுதையாய்த்
திரிந்தாலும் வேணுமென் றேபொருட் டேடச்சென் றித்ததுவே.

*தனிவைத் தகன்றார் தமைநினைந் துருகிக்*
*கனிமொழிப் பேதையாள் கவலா நின்றது.*

---

1 நீடச்செய்யேன்-காலம் நீடிக்கச் செய்யேன் 2 ஆர்-நிறைவு 3 கறங்கு-ஒலி
4 ஆரப்பூண்-முத்துமாலை. 5 சுதை-சுண்ணாம்பு.

### பாங்கி கொடுஞ்சொற் சொல்லல்.

பாங்கி கொடுஞ்சொற் சொல்லல் – என்பது, தலைமகள் வருத்தங்கண்ட தோழி அவளை ஆற்றுவிப்பது காரணமாக அவள் நினைவின் வழியே ஒழுகி, நீ இவ்வண்ணம் அழுதிரங்கி உள்ளஞ் சலிப்புற்று மிகவும் நொந்தனையாயின், இந்தத் தீமை சென்று தலைமகற்கு யாதேனுமோர் இடுக்கண் செய்யுமென்று வற்புறுத்திச் சொல்லாநிற்றல்.

(276) [1]பொம்ம லிரக்துண்ட குற்றுல மேவும் [2]புராதனத்தர்
[3]எம்மல் வளமுமொவ் வாவளஞ் சேர்வெற் பில் ஏந்திழையே
விம்மலுற் றுத்தளர்ந் துள்ளம் நடுங்க மிகவும்நொந்தாள்
செம்மலுக் கிந்தக் கொடுமைசென் றல்லல் செயுநிசமே.

நீ வருந் தலக்கண் நெடுந்தகைக் கறுமென்
[4]றுவெனப் பாங்கி யவட்கூறுத் தியது

### தலைவி கொடுஞ் சொற் சொல்லல்.

தலைவி கொடுஞ் சொற் சொல்லல் – என்பது, கொடுஞ் சொற் சொல்லி வற்புறுத்திய தோழிக்கு எதிரழிந்து, "நீ யென்னை வெறுக்க வேண்டுவது மில்லை; யானுன்னை வெறுக்க வேண்டுவதுமில்லை; தலைமகன் பொருள்வயிற் பிரிந்தானென்ற சொற் கேட்டளவே எனது மனதும் உணவை வெறுத்து உயிரை வெறுத்தது. உயிரும் இனி அவனில்லாத விடத்துத் தனிவாழ்வென்னை யென்றே தனக்கு ஆதாரமாகிய பூதங்களையும் வெறுத்த"தெனத் தலைமகளிரங்காநிற்றல்.

(277) எனது [5]விழைவுறி குற்றுலர் வெற்பண் ணலேகினரென்
றுனதுசொற் கேட்டவந் நாண்முதலாகவும் ஊண்துறந்தே
மனது முயிரை வெறுத்த தினித்தனி வாழ்வென்னென்றே
தனது பதியை வெறுத்ததென் னுவியுந் தாழ்குழலே.

அறைகழ லோன்[6]வரை வகன்று நீடலிற்
பொறையில ளாகிப் புனையிழை வருந்தல்.

### வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தல்.

வருகுவர் மீண்டெனப் பாங்கி வலித்தல் — என்பது, வரைபொருட்கேகிய தலைவற்கு இந்நாளைக்கு முன்னைநாளே எண்ணிய

---

1 பொம்மல்-சோறு. 2 புராதனத்தர்-ஆதியாகவுள்ளவர் 3 எம் மல் வளமும்-எந்த வலிய வளமும். 4 ஆ-இரக்கக் குறிப்பு உணர்த்தும் ஒரு இடைச்சொல். 5 விழைவு-ஆசை. 6 வரைவு-கல்யாணம்.

நிதிகளெல்லாங் கைகூடும். அப்போதிலே உன்னைப் பெறுவதாகத் தேர்ப்பாகனை நோக்கி அத்தலைமகளிருக்குந் திசைக்கே இரதத்தை நடத்தெனச் சொல்லி வருவார். ஆதலால் நீ இடுக்கண் ஒழிவாயாகெனத் தோழி தலைவியை ஆற்றுவித்தமைத்தல்.

(278) [1]இக்கேய் குழல்மொழி பங்காளர் வெற்பர்க்கிந் நாட்குமுன்னே
கைக்கே [2]தனம்வந்து கூடுமப் போதுகைக் கேதனத்தை
[3]மைக்கேயு [4]மோதி தரப்பெறப் பாகவம் மாதிருக்கும்
[5]திக்கே நடாத்தென்பர் தேருனக் கேது[6]சிந் தாகுலமே.

*வரைபொருட் பெருக்கி வருதவ தலதுனைப்*
*பிரிகில ரிறையெனப் பெருமகட் குரைத்தது.*

**பருவங்கண்டு பெருமகள் புலம்பல்.**

பருவங்கண்டு பெருமகள் புலம்பல் — என்பது, திரிகூடவரைசூழாநின்ற பூமிகளெல்லாம் வளவியதாக வருடம் பொழியும்படி கடல் நீரை உண்டெழாநின்ற முகிலைக் கண்டும் என்னைக் கீர்த்திபெற வைத்துச் சென்றவர் வாராமையால் எனது விளையாடலும் அழகுஞ் சிதைந்து உண்ணவும் உடுக்கவும் விருப்பற்றுப் போயதெனத் தலைமகள் கார்ப்பருவங்கண்டு வருந்தாநிற்றல்.

(279) கண்ணை [7]வனைந்[8]தரி போற்றுங்குற் றாலர் கனவரைசூழ்
மண்ணை வளனுற வானம் பொழிந்திட [9]வாரியுண்ணும்
விண்ணை யறிந்தெம் [10]முழவர் வராத விதியதனாற்
[11]பண்ணையும் ஏருங் குலைந்துண் டுடுக்கவும் பற்றாற்றதே.

*விண்மழைக் கொண்ட விளைவறிந் தரிவை*
*அண்ணல் வாரா தழுங்கிநெந் சிதைதல்.*

**இருளைவம்பென்றல்.**

இருளைவம்பென்றல் — என்பது, தலைவனது பிரிவாற்றாமையால் உடற்பற்றின்றிய உயிரோடிருந்து எனதுயிரைக்கொண்டு சென்றாரென்று இரங்கியும் உலகத்தையெல்லாம் புரப்பதோர் கார்ப்பருவ

1 இக்கு–கருப்பு 2 தனம்–பொருள். 3 மை–மேகம். 4 ஓதி–கூந்தல்.
5 திக்கு–திசை. 6 சிந்தாகுலம்–மனக்கலக்கம். 7 வனைந்து–அலங்கரித்து.
8 அரி–திருமால் 9 வாரியுண்ணும் விண்–கடல் நீரைப் பருகும் மேகம். 10 உழவர்–இங்குத் தலைவர் ஆகியவீரர். 11 பண்ணை–மகளிர் விளையாட்டு.

மும் வந்ததென்றால் நினதுயிரொன்றுமோமெலியவேண்டும். அவ்வாறு மெலியவேண்டுவதில்லை. இது கார்ப்பருவமன்று. ஈதோர் நூதன வருடமென்று தலைமகளைப் பாங்கி ஆற்றுவித்தமையாகிற்றல்.

(280) என்னுயி ருக்குயி ராயகுற் றாலர்வெற் பின்னவரென்
றன்னுயி ரைக்கொண்டு போந்தாரென் றேங்கியுந் தாலத்தெல்லா
மன்னு யிரும்புரக் கக்கார்ப் பருவமும் வந்ததென்றால்
நின்னுயிர் வாடுவ தேன்வம்ப தாமிது நேரிழையே.

[1]நவமல [2]நவமென நவிழறைத் திதனை
நவரத வடிவின் நாரியைத் தேற்றல்.

### இறைமகன் மறுத்தல்.

இறைமகன் மறுத்தல் —என்பது, யான் சொல்லிய கார் காலத்தை ஈதோர் வம்பென்று சொல்ல வந்தனையே. இறந்தோர்கள் தலைமாலையை நீங்காது புனைந்த குற்றாலக் கடவுளர்க்குப் பக்குவராகிய தொண்டர்களாய்ப் பிறந்தோர்களெல்லோரும் பிறப்பையொழித்து அருளுவாயென்று அவர் திருவடிக்குக் கொன்றைமலர் கொய்து சாத்து தலைப்பார் உனக்கு நிசமாக வேணுமென்றாலெனத் தலைவி கால மறுத்துரையா நிற்றல்.

(281) எம்மொழி வம்பென் றனையேமுன் னுளிறந் தோர்[3]தவளக்
[4]கம்மொழி யாது புனைந்தகுற் றாலக் கடவுளர்க்கே
செம்மொழித் தொண்டர் [5]இதழியம் பூக்கொய்து தேம்புமுறப
வம்மொழி யென் றர்ச் சனைசெய்தல் பார்மனம் மன்னுதற்கே.

கடவுள ரடியார் கடுக்கைகொய் தணிய
மடவரல் காலம் மறுத்துரைத் தழுங்கல்.

### அவர் தூதாக வந்தடைந்தது 'இப்பொழுதெ'னத் துணைவி சாற்றல்.

அவர் தூதாக வந்தடைந்தது இப்பொழுதெனத் துணைவி சாற்றல் — என்பது, வரை பொருட்பிரிந்து சென்ற காதலுடையார் விரைய வந்தாரில்லையென நீ வருந்த வேண்டுவதில்லை. நிதிகளும் பெருக்கித் தேர்மிசைக் கொண்டு தமது நகர்ப்புறத்து வழிச்சென்று வருவதை, மற்றொரு தூதுகட்குச் 'செல்' லென்னுஞ் சொல்லில்லா

1. 2. நவம்—முன்னது கார்ப்பவம். பின்னது புதுமழை. 3 தவளம்-வெண்மை
4 கம்-தலை. 5 இதழியம்-கொன்றை. (அம்-சாரியை)

மையால் உனக்கு, முன்வந்து சொல்வதாகச் 'சொல்' என்னும் பெயருடைத்தான மழைமேகத்தை இங்கே விடுத்தனர். இனி ஆகுலத்தை நீங்குவாயெனப் பாங்கி தலைவிக்குச் சொல்லா நிற்றல்.

(282) [1]நந்திலங் குங்குழைக் குற்றால நாதர் நனிவரைமேல்
வந்திலர் காதலர் என்றுளம் நொந்து வருந்துவதென்
செந்திரு வேமுன்ன மேவரல் சொல்லச்செல் லென்றலவோ
[2]சந்தியு வாக விடுத்தார் மழைமுகில் தன்னையிங்கே.

செல்லினைச் சொல்லெனச் செல்லமுன் னுய்த்தோர்
நில்லெனச் சொல்லினும் நில்லா ரென்றது.

### பிணைவிழி யாற்றல்

பிணைவிழி யாற்றல் — என்பது, இந்தக் கார்மேகமானது தூதாக வந்ததெனக் கேட்ட தலைமகள் தன் மனத்தைப் பார்த்துத் தலைமகன் தன் அருமை கொண்டு நம்மைச் சந்திய வாக்கினுற் 'குயில்' என்னும் வார்த்தைக்குப் புலம்பா தொழிகெனவும், 'மயில்' என்னும் வார்த்தைக்கு மகிழ்ச்சி கூர்ந்து விளையாடுக எனவும் சொல்லாநிற்றல்.

(283) எயிலன்று மூன்று மெரித்தகுற் றாலர் இயல்வரைவாய்
அயில்கொண்ட மன்னர் நிசவாக்கி னுன்முன் பருமைவைத்தே
[3]குயில்என்ற சொற்குப் புலம்பா திருகொண்டல் கண்டதனுல்
மயில்என்ற சொற்கு விளையா டினிவரு வார்நெஞ்சமே.

அவர்தூ திம்முகி லாமெனக் கேட்ட
[4]துவர்வாய்க் கிளிமொழிக் கோதையந் தவத்தல்.

### அவனவட் புலம்பல்.

அவனவட் புலம்பல் - என்பது, குற்றால நாயகர் திரிகூட வரையின் கண்ணே படிந்து எங்கணும் பொழியா நின்ற மேகத்தைக் கண்டவுடனே அத்தலைமகள், 'ஏழு தீவு ஏழு கடலனைத்தும் உள்ள நிதிகளைக் கொண்டுவரச் சென்றவர் அத்தலத்துக் கடல் வாய்க் கழிமுகத்துள்ள பனையின் கண் அன்றிற் புள்ளினைக் கண்டறியாரோ' வெனப் பிரிந்தமைக் கிரங்கிக் கண்ணீர் பொழியா நிற்குமோ, எனத் தலைவன் அவ்விடத்துப் புலம்பா நிற்றல்.

---

1 நந்து-சங்கு. 2 சந்து-தூது. 3 குயில் கார் கண்டு புலம்புதலும், மயில் கார் கண்டு விளையாடுதலுமாகிய இயற்கையைத் தலைவி, தன்னைப் புணர்ந்துரைத்த தலைவனுடைய வாக்கின்கண் ஏற்றிச் சொல்லும் நயம் காண்க. 4 துவர்-பவளம்.

(284) ஒன்றில ருள்ளத்தி [1]லொன்றார்குற் றால முயர்குடுமிக்
குன்றில் மழைமுகில் பெய்யக்கண் டாற்பொற் கொடியிறையோர்
சென்றில் பொருளுங் கொடுவரச் சென்ற செழுங்கடல்வாய்
[2]அன்றிலுங் கண்டு மிராரோவென் றேங்கி யழுதிடுமே.

பெருமுக ளவலம் பெரிதறிந் திறைவன்
அருமையிற் பேண அவட்புலம் பியது.

**அவன் வருங்காலைப் பாகன்றன்னொடு சொல்லல்.**

அவன் வருங்காலைப் பாகன் றன்னொடு சொல்லல் — என்பது, பொருள் வயிற்பிரிந்து செல்லுங் காலத்து விரைய வந்து அவளைப் பாதுகாப்பாயாகென விடுத்த துணைவியானவள் முன்பே அவள் பாது காத்தருளிய தலைமகள் வருந்தி யுரையாவண்ணம் நினது தேர் விரைந்து செல்லாது நிற்பதேன்? கார்முந்தச் செல்லா முன்னமே தேர் முந்தச் செலுத்துவாயெனத் தலைமகன் பாகனுக்குச் சொல்லா நிற்றல்.

(285) ஆகா நினைவினர்க் காகார்குற் றாலர் அணிவரைநம்
[3]பாகாவெங் கன்னலம் [4]பாகா மொழி[5]பட ராமலுமே
[6]வாகாய் விடுவொடு [7]வாகா வெனுந்துணை மாதுமுன்றோ்
ஏகாமல் நிற்பதென் னேகா ரினைமுந் திடநடத்தே.

தேருர் வலவனைச் சேயிழை யவள்முன்
காரு ராமுனந் தேருர் கென்றல்.

**சோகங் கொண்டவன் மேகந்தன்னொடு சொல்லல்.**

சோகங் கொண்டவன் மேகந்தன்னொடு சொல்லல் — என்பது, பதினொன் குலகையும் ஒன்றாய் அளக்க நின்றவனாலும் காண்டற்கரிய குற்றால நாயகர் நெடிய வரையிடத்து, என்னுடைய தேர்ப் பாகனுக் கும் ஆதவனது தேருக்கும் முன்னே சென்று 'என்னை வியப்பா' யெனக் கார்மேகமே! என்னுடைய தலைவியைத் தேற்றுவாயாகெனத் தலைமகன் சொல்லா நிற்றல்.

---

1 ஒன்றார்–சேரார். 2 அன்றில்–அன்றிற் பறவை. 3 பாகா–தேர்ப்பாகனே! 4 பாகுஆம்மொழி–சர்க்கரைப் பாகுபோன்ற சொல்லையுடையவள். 5 படராமல்–துன்புறாமல். 6 வாகு–பக்கம். 7 வா, கா–வருவாயாக, காப்பாற்றுவாயாக. இதில் சொற்பின் வருநிலையணி காண்க.

(286) [1]அன்றே ழுலகமு மன்றே ழுலகுமொன் றுயளக்க
நின்றோனுந் தேடவும் நின்றோர்குற் றாலர் நெடுங்கிரிவாய்
என்றேர் வலவற்கும் [2]என்றாழின் தேர்க்குமுன் னேமுகிலே
சென்றே எனையு[3]மெச் சென்றேயம் மாதினைத் தேற்றுவையே.

ஏன்றே ரினுக்த ழிரவிதே ரினுக்த
முன்றேர்ந் துரைக்க முகிலே செல்லெனல்.

**வலம்புரி கேட்டவன் வரவு அறிவுறுத்தல்.**

வலம்புரி கேட்டவன் வரவு அறிவுறுத்தல் - என்பது, குற்றாலக் கடவுளராகிய ஏகநாயகரது கூடலம்பதிக்குத் தமிழ் சங்க மிருந்து விளங்கியதுபோலும், நீவிர் இருவீருடைய கூடலுக்கும் தலைமகன் வரை பொருட் பிரிவுக்கு ஏறி நடாத்திய தேரின்கண் வலம்புரிச்சங்கம் முழங்கி விளங்குதலை உனது அலக்கண் தீரும்படி கேட்பாயாகெனப் பாங்கி தலைவிக்கு அவன் வரவுணர்த்தா நிற்றல்.

(287) கருவி லினியென்னை ஏவார்குற் றாலக் கடவுளெனும்
ஒருவர்தன் கூடற்குச் சங்கம் விளங்கும் உயர்ச்சியைப்போல்
இருவர்தங் கூடற்கும் அண்ணல் பொருள்வயிற் கேறியதேர்த்
திருகுடற் சங்கம் விளங்குதல் கேள்அல்லல் தீர்வதற்கே.

அலம்புரி யாதின் றநுள்புரிந் தநுள
வலம்புரி முழுவுடன் வந்தன ரென்றல்.

**வலம்புரி கிழத்தி வாழ்த்தல்.**

வலம்புரி கிழத்தி வாழ்த்தல் — என்பது, ஓர் இழைபோன்ற நுண்ணிடையுடையாளாகிய பாங்கிக்கும் எனக்கும் தலைமகனது தேரிடனுகிய சங்கம் எங்கணும் முழங்கி விளங்கிய நிச்சயத்தினுற் சங்க வீதி விழாக் கொண்டருளிய குறும் பலாவுடையாருடைய அன்பர்கள் திருக் கூட்டத்தைப் போலவும் வாழ்கவெனத் தலைமகள் வலம்புரி வாழ்த்தா நிற்றல்.

(288) இழைச்சங்க மின்றித் தனித்திடைக் கென்றனக் கின்றிறை[4]தேர்
உழைச்சங்க மெங்கு முழங்கி விளங்கிய வுண்மையினுற்
குழைச்சங்க நாயகர் [5]முட்கனிக் கொம்பர்க் குறும்பலவார்
மழைச்சங்க வீதிய ரன்பரைப் போலவும் வாழியவே.

---

1 அன்று ஏழுலகமும் அன்றேழுலகமும்—பதினுன்கு உலகமும் இதில் இரண்டாவது வந்த அன்று என்பது அசைச்சொல். 2 என்றாழின் தேர்க்கும் முன் சூரியன் தேர்க்கும் முன்பு. (மாலைப்பொழுது வருமுன்பு என்பது) 3 மெச்சு என்று வியப்பாயாக என்று. 4 தேர் உழை—தேரினிடம். 5 முட்கனி—பலாப்பழம்.

சங்கவீ றியர்தன தன்பர்து பூரம்போற்
சங்கழ்வா ழியமெவனத் தலேபுகள் கூறல்.

**வந்துழி நினைந்தமை வினுதல்.**

வந்துழி நினைந்தமை வினுதல் — என்பது, நீ பிரிந்து இதுநாள் வரையில் ஒரு நாளாகினும் நின்னுடைய மனத்துக்குள் என்னுடைய தையலானவள் வந்து புணர்ந்து விளையாடியதுண்டோ? இல்லேயோ? எனக்குச் சொல்லுவாயாகெனத் தோழி தலேவனேக் கேளா நிற்றல்.

(289) இகத்தினி லேபரத் தைத்தேடு மன்பர்க் [1]கிருபதமுந்
தகத்தரு சித்ர சபையார் வரையினிற் றையலர்நும்
அகத்துக்குள் வந்தொரு நாளாயி னும்விளை யாடலுண்டோ
செகத்துக் கொருதலே வாபுகல் வாய்திரு வாய்மலர்ந்தே.

அணகடை யுடையாள் ஐயநீ கநத
மனனிட ருக வந்ததுண் டோவெனல்.

**நினைத்தமை செப்பல்.**

நினைத்தமை செப்பல் - என்பது, "மூலே விலேக்காக எண்ணள வில்லாப் பொன்னே யெல்லாம் என்னுள்ளம் வருந்தாமல் தேடிக் கொண்டு வந்தேன். இரவும் பகலும் வருந்தி வருந்தி இரண்டு கண்ணும் இமை பொருந்தாமல் தேடித் தேடி வந்தேன். இந்தப் பொன்னினும் அரிதாயவளே" எனத் தலேவன் தோழிக்குச் சொல்லா நிற்றல்.

(290) அருந்தா விடத்தை யருந்துகுற் றூலர் அணிவரைக்குள்
இருந்தா ரணியி லளவையில் லாப்பொன்னே எந்தனுள்ளம்
வருந்தாமற் றேடிவந் தே[2]னல்லு மெல்லும் வருந்திவிழி
பொருந்தாமற் றேடிவந் தேனிந்தப் பொன்னேநம் பூவையரே.

வருந்திலன் றிதிக்த வருந்திரின் றிருகண்
பொருந்தில திவட்கெனப் புதந்தே னென்றது.

**அனேத்தகை யவளே ஆற்றுவித்திருந்த அருமை கூறல்.**

அனேத்தகை யவளே ஆற்றுவித்திருந்த அருமை கூறல் — என் பது, பொருள்வயிற் பிரிந்த நாண்முதல் தலேமகள் கண்ணுங் கண்ணீரு

---

1 இருபதமும்—இம்மை மறுமைப்பயன் இரண்டும். 2 அல்லும் எல்லும்—இரவும் பகலும்.

மாயிருந்து எழுதிய மையையும் தொய்யிலையும் அழுது அழுது கரைத்து விட யானொரு வண்ணமகள் போன்று எழுதி யெழுதி அலங்கரித்துப் பிறரொப்பனையாக வைத்திருந்தேனென வந்துழித் தலைமகனொடு ஆற்றுவித்திருந்த அருமை கூறா நிற்றல்.

(291) புழுதிய தாகப் புவியேழுஞ் சுட்டுப் புனைந்துகுழாக்
[1]கழுதுக ளோடு நடித்தகுற் றாலர் கனங்கிரிமான்
அழுதகண் ணீர்பட் டழிய வழிய அணிமை[2]தொயில்
எழுதி யெழுதிப் புனைந்தாற் றுவித்திருந் தேனண்ணலே.

அழுதழு தழிப்ப அஞ்சனந் தொயின்மற்
றெழுதி யாற்றுவித் திருந்தமை கூறல்.

இவற்றுள், என் பொருட் பிரிவுரை ஏந்திழைக்கென்ற லொன்றும் பிரிவறி வுறுத்தற்கும், பாங்கி நின் பொருட் பிரிவுரை நீயவட்கென்றல் ஆகிய வொன்றும் பிரிவுடன் படாமைக்கும், நீடேன் என்று அவன் நீங்கல் ஒன்றும் பிரிவுடன் படுத்தற்கும், பாங்கி தலைவிக்கு அவன் செலவுணர்த்தல் ஒன்றும் பிரிவுடன் படுதற்கும், பூங்குழை இரங்கலும், தலைவி கொடுஞ் சொற் சொல்லலும், பருவங்கண்டு புலம்புலும்........ மறுத்தலும், அவன் அவட்புலம்பலும் ஆகிய ஐந்தும் பிரிவுழிக் கலங்கற்கும், பாங்கி கொடுஞ் சொற் சொல்லலும், வருகுவர் மீண்டென வலித்தலும், பருவமன்று வம்பென்றலும், அவர் தூதாக வந்தடைந்தது இப்பொழுது என்றலுமாகிய நான்கும் வற்புறுத்தற்கும், பிணைவிழியாற்ற லொன்றும் வன்பொறைக்கும், மீண்டு வருங்கால் பாகனொடும் மேகத்தொடும் சொல்லலாகிய இரண்டும் வருவுழிக் கலங்கற்கும், பாங்கி வலம்புரி கேட்டு அவன் வரவறிவுறுத்தல் முதலாகிய ஐந்தும் வந்துழி மகிழ்ச்சிக்கும் உரியவாமெனக் கொள்க. பாங்கி தலைவிக்கு அவன் செலவுணர்த்தல் பிரிவறி வுறுத்தற்கும் அமையும். ஆகச்செய்யுள் (291) வரை விடத்துப் பொருள்வயிற் பிரிதல் முடிந்தது.

களவியல் முற்றும்.

1 கழுது—பேய். 2 தொயில்—சாந்தினால் உடலில் இடுங்கோலம்.

## வரைவியல்.

வரைவெனப் படுவ துரவோன் கிழத்தியைக்
குரவர் முதலோர் கொடுப்பவுங் கொடாமையுங்
கரணமொடு புணரக் கடியயர்ந்து கொளலே.

(ந. அ. வரைவியல். 1)

வரைவு மலிவே அறத்தொடு நிற்றலென்
றுரையமை யிரண்டும் வரைவிற் குரிய
கிளவித் தொகையெனக் கிளந்தனர் புலவர்.

(ந. அ வரைவு. 2)

இவற்றுள், வரைவுமுயல் வுணர்த்தல் வரைவெதிர் வுணர்த்தல்
வரைவறிந்து மகிழ்தல் பரவல்கண் டுவத்தலென்
றொருநால் வகைத்தே வரைவு மலிதல்.

(ந. அ. வரைவு. 3)

காதலன் முலைவிலை கொடுத்தமை பாங்கி
காதலிக் குணர்த்தலுங் காதலி நற்றாய்
உள்ளம் மகிழ்ச்சி யுள்ளலும் பாங்கி
தமர்வரை வெதிர்ந்தமை தலைவிக் குணர்த்தலும்
அவளுவகை யாற்று துளத்தொடு கிளத்தலும்
தலைவனைப் பாங்கி வாழ்த்தலும் தலைவி
மணப்பொருட் டாக அணங்கைப் பராநிலை
காட்டலுங் கண்டோன் மகிழ்வுமென் றீட்டிய
இருமூன்று மொன்றும் வரைவுமலி தற்காம்
விரியென விளம்பினர் மெய்யுணர்ந் தோரே.

(ந. அ. வரைவு. 4)

**காதலன் முலைவிலை கொடுத்தமை பாங்கி காதலிக்கு உணர்த்தல்**

காதலன் முலைவிலை கொடுத்தமை பாங்கி காதலிக்கு உணர்த்தல் - என்பது, தலைமகன் பொருள்வயிற் பிரிந்து வந்துழிக் குரவரை எதிர்ந்து வேலையும் ஓரையும் நாளும் கோளும் பொருந்திய காலத்து முரசும் பணிலமும் முழங்கக் குழாத்து யாவருங் களிப் பெய்தக் குற்றாலத் தெய்வமும் நிதியிற் பெரிய குபேரனைத் துணைக்கொண்டதெனச் சிந்தித்து நின்னை வாழ்க்கைத்துணை நலனாகக் கொள்ள நிதிபதிக்கில்லாத் -திரவியமுங் கொண்டுவந்து இங்ஙனம் முன்றிலும் கொல்லையும் நகரும் வீதியுமாகப் பரப்பாநின்றாரெனப் பாங்கி தலைமகட்குணர்த்தா நிற்றல்.

(292) நிதியாற் பெரியகு பேரனைத் தோழமை நீண்முடிமேல்
நதியார்ப் புறுதிருக் குற்றாலர் கொண்டத னாலிறைவர்
துதியார்க்குங் கண்ணிநின் தோள்முலைக் கேநெஞ்சம் நோக்கி[1]நிதி
பதியார்க்கில் லாத தனமுங் கொணர்ந்திங்ஙன் பரப்பினரே.

*தொலைவிலா நிதியம் தோன்றல்கைக் கொணர்ந்து*
*முலைவிலை கொடுத்தலை மொழிந்துரைத்தல்.*

**காதலி நற்றாய் உள்ளம் மகிழ்ச்சி யுள்ளல்.**

காதலி நற்றாய் உள்ளம் மகிழ்ச்சி யுள்ளல் — என்பது, உடல் பொருள் ஆவி மூன்றும் நினது உடைமை யென்னுந் தொண்டர்க்குப் பேரின்ப வாழ்வு பாலிப்பக் குற்றால நாயகர் திருவுள்ளத்து அருண் மகிழ்ச்சி கூர்ந்தன போலும் தலைமகன் முலைவிலையுங் கொடுத்துப் பொருள் நடுவணதாதற்கு இருதலையும் இக்கடலிடத்துக் கொடுக்கக் கடனென்று நம் ஐயர் முன் உபசரிக்கின் நம் அன்னை நம்மினுங் களிப் பெய்து மென்று பாங்கி நினையா நிற்றல்.

(293) உடல்பொருள் ஆவியு நின்ன துனக்கென் றுதவினர்வாழ்ந்
திடலவர்க் கெய்திடக் குற்றாலர்க் கேமகிழ் வெய்தினபோல்
அடலிடும் வேலர் முலைவிலை யீந்துடல் ஆவியுமே
கடலிடத் தீகக் கடனெனில் அன்னை களிப்பெய்துமே.

*முலைமுகிழ்ப் பாங்கி முலைவிலை கொடுப்பத்*
*தன்மக ளன்னை தன்மகிழ் வுணர்தல்.*

**பாங்கி தமர்வரை வெதிர்ந்தமை தலைமகட் குணர்த்தல்**

பாங்கி தமர்வரை வெதிர்ந்தமை தலைமகட்குணர்த்தல் - என்பது இற்றைநாள் தலைமகன் உண்மை சம்பந்தமாக நம்முடைய தமர்கட்கும் பெரியோர்கட்கும் வரைவுரைத்துப் பத்துத்தலைமுறை ஆண்டநுபவித் தாலும் தொலையாத கலியாணத்தைக் கொணர்ந்து அளியாநின்றார். அது மகிழ்ச்சியினால் வரைவு எதிர்நோக்கித் தமர்களெல்லோரும் நம் குலமகட்குக் கலியாணஞ் செய்து இவர்க்குக் கொடுப்பேமெனக் கூறா நின்றாரெனப் பாங்கி தலைவிக்குணர்த்தியது.

(294) அமர்க்கே நடாத்தும் விடையார் வழிபட் டடிவணங்குந்
தமர்க்கே கருணைசெய் குற்றாலர் வெற்பிற் றலைவரிந்நாள்
நமர்க்கேகல் யாண நனிதளித் தார த னால்நமர்நங்
[2]குமர்க்கேகல் யாணஞ்செய் தேகொடுப் பேமென்று கூறினரே.

1 நிதிபதி - குபேரன். 2 குமர் - கன்னியழியாதவள்.

கொள்வெதிர்ந் திவக்குக் கொடுப்பே மெனத்தமர்
விள்வது கண்டு மெல்லியற் றுரைத்தல்.

**தலைமகள் உவகை யாற்றுதுளத்தொடு கிளத்தல்.**

தலைமகள் உவகை யாற்றாதுளத்தொடு கிளத்தல் — என்பது, குறியிடையீடும், அருநெறிச்சேறலும், வெறியினதாடலும், பிறர் தூதுரைத்தலும் ஆகிய இடையூறுகளான் களவொழுக்கம் ஆதலால் இற்றைநாள் வரையுள்ள வரைவு புல்லிய மணமாகும். இப்படி யொத்த இன்னுமை யொழிந்தமையால் இனிமேல் எய்தப்படா நின்ற இன்பம் நன்மணமாமெனத் தலைமகள் உவகை கூர்ந்து உள்ளத்தொடு சொல்லா நிற்றல்.

(295) மின்மண வார்குழ லாள்குழள் வாய்மொழி மின்கொடியாள்
தன்மண வாளர் வரையிற்றை நாள்வரை தான்புணர்தல்
புன்மண மாங்கள வாதலி னுவின்னல் போதலினுல்
[1]நன்மண மாமினி எய்திடு மின்பமென் னெஞ்சகமே.

கள்ளொழுக் காதலிற் கடிமல னின்றினி
யுள்ளொழுக் கின்பமென் றெண்ணுதல் மகிழ்தல்.

**தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.**

தலைவனைப் பாங்கி வாழ்த்தல் — என்பது, மன்மதன் ஏவா நின்ற புட்பபாணங்கட் கிடைந்து, ஊணின் கலனும் பூணின் கலனும் வேண்டாத தலைமகளைச் சிந்தித்து இரவும் பகலும் இடையீடுகளை யெண்ணு வந்து யான் வரைவு கடாவியபடி தமர் வரைவெதிராக முன்னைத் தவமுயன்றிருந்தீர். ஆதலால் இம்மைக் கண் நீடுவாழ்ந்திருப்பீராகெனத் தலைவனைப் பாங்கி வாழ்த்தாநிற்றல்.

(296) சிரவுண் கலத்தினர் குற்றுலர் வெற்பிற் சிலைமதவேள்
பொரவுண் கலனணி யுங்கல னீங்கின பொன்னையெண்ணி
இரவும் பகலு மிடையூறெண் ணுவந் தெமர்கருத்து
வரவுந் தவமுயன் றீரண்ண லேமிக வாழியவே.

இதுவநும் பழங்கணின் றெதிர்ந்தீர் வரைவென
நிருபனைத் தோழி நெடிதுற வாழ்த்தல்.

---

1 இவ்வடியில் மோனையின்மையின் பாடபேதம் இருந்திருக்க வேண்டும்: இன் மண மாமினி எய்திடு மின்பங்க ளென்னெஞ்சமே. என்று பாடபேதம் கொள்ளலாம்.

### தலைவி மணப்பொருட்டாக அணங்கைப் பராஅநிலைகாட்டல்.

தலைவி மணப்பொருட்டாக அணங்கைப் பராஅநிலைகாட்டல் என்பது, நமது தமரானவர் முலைவிலை கொடுக்க வாங்கிய விடத்து மணம் நீடித்துக் கிடவாது விரைய நடக்கும் பொருட்டாகக் குற்றாலநாயகர் பொருப்புக்குரிய குமரக்கடவுளை வந்தித்துத் தலைமகள் வேண்டாநிற்கு நிலைமையினைப் பார்ப்பாயாகெனத் தான் கண்டு பாங்கி தலைமகற்குக் காட்டா நிற்றல்.

(297) மருப்பணங் காக்குங் களிற்றூர் போர்த்து மணிமருமங்
குருப்பணங் காதி விரிபாம் பணியுங்குற் றாலநம்பர்
பொருப்பணங் கானதை வேண்டி மணப்பொருட் டாலங்ஙன்
விருப்பணங் காகத் தொழாநிற்றல் பார்க்கவை வேல்மன்னரே.

மணமிறை வேற வரையின தணங்கைப்
பணவர வல்குல் பராஅநிலை காட்டல்.

### பராஅநிலைகண்டோன் மகிழ்தல்.

பராஅநிலைகண்டோன் மகிழ்தல் — என்பது, 'தலைமகன் என்னை நயந்தமை அழகுடையாளென்றல்ல; அடிமை பூண்டுன்னை நம்புதற் குடையாளென்றே. ஆதலால் இந்தவரையிடத்துக் குரிய தோர் தெய்வமே! ஒருகுறைவின்றி அவர்க்கு மண மெய்தும்படி வரந் தா' எனக் கேட்டுத் தலைமகள் தெய்வத்தைப் பரவா நிற்கும் நிலையினை என் நெஞ்சமே பார்ப்பாயாகெனத் தலைமகன் மகிழா நிற்றல்

(298) கணங்குழை வாகநின் றோங்குற் றாலர் கனகவெற்பார்
அணங்குடை யாளென் றெனைநயந் தாரத னலணங்கே
மணங்குறை வின்றி யவர்க்கெய்த வேவரந் தாவெனமா
திணங்கு வதாக வணங்குதல் காணிகு தென்னெஞ்சமே.

வடவெற் பனமுலை மான்மண மெய்தக்
கடவுட் பராஅநிலை கண்டோன் மகிழ்தல்.

இவற்றுள், காதலன் முலைவிலை கொடுத்தமை பாங்கி காதலிக் குணர்த்தலும் தலைவி மணப்பொருட்டாக அணங்கைப் பராஅநிலை காட்டலுமாகிய இரண்டும் வரைவு முயல்வுணர்த்தற்கும், பாங்கி தமர் வரை வெதிர்ந்தமை தலைமகட்குணர்த்தலாகிய வொன்றும் வரைவெதிர்

வுணர்த்தற்கும், நற்று யுள்ள மகிழ்ச்சி யுள்ளலும், தலைமகளுவகை யாற்று துளத்தொடு கிளத்தலும், தலைமகளைப் பாங்கி வாழ்த்தலும் ஆகிய மூன்றும் வரைவறிந்து மகிழ்தற்கும், பாரஅதிலை கண்டோன் மகிழ்தலாகிய வொன்றும் பரவல்கண்டுவத்தற்கு முரியவாமெனக் கொள்க. ஆகச் செய்யுள் (298).

## அறத்தொடு நிற்றல்.

முன்னிலை முன்னிலைப் புறமொழி யென்றங்
கன்ன விருவகைத் தறத்தொடு நிலையே.

(ந. அ வரைவு 5)

கையறு தோழி கண்ணீர் துடைத்துழிக்
கலுழ்தற் காரணங் கூறலுந் தலைவன்
தெய்வங் காட்டித் தெளிப்பத் தெளிந்தமை
எய்தக் கூறலும் இகந்தமை யியம்பலும்
இயற்பழித் துரைத்துழி இயற்பட மொழிதலும்
தெய்வம் பொறைகொளச் செல்குவ மென்றலும்
இல்வயிற் செறித்தமை சொல்லலுஞ் செவிலி
கனையிருள் அவன்வரக் கண்டமை கூறலும்
எனமுறை யியம்பிய ஏழும் புனையிழைத்
தலைவி யறத்தொடு நிலைதனக் குரிய.

(ந. அ. வரைவு 6)

**கையறு தோழி கண்ணீர் துடைத்தல்.**

கையறு தோழி கண்ணீர் துடைத்தல் — என்பது, களவிய லொழித்துத் தலைமகன் வரைபொருட் கொடுக்க வரைவெதிர்ந்த குரவோர் முதலிய தமர்கள் வதுவைக் கேற்ற காரணங்கள் நிகழ்த்த [1]உதகஞ் செய்துகொடாமையால் தலைமகள் உள்ளங் கலங்கிக் கண்களிற் கண்ணீராகிய முத்துருண்டு முலைக் கண்களி லுமிழக்கண்ட பாங்கி இவ்வகை உனக்கு அலக்கண் வந்த காரணம் யாதென விஞவுற்றுக் கண்ணீர் துடையா நிற்றல்.

(299) இலக்கமில் லாத்தவ னோன்றவர் முன்னம்வந் தெய்துதற்கே
துலக்கமில் லாத்திருக் குற்றாலர் வெற்பினிற் றோகையன்னீர்
கலக்கமுற் றேதெளி கண்ணீ ரிருதனக் கண்ணுறவே
அலக்கணுற் றீரிவை தானேது காரண மாய்வந்ததே.

1 உதகஞ் செய்தல் - தாரைவார்த்துக் கொடுத்தல்.

கொடிகா ணங்கள் காணா திரங்கத்
துடியிடைக் கிதனை துணிகலுழ் மாற்றல்.

**கலுழ்தற் காரணங் கூறல்.**

கலுழ்தற் காரணங் கூறல் — என்பது, வரைபொருட் கொடுத்துச் சென்ற தலைவர் வருந்துணையுஞ் சயனத் தானத்துத் தலைசாய்த்துக் கிடந்து உறங்கா வண்ணம் வைத்தமையால் துன்புற்ற நெஞ்சத்திடை தலை வைத்துக் கலுழ்ந்தேனேயன்றி வேறோரிடையில்லை என்று தலைமகள் பாங்கிக்குச் சொல்லா நிற்றல்.

(300) கடைதலை வைத்துக் கருதும் விரதியர்க் காத்தவரு
னுடைதலை வைத்திரந் துண்டகுற் றாலர் உயர்வரையார்
படைதலை வைத்துத் துயிலா திருத்தப் பழங்கணெஞ்சி
லிடைதலை வைத்துக் கலுழ்ந்ததல் லாலோ ரிடையில்லையே.

வரைவென வந்தும் வரையா திருந்த
விரைவனை கலுழ்ந்தமை நேரிழைக் குரைத்தல்.

**தலைமகன் தெய்வங்காட்டித் தெளிப்பத் தெளிந்தமை எய்தக் கூறல்.**

தலைமகன் தெய்வங்காட்டித் தெளிப்பத் தெளிந்தமை எய்தக் கூறல் – என்பது, கைத்தலத்து ஏந்திய [1]கபோலமும் கண்ணும் கண்ணீருமாய் இதுவரையிருந்ததுபோல இனிமேற் சலித்திருக்கத் தகவேனல்ல. முன்னை நாட்கூட்டத்துக் கடவுள் சான்றாகக் காட்டித் தெளிவுரைக்குமிடத்துத் தலைவர் மனத்து ஒரு களங்கம் வைத்துச் சொல்லாரென்று அறிந்தேனெனத் தெளிந்ததைச் சொல்லித் தலைமகள் பாங்கிக்கு அறத்தொடு நிற்றல்.

(301) சைவத் தலைவர்நங் குற்றாலர் வெற்பினிற் சாய்ந்து[2]கவுள்
கைவத் திருந்து கலுழச்செய் யேன்கை கலந்தமுன்னாள்
தெய்வத்தைக் காட்டித் தெளிவன கூறலிற் சித்தமொரு
பொய்வைத் திறைவர்சொல் லாரென் றறிந்தனம் பூங்கொடியே.

கடவுட் காட்டிய கருத்துரைத் திறைவி
திடமுற் றிதனைச் சொல்வழி நிற்றல்.

---

1 கபோலம்-கன்னம். 2 கவுள் – கன்னம்.

### தலைமகனிகந்தமை யியம்பல்.

தலைமகனிகந்தமை யியம்பல் – என்பது, கடவுள் முன்னின்று நிசஞ்சொல்லிப் போயவர் அந்த நினைவை யொழிந்திருந்தால் வந்து கலந்துற மணந்தாரில்லையென்பது எனது பேதைமை யல்லது வேறன்றெனத் தலைமகள் பாங்கிக்குத் தலைமகன் இகந்தமை கூறுநிற்றல்.

(302) பூட்டல்செய் தார்மனச் சிந்தைகண் டேபொற் புனைகழற்றான்
நீட்டல்செய் தார்திருக் குற்றாலர் வெற்பில் நிசத்திற்றெய்வங்
காட்டல்செய் தாரந் நினைவொழிந் தால்வந்து கைகலந்து
கூட்டல்செய் தாரிலை யென்றல்பெண் பேதைமை கோதையரே.

*அகன்றில ராக அணங்குமுற் புகன்றோர்*
*இகந்தமை தலைவி இதனைக் குரைத்தல்.*

### பாங்கி தலைவனை யியற்பழித்துரைத்தல்.

பாங்கி தலைவனை யியற்பழித்துரைத்தல் – என்பது, அக்கினியைக் கண்ட [1]நவநீதம்போல நினதுள்ளத்தைக் கரைவித்துக் கண்களில் முத்துருளச் செய்வித்தமையால் உன்னுடைய அன்பராகிய தலைவர்க்கு வாக்குச் சுத்தியில்லை யென்பது கண்டோமெனப் பாங்கி இயற்பழித்துரையாநிற்றல்.

(303) [2]தண்ணை யழல்கண்ட தாய்க்குழல் வாய்மொழித் தற்பரையாம்
[3]பெண்ணை யழல்கண்ட கஞ்சாற்றப் பெற்ற பிரான்வரைமேல்
வெண்ணெய் யழல்கண் டதுபோல்நின் உள்ள மிகவுருக்கிக்
கண்ணை யழல்கண்ட தாலன்பர் வாய்க்கள வுங்கண்டதே.

*உள்ளோர் திரங்க வுனையிகந் தமையால்*
*கள்வனென் றவண்முன் காதலற் பழித்தல்.*

### தலைமகள் இயற்பட மொழிதல்.

தலைமகள் இயற்பட மொழிதல் — என்பது, எனது தலைவரைத் தவிர எனது வாட்டத்தை யாவரால் தவிர்க்கக் கடவது? எனக்குக் குலதெய்வமும் அவரே யென்னக் கண்டதனால் இகந்தமை நோக்கிப் பலபேசுதல் அறிவின்மையே யெனத் தலைமகள் இயற்படமொழியாநிற்றல்.

---

1 நவநீதம்–வெண்ணெய். 2 தண்ணை-குளிர்ச்சியை. 3 பெண்ணை-பெண்ணால் (உருபு மயக்கம்)

(304) [1]நவராக நீள்பொழில் வாய்வண்டு பாடிய நன்னகர்மா
தவராக மேனியர் வெற்பிலென் ஆதிபர் தம்மையன்றி
எவராக வாட்டந் தவிர்ப்பார் குலதெய்வ மென்பதெனக்
கவராகக் கண்டத றற்பல பேச லறிவின்மையே.

வருத்தினும் வருத்தம் மீர்ற்றிடம் அவர்தங்
கருத்தெனத் தலைவி கருத்தியற் படுதல்

**தெய்வம் பொறை கொளச்செல்குவ மென்றல்.**

தெய்வம் பொறை கொளச்செல்குவ மென்றல் — என்பது, நாம், இகந்தமை நோக்கித் தலைவரைத் தெய்வஞ் சீறுமுன்னமே பொறுத்தருளும்படியாக நறுவிய மலர்களைத் தூவிப் பாதம் பரவுவதாகப் போதுவேமெனப் பாங்கி தலைவிக்குச் சொல்லாநிற்றல்.

(305) கிறைகொளு மன்பர் பணிப்போன்குற் றால நிழன்முன்றில்
[வாய்த்
திறைகொளு மீசர் வரைவேங் தரைத்தெய்வஞ் சீறுமுன்னே
நறைகொளு மாமல ரிட்டுப்பொய் யாணைக்கு நாமிகழ்தல்
பொறைகொள வேண்டிமின் னேயடி வாழ்த்திடப் போதுவமே.

இகந்தமை பொறுத்தற் கினியதெய் வத்தைப்
பகர்ந்தினி தேத்தப் படர்வோ மென்றது.

**இல்வயிற் செறித்தமை சொல்லல்.**

இல்வயிற் செறித்தமை சொல்லல் - என்பது, அந்தப்புரத்தை நீங்கித் தலைக்கடைப்புறத்து ஏகாது உறுப்படங்கி இருக்கும் ஆமையைப் போலும், அகப்புறத் தடங்கி இருப்பாயாகெனச் செவிலித்தாய் வெகுண்டுரைக்கலுற்றாள். ஆகலால் ஓரிடத்துஞ் செல்லக்கூடாது எனப் பாங்கிக்குத் தலைமகளுரையா நிற்றல்.

(306) கறுப்பாதல் கண்டத்தில் அல்லதில் லாதவர் கங்கைமுடி
பொறுப்பாதல் பெற்றகுற் றாலர்வெற் பிற்புறம் போகலின்றி
உறுப்பாதல் ஆமை யடக்குதல் போலு மொடுங்கெனத்தாய்
வெறுப்பாக வுற்ற மனைக்கண்புக் காயென்று விண்டனளே.

[2]உறுப்படக் கியைப்போல் ஒடுங்கெனச் செவிலி
செறித்தமை இதனைச் செவிப்புக வுரைத்தல்.

---

1 நவராகம் - புதுமையான இசை. 2 உறுப்படக்கி-ஆமை.

**செவிலி கனவிருள் அவன்வரக் கண்டமை கூறல்.**

செவிலி கனவிருள் அவன்வரக் கண்டமை கூறல் - என்பது, செவிலித் தாயானவள் யான் நிரம்பாத் துயிலாயிருக்கும் இருட்பொழுதில் நவமணி விளங்கிய கிரீடமும் வேல்பிடித்திருக்குங் கரதலமும் கண் பார்க்கத் தோன்றிற்று. இது வேலவரை வரக்கண்ட சொப்பனமோ? உள்ளதோ? எனக்குத் தேறவில்லை. இதை நிச்சயித்துச் சொல்வாயாகெனச் சொன்னாளென்பதைத் தலைமகள் பாங்கிக்குச் சொல்லாநிற்றல்.

(307) வரம்[1]பா(ர்)த் தனுக்கருள் குற்றாலர் வெற்பர் வரவுகண்டே
நிரம்பாத் துயிலின் மணிமா முடிநெடு வேல்பிடித்த
கரம்பார்க்கத் தோன்றிற்றுச் [2]சேய்வரக் காண்கன
வோவெனவோ
திரம்பார்த்துச் சொல்லென்று கேட்டாள் செவிலியென்
றேமொழியே.

நெருனற் கண்டேன் நெடுவே லனையெனத்
திருநுற் செவிலி செப்பலைச் செப்பல்.

இவற்றுள் கனாற்குற்காரணங் கூறலொன்றும் ஒழித்து ஏனையவெல்லாம் பாங்கி வினாவாமொழிகளும் தலைமகள் அறத்தொடு நிலை தனக்குரியவா மென்று அறிந்துகொள்க.

**பாங்கி செவிலிக்கு அறத்தொடு நிற்றல்.**

எறிவலை வேற்றுமைக் கேதுவி னுவினும்
வெறிவிலக் கியவழி வினவினும் பாங்கி
பூவே புனலே களிறே யென்றிவை
ஏது வாகத் தலைப்பா டியம்பும்.

(ந. அ. வரைவு 7)

**செவிலி தலைமகள் வேற்றுமைகண்டு பாங்கியை வினுதல்.**

செவிலி தலைமகள் வேற்றுமை கண்டு பாங்கியை வினுதல் என்பது, கரை பொருது மோதிய திரையின்கண்ணே முத்துக்களெறியப்பட்ட செண்பகாடவித்துறையிடத்து விளையாடச்சென்ற அந்நாண்முதலே இவ்வரை மகளாகிய தலைவியினது கண்ணீர் வார்ந்

1 பார்த்தன்-அருச்சுனன். 2 சேய்-முருகன்.

தொழுக அதனை இறுமாந்தெழுந்த முலைக்கண்களுண்ணவும் முகத்தி னுள்ள ஒளி வாடலுற்ற ஹேதுகாரணமெனப் பாங்கியைச் செவிலி வினவாநிற்றல்.

(308) [1]உலைக்கண் [2]களூதிரு பாகர்குற் றாலர் உயர்வரைமான்
வலைக்கண்கள் நீருக வார்ந்தோ டவுமிறு மாந்தெழுந்த
முலைக்கண்க ளுண்டு முகத்தொளி வாடலென் மோதருவி
யலைக்கண்கள் [3]ஆர மெறிதுறை வாய்விளை யாடலன்றே.

முத்துநள் கண்ணும் முகத்தொளி வாட்டமும்
எத்தலைச் சென்றதி லெய்தின வென்றல்.

### பாங்கி வெறிவிலக்கல்.

பாங்கி வெறிவிலக்கல் – என்பது, குற்றால நாயகர் திருநகரிப் பெருமகன் வரைபொருட் கொடுத்து வேண்டி விருப்புற்ற தலைமகட்கு ஓர் அணங்கு அணுகலைக்குறித்துத் தசைப்பலியிட்டு வெறியாடுவதாக ஒரு தகரினை வேண்டுதல் வேண்டாவெனப் பாங்கி விலக்காநிற்றல்.

(309) [4]வாராடு கொங்கைநன் மங்கை யொனுங்குழல் வாய்மொழிப்பெண்
சீராடு பங்கன்குற் றாலநன் கோன்வளஞ் சேர்நகரிற்
பேராடு வேண்டி விருப்புற்ற சிற்றிடைப் பெண்கொடிக்காய்
ஓராடு வேண்டுதல் வேண்டாஞ்சொன் னேனுனைக் [கொண்டொடியே

வெறியிற் றீரா வெய்ய நோயென்ன
மறியைக் கோறல் வால்வளை விலக்கல்

### வெறி விலக்கிய வழி வினாதல்.

வெறிவிலக்கிய வழி வினாதல் – என்பது, பாங்கி வெறிவிலக்கிய வழிச் செவிலித் தாயானவள் தலைமகள் மெலிதலை அணங்கெனக் குறித்து ஒரு துள்ளும் மறியைச் சேதித்துப் பலியிட்டு வெறியாடலினை நீக்கினையானால் இவளைத் தொடுத்துப் பிடித்த பேய் எந்தப் பேய்? அந்தப் பேய்தனை விளங்கச் சொல்லெனக் கேளாநிற்றல்.

(310) வெடித்த வெறிமலர்ச் சூழற் சுரும்பொழி வின்றியுங்கட்
குடித்த வெறியிற்பண் பாடுங்குற் றாலர்வெற் புக்கொடிக்கே
துடித்த வெறிகொண்டு தீர்ப்பது நீப்பிற் றொடுத்திவளைப்
பிடித்த வெறியெந்த வாறந்த வாறு பிறித்துரையே.

1 உலை—கம்மாளன் உலையைப்போன்று 2 ஊது—தீயை உமிழ்கின்ற. 3 ஆரம்—சந்தனம். 4 வார்—கச்சு.

வெறிவிலக் கியக்கால் மெல்லியல் மெலிந்த
தறியெவ னென்னக் கொன்தாய் கேட்டல்.

**பாங்கி பூத்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல்.**

பாங்கி பூத்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல் — என்பது, செண்பகாரணியத்தில் யானும் தலைமகளும் விளையாடச் சென்றிடத்தொருநாள் யாங்கள் மலர்கொய்து நிற்பக்கண்டு நீலோற்பல மாலையைக் கொணர்ந்து தலைமகள் கையிற்கொடுத்துக் கூந்தலிற் சூட்டிக்கொள்வாய்; உனக்கு மணமெய்தும்; என்றொரு காதலர் சொல்லக் கண்டேனெனச் செவிலிக்குப் பாங்கி முன்னிலைப் புறமொழியாகச் சொல்லி அறத்தொடு நிற்றல்.

(311) மெய்ந்நீல வண்ணனுந் [1]தாமரைக் கண்ணனும் வேண்டிச்சிந்தை
செய்ந்நீல கண்டர்தங் குற்றாலர் வெற்பிற்சென் றேயொருநாள்
மைந்நீல வார்குழல் சூட்டுனக் கெய்து மணமெனச்செங்
கைந்நீல மாலை கொடுத்தார்மின் னுட்கொரு காதலரே.

காத்தறம் வழுவாக் கனிமொழி யணைத்துப்
பூத்தரு புணர்ச்சி புகன்றினி தொழுகல்.

**புனல்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல்.**

புனல்தரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல் - என்பது, நன்னகர்ப் பெருமான் தந்தருளிய குமரநாயகன் முன்னாளையிற் புனலிடை வீழ்ந்த வள்ளி நாய்ச்சியாரை அணைத்தெடுக்கப் பெறுந்தகைமை போல, இந்நாளையிற் றலைமகளை யுயிர்ப்படங்கித் திகைப்ப ஓரணையிடத்துந் தறுகாது அணைகடந்து ஈர்த்துப்போக அந்நேரமே அந்தப் பெரும்புனலை ஒரு தலைமகன் வந்து நீந்திக் கையினாற் கட்டியணைத்தெடுத்துக் கரையிற் கொணர்ந்து சேர்த்தார். அக்காலத்திலே சுகத்தைக் கண்டாள் போலுமெனப் பாங்கி செவிலிக்குச் சொல்லாநிற்றல்.

(312) சுட்டி யணைக்கு நுதல்வள்ளி நன்னகர்ச் சோதிபெற்ற
[2]செட்டி யணைத்தெடுக் கப்பெறல் போற்றிகைத் தேயுயிர்ப்பு
முட்டி யணைப்பின் னதியீர்த்துப் போகன் முயன்றொருவர்
கட்டி யணைத்தெடுத் தாரதி லேசுகங் கண்டனளே.

புனல்தளித் தெடுப்பப் புரிவனை சுகித்த
வினைவினைப் பாங்கி நேரிழைக் குரைத்தல.

---

1 தாமரைக்கண்ணான்—தாமரையை இடமாகவுடைய பிரமா. 2 செட்டி—முருகன்.

**களிறுதரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல்.**

களிறுதரு புணர்ச்சியால் அறத்தொடு நிற்றல் — என்பது, ஒருநாள் உய்யானத்து நமது தலைமகள் விளையாடச் சென்றிடத்து வேகமாக விரைந்து ஒரு வேழம் எதிரே நெருங்கிவர மெய்ந்நடுக்குற்று அஞ்சினபோதினிற் கோ வென்று வாய்வெருவி அழ அதனை முறையீடாகக் குறித்துத் தஞ்சமென்றது ஆர் என வினவி ஒரு கோமகன் கிட்டிவந்து கண்ணீர் துடைக்கச் செய்தானெனப் பாங்கி செவிலிக்குச் சொல்லா நிற்றல்.

(313) நஞ்சின ராப்புனை குற்றாலர் வெற்பினி னம்மகளோர்
வெஞ்சின வேழம் விரைந்தெதி ரேவர மெய்பதறி
அஞ்சின போதினிற் [1]கோவென் றழுதலி னலிறைவர்
கெஞ்சின தாரெனக் கண்ணீர் துடைத்தனர் கிட்டிவந்தே.

[2]கருணியொன் றெதிரக் கடிதுவந் தடுத்தோன்
அருணினை வந்தமை அறைந்தமை கூறல்.

இம்மூன்றனுள் ஒன்று அறத்தொடு நிற்க அமையும்.

மின்னிடை வேற்றுமை கண்டுதாய் வினவுழி
முன்னிலை மொழியான் மொழியுஞ் செவிலி.

(ந. அ வரைவு 8)

**தலைமகள் வேற்றுமை கண்டு நற்றாய் செவிலியை வினுதல்.**

தலைமகள் வேற்றுமை கண்டு நற்றாய் செவிலியை வினுதல் — என்பது. கடலினிடத்து வரப்பட்ட [3]தரங்கமானது முத்துக்களைச் சிதறா நிற்பது போலத் தலைமகள் அனவரதமும் கடல்போன்ற கண்களால் முத்துக்களை யுதிர்த்திளையா நின்றாள். அது நிற்கப் பிறர் அஞ்சத் தக்க மதிப்புடைய நிறைகாப்பாளுக்கு இந்த உள்ளுடைவு யாது காரணமாக வந்ததெனச் செவிலியை நற்றாய் வினுயது.

(314) வெட்கட லார்விட முண்டகுற் றாலர் வியன்கிரிவாய்
மட்கடல் முத்தஞ் சொரிவன போற்புனை வார்முலைக்கே
கட்கடல் முத்தஞ் சொரிந்திளைத் தாள்பிறர் காதல்செய்யா
துட்கடல் செய்யும் நிறைமகட் கேனிந்த உள்ளுடைவே.

---

1 கோ-அழுகை ஒலிக்குறிப்பு. 2 கருணி-யானை. 3 தரங்கம்-அலை.

கட்டழ கழியக் கனங்குழைக் கிந்த
[1]இட்டள மேதென ஈன்றாள் வினவல்

**செவிலி நற்றாய்க்கு முன்னிலை மொழியால் அறத்தொடு நிற்றல்.**

செவிலி நற்றாய்க்கு முன்னிலை மொழியால் அறத்தொடு நிற்றல் - என்பது, திருக்குற்றாலச் சாரலின்கண் அருவியம் புனல் குடையச் சென்றிடத்து அந்த நீர் சுழித்து இழுத்துப் போயும், உய்யானத்து மலர் கொய்யுமிடத்து ஒருகளிறு துரப்ப ஓடியும், வருந்திய காலத்துக் கோமகனொருவன் வந்து உய்யும்படியாகக் காவா நின்றனனும் என்று செவிலிநற்றாய்க்கு முன்னிலை மொழியான் மொழிந்து அறத்தொடு நிற்றல்.

(315) தேராடு [2]கேதனஞ் [3]சேணார்குற் றாலத்திற் றேனருவி
நீராடற் கண்ணு மலர்கொய்தற் கண்ணுமந் நீர்சுழித்தும்
போராடல் வேழந் துரந்தும் வருந்தின போதினிலே
ஓராட வர்வந்து காத்தன ராமப் பிடும்பொருட்டே.

பூப்புனல் களிற்றுற் புணர்ப்பினை யிதனை
யாப்புரைத் தன[4]கைத் தாய்தாய்க் கியம்பல்.

நற்றாய், குறிப்பினன்றி அறத்தொடு நிற்கப்பொருள் என்றமையால் அதற்கு உதாரணமின்று.

ஏன்றுட னியம்பிய வெல்லாங் களவியல்
நின்றுழி யறத்தொடு நிற்றலின் விரியே.

(ந. அ. வரைவு 9)

இது களவு வெளிப்படா முன் நிகழும் அறத்தொடு நிலையின் விரி தொகுத்துக் கூறுகின்றது. இவற்றுள், கையறு தோழி கண்ணீர் துடைத்துழிக் கலுழ்தற் காரணங்கூறல் முதலாகத் தலைமகள் வேறுபாடு கண்டு நற்றாய் வினவிய வழிச்செவிலி முன்னிலை மொழியான் மொழிதலீறாகச் சொல்லப்பட்டவெல்லாம் களவொழுக்கம் வெளிப்படாது நின்றவிடத்து அறத்தொடு நிற்றலின் விரியா மென்றவாறு. அறத்தொடு நிற்றல் முற்றும். ஆகச் செய்யுள் (315).

---

1 இட்டளம்-துன்பம். 2 கேதனம்-கொடி. 3 சேணார்-வானளவும் நிறைந்த
4 கைத்தாய்-செவிலித்தாய்.

# உடன் போக்கு.

போக்கே கற்பொடு புணர்ந்த கௌவை
மீட்சியென் றிந்த விளம்பிய மூன்றும்
வெளிப்படைக் கிளவி வெளிப்படு தொகையே.

(ந அ வரைவு 10)

இம்மூன்று களவு வெளிப்பாட்டிற்குரிய கிளவித்தொகை யென்றவாறு.

போக்கறி வுறுத்தல் போக்குடன் படாமை
போக்குடன் படுத்தல் போக்குடன் படுதல்
போக்கல் விலக்கல் புகழ்தல் தேற்றலென்று
யாப்பமை யுடன்போக்கு இருநான்கு வகைத்தே.

(ந அ. வரைவு. 11)

பாங்கி தலைவற்கு உடன்போக் குணர்த்தலும்,
ஆங்கவன் மறுத்தலும் அவளுடன் படுத்தலும்
தலைவன் போக்குடன் படுதலும் பாங்கித்
தலைவிக் குடன்போக் குணர்த்தலும் தலைவி
நாணழி பிரங்கலும் கற்புமேம் பாடு
பூண்முலைப் பாங்கி புகறலும் தலைவி
யொருப்பட் டெழுதலும் விருப்புடைப் பாங்கி
சுரத்தியல் புரைத்துழிச் சொல்லலும் பாங்கி
கையடை கொடுத்தலும் வைகிருள் விடுத்தலும்
அவ்வ்சுரத் துய்த்தலும் அசைவறிந் திருத்தலும்
உவந்தலர் சூட்டி யுண்மகிழ்ந் துரைத்தலும்
கண்டோ ரயிர்த்தலும் காதலின் விலக்கலும்
தன்பதி யணிமை சாற்றலுந் தலைவன்
தன்பதி யடைந்தமை தலைவிக் குணர்த்தலும்
என்றிவை யொன்பதிற் றிருவகைக் கிளவியும்
ஒன்றிய அன்பின் உடன்போக்கு விரியே.

(ந. அ வரைவு 12)

### பாங்கி தலைவற்கு உடன்போக்குணர்த்தல்

பாங்கி தலைவற்கு உடன்போக்குணர்த்தல்-என்பது, களவியல் ஒழிந்திடத்து அறத்தொடு நிற்கும் பாங்கி தலைவனைப் பார்த்துக் கருத்து வந்து ஐங்குரவோர்களும் மற்றுள்ள தமர்களும் முன்னை நீ மணவணி

யிடக் குழைதாழ்ந்து மார்பினை வருடிய தலைமகண் முலைவிலைக்கு இன்னமும் மேரு முதலாகிய சம்புத்தீவினைக் கொடுத்தாலும் கொள்வதில்லை. கொண்டாலும் வரைவு முடுகி நடப்பரிது. ஆகலான், மெய் வருந்தாமல் என்னுடைய மாதானவளுடன்போய் நும்முடைய நகர் புக்குவீரெனப் பாங்கி உடன்போக்குணர்த்தா நிற்றல்.

(316) கைவருஞ் சூலர்குற் றாலர்வெற் பிற்கருத் தாற்குரவர்
ஐவரு மற்றெம ருந்தலை வாநின் னணிமருமந்
[1]தைவருங் கொங்கை விலைக்கேபொன் மேருத்தந் தாலுங்
[கொள்ளார்
மெய்வருந் தாமலென் மாதுடன் போய்ப்புகு வீர்நகர்க்கே.

முலைவிலைக் குலகம் முழுதளித் தாலும்
விலையல வுடன்போய் மீள்கெனச் செப்பல்

**தலைவனுடன் போக்கு மறுத்தல்.**

தலைவனுடன் போக்கு மறுத்தல்—என்பது, குறுகக் காய்ந்த பாலில் தெவிட்டாதபடிக்குச் சற்று உஷ்ணமிருக்கும்போதே அதில் அடிசிலைத் தோய்த்து அருத்துவிக்க அந்தச்சூடு பொறாது ஆறும் படிக்கு இதழ்குவித்து ஊதி ஆற்றிய மென்மைத்தன்மை யுடையாள். அனேகங் காலத்து வெப்பெல்லாந்தங்கிய பாலை நிலத்தழற்காட்டில் நடக்குந் திறனுள்ளவோ? இளந்தளிர் போன்ற சிற்றடிகள் எனச் சொல்லித் தலைமகன் உடன்போக்கு மறுத்தல்.

(317) [2]பூச்சூட்டுப் புட்கொடி யார்தந்தை நன்னகர்ப் [3]போதரிசைப்
பாச்சூட்டும் பாதர் வரையிடத் தேயடு பாலிலன்னந்
தோய்ச்சூட்டுஞ் சூட்டுக் கிதழ்கூட்டு மான்றெல்லைப் பாலைநிலத்
தீச்சூட்டுக் காற்றுங்கொல் லோதளி ரேய்வன சீறடியே.

அடுபா லயிலாட் சுடுபா லையின்வாய்
விடுமா றுரைத்தல் விடுகீ யென்றல்.

**பாங்கி தலைமகனை யுடன்படுத்தல்.**

பாங்கி தலைமகனை யுடன்படுத்தல்—என்பது, அழல் வளர்க்குங் கையினுல் அந்தணர் போற்றிய திருமேனியுடைய குற்றாலநாயகர் அழற்

---

1 தைவரும்-தடவும். 2 பூச்சூட்டுப் புட்கொடியார்-பூப்போன்ற உச்சிச்சூட்டை யுடைய சேவற்கொடியோனுன முருகன். 3 போதர் இசைப்பா - ஞானசம்பந்தர் பாடல்.

கண்ணால் எரிந்துபோய்ப் பின்பு உருவம் அருவமாகிய கொடியோன் சரங்களாற் கொளுத்திய காமாக்கினியாற் புண்பட்டு அழுதிரங்கி உயிர் வாடியிருப்பது நன்றன்று. இதையொழிய நீவிர் இருவீரும் நும்முடைய திருநகர்ச்சென்று புகுந்தகாலத்து எழுநாவால் அரிக்கும் தழல்வடிவாகிய பாலைநிலம் தொடர்ந்துவந்து சுடுவதில்லை எனத் தோழி தலைவனைப் போக்குடன் படுத்தாநிற்றல்.

(318) மண்ணழற் கையினர் போற்றுங்குற் றால வரதர்நெற்றிக்
கண்ணழற் பட்டுவெந் தோன்சரத் தாற்கடுங் காமவெந்தீப்
புண்ணழச் செய்துயிர் வாடல்நன் றேநகர் போய்ப்புகுந்தால்
உண்ணழற் பாலை தொடர்ந்து சுடாதண்ணல் ஒள்வளைக்கே.

சரத்தழற் கொடிதினுந் தையலுக் குடன்போக்
கரத்தழற் கொடிதல துணிந்து செல்கென்றல்.

### தலைவன் போக்குடன் படுதல்.

தலைவன் போக்குடன் படுதல்—என்பது, தலைமகள் படுந் துன்பம் முன்செய்த தீவினையென்று நீ நினைத்திரக்கமுற்று மிகவும் கொடிய பாலைநிலத்தின்வழியிடைக் கொண்டு செல்வதாகச் சொன்னாய் அப்படியே அவள் என்னுடன் அந்த நிலத்தின்கண் வரின் அது பேய்க்கள மென்னும் பயமில்லை. அத்துடனே நின்றருடிய குற்றால நாயகர், அவளை யெனக்குத் துணைநலமாகத் துணைச்செய்வாரெனத் தலைமகன் போக்குடன் படுதல்.

(319) நீகொடும் பாவமின் னாளின்ன லென்று நினைத்திரங்கி
மாகொடும் பாலை வழியே கொண்டேகவும் வாழ்த்தினைவெம்
பாகொடுந் தேனெனு மென்மொழி நன்னகர் பற்றிவந்தாற்
[1]சோகொடும் பண்டுநின் றருடுங்குற் றாலர் துணைச்செய்வரே.

நொந்தழை பாங்கி நுவல்வன தலைவன்
புந்தியி னுணர்ந்து போக்குடன் படுதல்.

### பாங்கி தலைவிக்கு உடன் போக்குணர்த்தல்.

பாங்கி தலைவிக்கு உடன் போக்குணர்த்தல் — என்பது, நினது இன்பப் பெருக்கின் மூழ்கி எழாநின்ற தலைமகன், யான், உடன்போய் மணந்து வருவாயென்னுமிடத்து உங்கள் ஐங்குரவோர்

1 சோகு-பிசாசு.

முதலிய தமர்களும் நமது தலைவியை யில்லாத பொன்னூஞ்சல் மீது அமளியையும் தோழியருடன் விளையாட நடந்து செல்லும் மயிற்சாயலை யுங் காணாராகில் உயிர்வாழ்வாரோவென இரங்கலுற்றுரைத்தார். ஆதலால், உடன்போய் அக்கணமே மீளாநிற்பரெனப் பாங்கி தலைவிக்கு உடன்போக்குணர்த்தாநிற்றல்.

(320) தோய லுறுமன்பர் ஐங்குர வோரும்பைந் தோரணந்தாழ்
வாய லுறுந்திருக் குற்றாலர் வெற்பினம் மாதையில்லாப்
பாயலுங் கண்டு விளையாடச் செல்லும்பைந் தோகைமயிற்
சாயலுங் கண்டில ரேலுய்வ ரோவென்று சாற்றினரே.

உடன்போக் குரைத்தவ நள்ள மறிந்த
திடன்போய்ப் பாங்கி சேயிழைக் குரைத்தல்.

## நாணழி பிரங்கல்.

நாணழி பிரங்கல் — என்பது, பூமியின்கண் என்னைப் பெண்ணென்று வேதா உற்பவிப்பித்திடுங் காலத்துத் தலைமகற்குப் பேரன்பினை யடையவும் தமர்கட்கு மாணின்மை செய்யவும் நாணில்லா உடம்பாகப் படைப்பித்தான். இப்படி உடன்போவதாக எனத் தலைமகள் நாணழி பிரங்காநிற்றல்.

(321) சேணின்றி முற்றுந் தவத்தார்க் கருள்திரி கூடர்தம
தாணின்றி யேயிரப் பார்நகர் மன்னர்க்கன் புற்றெமர்க்கு
[1]மாணின்றி மண்ணிற்பெண் ணென்றனை [2]வேதன் [வகுத்திடுங்கால்
நாணின்றி யேபடைத் தானுடன் போதற்கு நாரியரே.

தமர்கொடா முன்னந் தனிச்செல் வதற்கு
[3]நமனிகர் கண்ணி நாணழி பிரங்கல்

## கற்புமேம்பாடு பாங்கி புகறல்.

கற்புமேம்பாடு பாங்கி புகறல் — என்பது, திருக்குற்றாலப் பெருமானாகிய ஒரு பொருளையே உண்டென்று நிச்சயித்துத் தானுற்பவித்த இருமரபினும் யான் எனது என்பதாயுள்ள பெரிய பாசத்தை அறுத்தவரே அவனது திருவடியின்பத்தை யடைந்தவர். அதுபோலும், நீ வந்து சென்மிக்கத்தக்கதாய்ச் சிறப்புற்ற குடியை

1 மாண்—மாட்சிமை 2 வேதன்—பிரமன். 3 நமன்—யமன்.

மிகந்து தலைவனையே ஒரு பொருளெனும் பற்றுக்கோடாகச் சென்றா யானால் உன்னுடைய கற்புநெறியின்பத்துக்கு ஒப்பார் யார்? எனப் பாங்கி அறிவுறுத்தாநிற்றல்.

(322) பிறந்த குடிப்பெரும் பற்றறுகுற் றாலப் பிரானைநம்பித்
துறந்தவ ரின்புறற் றிடும்பெரி யோருருத் தோன்றவும்நீ
சிறந்த குடிக்கண்விட் டண்ணலை யேபற்றிச் சென்றனையால்
அறந்தகுங் கற்பு நிறைக்கே யுனையொப் பவரெவரே.

நாண்முதல் நான்கும் நனிதுயர் கற்பின்
மாணிழைக் கென்னும் வலிதுறுத் தியது.

**தலைவி ஒருப்பட்டெழுதல்.**

தலைவி ஒருப்பட்டெழுதல் — என்பது, என்னுடன் பிறந்த நாணனது கற்புக்கு எதிர்நிற்க மாட்டாமல் காதணி முதலிய கலன் வகைகளும் பூண்டு பொறுத்தற்கில்லாது, அதனிடை வந்த மன்மதன் கலகத்துக்குப் பறிகொடுத்துத் தோற்றுப் பிறந்திடம் பெயர்ந்து கற்பொடு வாழும்வண்ணம் ஒருகோமகன் பின்னே செல்லாநின்றேன். இது நிற்க, கிள்ளை போல்வதோர் குழல்வாய் மொழிக்குக் குற்றால நாயகர் அன்புற்றிருப்பதை விசாரித்துக்கொண்டு நான் வளர்த்த கிள்ளைப்பிள்ளைக்கு என்னைப்போல் அன்புவைத்துக் காப்பாயாகெனத் தோழிக்குச் சொல்லிக்கொண்டு தலைமகள் உடன்போக்குக் குடன்படா நிற்றல்.

(323) வள்ளைக் குழைப்பணி யும்பல பூணும் மதன்பறித்த
கொள்ளைக்குத் தோற்றகம் விட்டோ ரிறைவர்பின்
[கொண்டெழுந்தேன்
கிள்ளைக் குழன்மொழிக் கன்பரன் உற்றதுங் கேளென்கிள்ளைப்
பிள்ளைக்கு நீயன்பு வைத்தருள் வாய்கையிற் பெய்வளையே.

கற்பினைக் கருதித்துக் கதிர்வே லவன்பின்
பொற்புடைத் தலைவி போக்குத் துணிதல்.

**விருப்புடைப் பாங்கி சுரத்தியல் புரைத்தல்.**

விருப்புடைப் பாங்கி சுரத்தியல் புரைத்தல் — என்பது, அங்ஙனம் போக்குத்துணிந்த தலைமகளைப்பார்த்து நினது மலரடிகளானவை பஞ்சினும் மெல்லிது; பாலை நிலமானால் வெவ்விய நெருப்புக்காடு;

அத்தலத்துக் கானலானுலோ பார்த்தகண் பூத்துப்போகும். அல்லது விடங்கள் பொருந்திய பகுவாய் அரவங்களானுலோ கருக்களை யணைத்துக்கொண்டு அடைகாத்துக்கிடக்கும். இதனிடைச் செல்லுங் காற் [1]கண்விழிப்புங் கால் நினைவுமாக வழியுள் விடர்கட்கொதுங்கிச் செல்வாயாகெனப் பாங்கி செல்லா முன்னமே சுரத்தியல்பு கூறு நிற்றல்

(324) எண்பூத் தரித்தரி போற்றுங்குற் றலவெற் பேந்திழைநின்
றண்பூப் பதம்பஞ்சு பாலைவெந் தீத்தழற் கானலினுற்
கண்பூத்துப் போகும் [2]கடுவா யரவடை காத்துறையுந்
திண்பூப் பிளந்த [3]கமர்பார்த்துப் பார்த்துச்செல் வாய்மெல்லவே.

செல்லா முனமே செல்சுரத் தியல்பு
நல்லாட் கிதனை நாடி யுரைத்தல்

## சுரத்தியல் புரைத்துழித் தலைவி சொல்லல்.

சுரத்தியல் புரைத்துழித் தலைவி சொல்லல்-என்பது, செவிலித் தாயானவள் இற்செறிப் புறுத்தற்கும், அயலுள்ளார் சொல்லும் பழிப்புரைத் தீக்கும் சிலநாள் வாடாதிருந்தேன். அத்திறம் எனக்கு உண்டு. இனிமேல் செல்லும் பாலை நிலத்தைக் காடென்றெண்ண வேண்டுவதில்லை. எனக்கது வளநாடு என்றே யறியெனச் சுரத்தியல் புரைத்த தோழிக்குத் தலைவி தேற்றுரை சொல்லாநிற்றல்.

(325) [4]கோடாய் செறிபுக்கும் ஊர்வா யலர்க்கொடுந் தீயினுக்கும்
வாடா திருந்தன மாதே யினிச்செல் வழியெனக்குக்
காடா வதுவன்று நாடாகு மென்றறி காதிலிட்ட
தோடார்குற் றலர் வரைவாய்ச் சுரத்தியல் சொல்வதென்னே

இருந்திடை யாமுன் னெழுந்திறை யோனை
யடைந்துபிற் சேற லழகெனக் கூறல்.

## பாங்கி கையடை கொடுத்தல்

பாங்கி கையடை கொடுத்தல்-என்பது, ஈரேழுலகும் ஊடுருவிப் பிரளய காலத்தும் அழியாது நிற்கும் கயிலாசகிரியைத் தனது இருபது கைகளினுலும் தாங்கி யெடுத்துக்கொண்டு இராவணன் இசைபயிலா

---

1 கண்விழிப்புங் கால் நினைவுமாக – ஜாக்கிரதையாக என்னும் பொருளில் வரும் வழக்கச்சொல். 2 கடுவாய் அரவு – நஞ்சு பொருந்திய வாயையுடைய பாம்பு. 3 கமர் – வெடிப்பு. 4 கோடாய் - செவிலி.

நின்றகாலத்து அவன் அகங்காரந் தணியும்படி பாதாங்குட்டத்தை ஊன்றுமளவில் அவன் பஞ்சாக்கரத்தை யுச்சரிக்கக் குற்றாலநாயகர் திருவுள்ள மகிழ்ந்து நோக்குதல்போலத் தலைமகள் [1]சுவர்க்கமாகிய மலைகள் தன்னைச்சுமந்து நிற்குந் திறத்தினால் அவள் சிற்றிடையினை ஒருகாலத்து நோக்காநிற்கும். அப்போதும் இப்போதுள்ள அருளு டையீராக வேண்டுமென்று பாங்கி கையடைகொடுத்து இருவரையும் வந்தியாநிற்றல்.

(326) கயிலாச வெற்பை யரக்க னெடுக்கவும் கால்விரலூன்
றையிலாக நொந்தவ னஞ்செழுத் தோர்க்கக்குற் றாலரிவை
செயிலா ரொருவ ரெனநோக்கல் போற்சுமந் தேநிற்பதாற்
றெயிலார் முலையிடை நோக்கினும் ஓரன்பிற் றேன்றல்லில்லை.

இன்றுகைக் கொடுக்க இனிதுநள் வதுபோல்
நின்று இறு வரையும் நினைத்தந னென்றல.

**வைகிருள் விடுத்தல்.**

வைகிருள் விடுத்தல் — என்பது, கடையாமம் இறுதலாயின் நம் தமராகிய ஆயத்தார் கண்விழித்தெழுந்திருப்பார்கள். இதைக் கண்டார்களாகில், நாவினாற் சுட்டு அயற்கு அறிவிப்பார்கள். அப்போது ஏதென வினவித் தாயானவளும் அழுதிரங்கா நிற்பள். அதுவன்றியும் பாலை நிலத்து அக்கினியும் எழுநாவினாலும் பொழுதேறுங் காலத்துச் சுட்டழலா நிற்கும். அதற்குள்ளாக நம்மையாளுந் தெய்வத்தைத் தலை வணங்கி யெழுந்துநின்று விடைவாங்கிக் கொள்வீர் புலர்காலமாதற்கு முன்னமே அன்பர் பின் போதற்கெனப் பாங்கி தலைமகளை விடுத்தொ ழியா நிற்றல்.

(327) குழுமெழு மேகம் படியுங்குற் றாலர்தங் குன்றநமர்
எழுமெழு நாவ தனைற்சுடுங் கானிலி தேதெனத்தாய்
அழுமெழு நாவ தனைற்சுடும் பாலையும் ஆளணங்கைத்
தொழுமெழு மன்பர்பின் சேறற்கு வைகறை தோன்றுமுன்னே.

பிறந்திடம் பிரியாப் பேதையை யிறையோ
டிறந்திடப் பாங்கிவை கிருளிடை விடுத்தல்.

**அவன் சுரத்துய்த்தல்.**

அவன் சுரத்துய்த்தல் - என்பது, இந்நாள்வரைப் பிறந்திடம் பிரியாது நின்னது ஐங்குரவோர்களும் போற்ற அவர்களைப் பொருந்த

---

[1] சுவர்க்கம்—முலை.

வளர்ந்த அருமைக்கு இன்று யான் செல்லா நிற்கும் பாலை நிலத்தின் கண்ணுள்ள பசிய குரவுகளின் நீழலை அடுத்தடுத்துப் பையப் பையச் செல்வாயெனத் தலைமகன் தலைமகளைச் சுரத்திடைச் செலுத்தா நிற்றல்.

(328) பொங்[1]குர காபர ணத்தாகத் தர்ச்செயும் புண்ணியமே
தங்குர வோர்பணி குற்றால நாதர் சயிலத்திலே
ஐங்குர வொன்றி வளர்ந்ததற் கிந்த அருஞ்சுரத்திற்
பைங்குர வொன்றியொன் றிச்செலு வாய்பையப் பையமின்னே.

[2]தரவணை யாயையங் [3]குரவணை விலதாற்
[4]குரவணை வாய்க்களி கூர்ந்துசெல் லென்றல்.

## அசைவறிந் திருத்தல்.

அசைவறிந் திருத்தல் — என்பது, பாலை நிலத்தின்கட் பரல் அழுத்துதற்கிடைந்து தளரா நின்றன சிற்றடிகள். கொங்கைகள் பணைத்து அசைதற்கு இடைந்து இருமருங்கும் நுண்ணிடை சாயா நின்றது. ஆனதால் இந்தப் பசிய பொழிலின் நிழலின் கண்ணே நினது முறுவற்குத் தோற்று நிற்கும் முல்லையைப் பார்த்துக்கொண்டு சற்று இருப்பாயாகெனத் தலைமகன் வருத்தமறிந்து இருத்தாநிற்றல்.

(329) இற்கிடைந் தேகினர்க் கேற்றகுற் றாலர்வெற் பின்சுரவாய்க்
கற்கிடைந் தேதளர் வாளது தாள்கனக் கொங்கையசை
தற்கிடைந் தேயிரு பக்கமு நுண்ணிடை [5]சாயுதுநின்
பற்கிடைந் தேநிற்கு முல்லையைப் பார்த்திரு பைம்பொழிற்கே.

தளர்நடைக் கொள்ளத் தளவினைப் பார்த்திரென்
றிளமயில் தன்னை இன்னிழ லிருத்தல்.

## உவந்தலர் சூட்டி யுண்மகிழ்ந் துரைத்தல்.

உவந்தலர் சூட்டி யுண்மகிழ்ந் துரைத்தல் – என்பது, அருளுருவாகிய குழல்வாய் மொழிபாகரென்னும் திரிகூடத்துப் பெருமானார் முழுநோக்கமாகவே கருணைசெய்தருளியதனால், வறிதாகிய கானற் பாலை அழகிய பாலையாக அதனைக் கடந்துசென்று தலைமகள் தங்க திருப்படிக்கு நறுவிய மலரை யெடுத்து, மகரந்தங்களாற் சயித்திய வுபசாரத்தைச் செய்யக் கருகிய குழலின் முடிமிசைப் புனையப் பெற்றேன் எனத் தலைமகன் மகிழாநிற்றல்.

---

1 உரகாபரணத்தாகத்தர்—பாம்பாபரணம் அணிந்த மார்பை உடையவர். 2, 3, 4. குரவு-மணம், பெரியோர், ஓர்மரம். 5 சாயுது—சாய்கின்றது என்பதன் மரூஉ.

(330) [1]பானலந் தன்னினு மிக்க குழன்மொழிப் பாவையெனும்
மானலந் தோய்திரி கூடர் கருணையைத் தாரகனுற்
கானலம் பாலை கடந்தே நறுமலர் கார்க்குழலிற்
றேனலந் தங்கப் புனைந்தேன்மின் னார்தகை தீரவுமே.

அல்லியம் பூவை யணியிழைக் கணிந்து
முல்லையிற் றலைவன் முகமலர்ந் திருத்தல்.

### கண்டோரயிர்த்தல்.

கண்டோரயிர்த்தல் — என்பது, இவளோ தெய்வமகள்; இவருமோ கடவுளரென்று யாம் எண்ணியிருந்தோம். இப்பால் அவள் கூந்தலின் வேங்கை மலர் வாடவும் அதனைக் கழித்து முல்லைமலர் சூடவும் கண்டோம். அதனால் இவ் வேலுடையார்க்குக் குற்றால நாயகர் நன்னகரும் அத்தலைமகட்கு அவருடைய திரிகூட வரையுமாகக் காணப்பட்டதெனக் கண்டோர் மதியா நிற்றல்.

(331) இவளோதெய் வப்பெண் ணிவரும்[2]புத் தேளென் றிருந்தனன்
அவ[3]ளோதி வேங்கை மலர்வாட முல்லை யணிந்ததனால் [யான்
துவளாத வேலர்க்கு நன்னகர் மாதுக்குத் தாய்குழைந்தே
தவளாகச் சங்கணி குற்றாலர் வெற்பு மதாய்க்கண்டதே.

இவளிவர் கடவுளென் றெண்ணிக் கண்டோர்
- அவளிவர் இந்நிலத் தாரென வறிதல்.

### கண்டோர் காதலின் விலக்கல்.

கண்டோர் காதலின் விலக்கல் - என்பது, நூலினு நுண்ணிய [4]நுசுப்புக்குக் கனத்துப் பாரித்த கொங்கையைப் பெற்றவள் சிற்றடிகட்குக் கொப்புளமும் மெல்லிய மேனிக்கு வேர்வும் உற்று நொந்தனள். ஆதலால் இன்றைக்கு எம்மூரின் கட்டங்கி நும்மூர்க்கு நாளைச் செல்வீராகெனக் கண்டோர் அன்பினால் விலக்கா நிற்றல்.

(332) காலுக்குக் கொப்புள மேனுக்கு வேர்வை கனத்தகொங்கை
நாலுக்கு நுண்ணிடை பெற்றவ ளுற்றுள நொந்தனள்குற்
றாலுக்குண் மேவிய நம்பர னட்டணி நன்னகர்நின்
பாலுக்கெம் மூர்தங்கி நாளைச்செல் வீர்நெடும் பார்மன்னரே.

அன்பாற் கண்டவர் அவர்தளர் வறிந்தின்
றென்பால் வைகிமற் றேகுமின் னென்றது.

1 பானல்-கருங்குவளை. 2 புத்தேள்-தெய்வம். 3 ஓதி-கூந்தல். 4 நுசுப்பு-இடை.

### கண்டோர் தன்பதியணிமை சாற்றல்.

கண்டோர் தன்பதியணிமை சாற்றல் - என்பது, திரிபதார்த்த வுண்மை முழுவதும் அடங்கிய பஞ்சாக்கர சொரூபராகிய குற்றால நாயகர் திருநகர் என்னும் நன்னகர் சேய்த்தன்று. உற்பல வாவிகளும் செந்நெல் வளங்களும் கண்டு உள்ளம் மகிழ்ச்சி கூரும்படி, நுடங்கிடையாளாதலால் மெல்லெனக் கொண்டு செல்வாயாகவென்று கண்டோர் நகர் அணிமை கூறுநிற்றல்.

(333) [1]கடங்[2]கும்[3]பைஞ் [4]சார்கவுள் சாய்மா வுரித்த கடவுளுண்மை
யடங்கும்[5]பைஞ் சாக்கரத் தார்தன் னகரணித் தேகுவளைக்
[6]கிடங்கும்பைஞ் [7]சாலியும் கண்டே யுளம கிழ[8]நுசுப்பு
நுடங்கும்பைஞ் சார்பதத் தாளுடன் போமனை நோக்கமுற்றே.

[9]கடந்தனிற் கண்டோர் கடிநக ரணித்து
நுடங்கிடை யுடனே காதுசெல் லென்றல்.

### தலைவன் தன்பதிக் கடைந்தமை தலைவிக் குணர்த்தல்.

தலைவன் தன்பதிக் கடைந்தமை தலைவிக் குணர்த்தல் — என்பது, எத்தலத் துள்ளார்களும் முத்தி சாதனத்துக்கு இவ்விடத்திலே வதிய வேண்டுமென்று வருவார்கள். எம்பெருமானுங் குழல்வாய் மொழி நாச்சியாரும் குற்றால நீழலின் கண்ணே சதா காலமும் வீற்றிருப்பார்கள். ஒரு நாழிகை தலவாசம் பண்ணின பேர்க்கும் இகபர சாதகம் இரண்டுமுண்டாம். இந்த மான்மியத்தினாலே நம்முடைய சுற்றத்தொடு நாமுமிருப்பது இந்த நகரென்று தலைவிக்கு உண்மையாகத் தலைமகன் கூறுநிற்றல்.

(334) எங்கிருந் தோர்களும் இன்புற் றிடவரு மெம்பெருமா
னுங்கிரி மாதுங்குற் றாலத்தில் வீற்றிருக் கும்[10]கடிகை
தங்கின பேர்க்கும் இகபரம் நல்குந் தலமிதென்றே
நங்கிளை ஞோரொடு நாமு மிருப்பதிந் நன்னகரே.

[11]அம்பலை கண்ணிக் கயில்வேற் காளை
தம்பதி யடைந்தமை தகவுட னுரைத்தல்.

---

1 கடம்-மதப்பெருக்கு 2 கும்பம்-மத்தகம். 3 எதுகை நயம் நோக்கி ஐ சாரியை பெற்றது. 4 சார்-பக்கம் 5 பஞ்சாக்கரம்-பைஞ்சாக்கரம் என வந்தது. இதில் திரிபணி வந்தமை காண்க. 6 கிடங்கு-வாவி 7 சாலி-நெல் 8 நுசுப்பு-இடை. 9 கடம்-காடு. 10 கடிகை-நாழிகை. 11 அம்பு-அலைகண்ணி.

இவற்றுள், பாங்கி தலைவற்கு உடன்போக்கு உணர்த்தலும் தலைவிக் குடன்போக்குணர்த்தலுமாகிய விரண்டும் போக்கறிவுறுத் தற்கும், தலைமகள் மறுத்தலும் தலைவி நாணழி பிரங்கலுமாகிய விரண்டும் போக்குடன் படாமைக்கும், பாங்கி தலைவனை யுடன்படுத்த லும் தலைவிக்குக் கற்பு மேம்பாடு கூறலுமாகிய இரண்டும் போக்குடன் படுத்தற்கும், தலைவி யொருப்பட்டெழுதலும் பாங்கி கையடை கொடுத்தலும் சுரத்தியல் வுரைத்தலும் உரைத்துழிச் சொல்லலுமா கிய மூன்றும் போக்குடன் படுதற்கும், வைகிருள் விடுத்தலும் தலை மகன் தலைமகளைச் சுரத்துய்த்தலுமாகிய விரண்டும் போக்கற்கும் தலை வன் தலைவியை அசைவறிந்து இருத்தலும் கண்டோர் காதலின் விலக்கலுமாகிய விரண்டும் விலக்கற்கும், தலைவன் தலைவியை உவந்து அலர் சூட்டி உள்மகிழ்ந் துரைத்தலும் கண்டோர் அயிர்த்தலுமாகிய விரண்டும் புகழ்தற்கும், கண்டோர் தன்பதி யணிமை சாற்றலும் தலைவன் தன்பதி யடைந்தமை தலைவிக் குணர்த்தலுமாகிய விரண்டும் தேற்றற்கும் உரியவாமெனக் கொள்க. ஆகச் செய்யுள் (334)
உடன்போக்கு முடிந்தது.

## கற்பொடு புணர்ந்த கௌவை

அஃதாவது,

*செவிலி புலம்பல் நற்றாய் புலம்பல்*
*கவர்மனை மருட்சி கண்டோர் இரக்கம்*
*செவிலிபின் றேடிச் சேறலென் றைந்து*
*கற்பொடு புணர்ந்த கௌவையை வகைத்தே.*

(ந அ வரைவு. 13)

செவிலி புலம்பலின் விரி—

*வினவிய பாங்கியின் உணர்ந்த காலை*
*யினைய லென்போர்க் கெதிரழிந்து மொழிதலும்*
*தன்னறி வின்மை தன்னொடு ரைத்தலும்*
*தெய்வம் வாழ்த்தலு மிவ்வொரு மூன்றும்*
*இலங்கிழைச் செவிலி புலம்புதற் குரிய*

(ந அ வரைவு. 14)

### செவிலி பாங்கியை வினுதல்.

செவிலி பாங்கியை வினுதல் — என்பது, நிறைய வேண்டுங் கலைகள் சில ஒழிந்த பாலசந்திரனைப் போலும் நுதலையுடைய பாங் கியே! உன்னை நீங்காது படசித்திரம் போன்ற தலைமகள் கையினது

கிளிப்பிள்ளை தேன் போன்ற மொழிப்பிள்ளை எங்கே யெங்கே என்று வினவுற்றுப் பஞ்சரத்துச் சிறையடித்துக் கொண்டு பறக்கமாட்டாது கிடக்கலுற்றதெனச் செவிலி வினவாநிற்றல்.

(335) [1]வழிப்பிள்ளைக் கேபல வல்காக்குற் றூலர் வரையிடத்தே
யொழிப்பிள்ளை யிந்து துகலா யுனையொரு நாட்பிரியாக்
[2]கிழிப்பிள்ளை யங்கைக் கிளிப்பிள்ளை கூட்டிற் கிடக்கலைத்தேன்
மொழிப்பிள்ளை யெங்கேயெங் கேயென்று சொல்லுக
மொய்குழலே.

கிளியது வினவக் கேட்ட செவிலி
அரியொடும் பாங்கி யவள்முன் வினுதல்.

**பாங்கி செவிலிக் குணர்த்தல்.**

பாங்கி செவிலிக் குணர்த்தல் — என்பது, நீ விளையாடி வரச் சொல்ல, யாங்கள் புன்னையம் பொழிலின் கண்ணே விளையாடச்சென்றோம் அவ்விடத்து ஒரு தலைமகன் வர, அவரிடத்துப் பொருந்திய தோர் நல்ல மணத்தை அழகுடைய கொடிபோன்றவள் அப்போதே நின்று உயிர்த்தறிந்து இவ்விடத்துள்ள நோக்கமொழிந்தாள். அது நானறிவேன். அப்பால் உடன்போயினளென்று நொந்ததனால் ஆவதேது? இதுவெல்லாங் குற்றாலநாயகர் திருவருளென்று அறியாத பேதைமை. விதியெண்ணம் தப்புவதில்லை யெனப் பாங்கி உடன்போக் குணர்த்தாநிற்றல்.

(336) புன்னையங் கா[3]வண் டலுமறம் தன்பர் புணர்மணத்தின்
நன்னயங் காமர்க் கொடியறிந் தீங்குள நாட்டமற்றாள்
அன்னை[4]யங் காந்தினி நொந்தாவ தென்னகுற் றாலர்செயல்
தன்னையங் காய்ந்தறி யாப்பேதை மைதவ றுவிதியே.

தாயவள் வினவத் தானறி யாதுடன்
போயது போலப் போக்குணர் வித்தல்.

**பாங்கியினுணர்ந்த செவிலி தேற்றுவார்க்கு எதிரழிந்து மொழிதல்.**

பாங்கியினுணர்ந்த செவிலி தேற்றுவார்க்கு எதிரழிந்து மொழிதல் — என்பது, வினவிய பாங்கியின் உணர்ந்து தலைமகள் கற்புமேம்பாட்டினால் உடன் போதலைக் கேட்டு யாம் இதற்கு இரங்கும்

1 வழிப்பிள்ளை — இளையபிள்ளையாகிய முருகன். 2 கிழிப்பிள்ளை — படசித்திரம் போன்ற பெண். 3 வண்டல் — மகளிர் விளையாட்டு. 4 அங்காந்து — வாய் திறந்து.

வரை இணையதுகேட்டுத் தேற்ற வருவார்க்கு யாது சொல்லலாம். அதற்கிடமில்லை. "பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந் திண்மையுண்டாகப் பெறின்" என்பதினானும், "கொண்டானிற் றுன்னிய கேளிர் பிறரில்லை" என்பதினானும் இஃதறந்தானே. இதுகிடக்க. அறியாப் பருவத்து ஒரு தலைமகனை விரும்பியும் என்னை வெறுத்துஞ் செய்த இந்தக் கொடுமையினால் அவளை எனது கண்நிறையக் காணுந் துணையும் என்கண்ணீரும் ஏக்கமும் நோக்கமும், வாட்டமும், மாறவுஞ் செய்யாது ஆறவுஞ் செய்யாதெனச் செவிலி யாற்றாமைகூறல்.

(337) தேறச்செய் தார்க்கெய்துங் குற்றலர் வெற்பினிற் றேறமொழி
கூறச்செய் தார்க்கென்ன கூறுக விந்தக் கொடுமையினால்
ஆறச்செய் யாதிரு கண்ணாரக் காணு மளவுங்கண்ணீர்
மாறச்செய் யாதவ ளேக்கமு மேக்கமும் வாட்டமுமே.

கற்புடன் போய காதலிக் கிரங்கி
யற்புறுஞ் செவிலி யயர்ந்தெகி ழ்தல்.

**தன்னறிவின்மைத்தன்மை நொந்துரைத்தல்.**

தன்னறிவின்மைத்தன்மை நொந்துரைத்தல் — என்பது யான் போற்றி வளர்க்கும் பூவைக்கு இனிய சொற்களைப் பயிற்றிக் கொடுக்கவும் எடுத்தணைத்து ஆதரிக்குந் தாய்மடிமீது வந்திருக்கவும் இவ்விடத்து என்னைப்போல யாருண்டென்று நம்மகள் சென்னாற் சொன்னதைப் பொருட்படுத்தறியாது போனேனேயெனச் செவிலி தன்னறிவின்மையை நினைந்து இரங்காநிற்றல்.

(338) எனைப்போலென் பூவைக்குச் சொற்பகர் வாரும் எடுத்தணைக்கும்
அனைக்கே மடிமிசை வந்திருப் பாருமிங் காரெனவே
நினைப்பார் நினைப்பு மறப்புந் தவிர்த்த நிருமலனார்
சுனைக்கா வியந்திரி கூடத்தள் சொன்னது தோயந்திலவே.

போதற் றுரைத்த பொருட் புகலறியாக்
காதற் செவிலி கவலா நிற்றல்.

**தெய்வம் வாழ்த்தல்.**

தெய்வம் வாழ்த்தல் — என்பது, முன்கடைப் புறத்துப் புன்னைகமும் அசோகும் ஒன்றாய்த் துன்றிய நீழலின் கண்ணுஞ் சென்று விளையாடப் பொறாதே பொன்னூஞ்சல் அமளியில்வைத்து ஆட்டச்

செய்யும் என்னுடைய மகளை ஒரு தலைமகன் பின்னே அழற்கடத்துச் செல்ல வைத்தனையே இன்னும் போயதுபோல வரவுங்கொண்டருளு வாய் கடம்பமாலையையுடைய தெய்வமே! யெனச் செவிலி வாழ்த்தா நிற்றல்.

339) வீட்டுக்கு முன்கடைப் புன்னை யசோகின் மிகுந்துவிளை
யாட்டுக்குச் செல்லப் பொரு தூஞ்சல் மெத்தைவைத்
தாட்டுமின்றிக்
காட்டுக்குள் மன்னர்பின் செல்லவைத் தாய்[1]கடம் பாகனிதாழ்
[2]கோட்டுக் குறும்பல வார்வரைக் கேவரக் கொண்டருளே.

கடம்புகச் செய்த கடம்பா வளித்தெம்
மிடம்புகச் செய்யென் றிலங்கிழை வாழ்த்தல்.

நற்றாய் புலம்பல்.

செவிலி யறத்தொடு நிற்றலிற் கவலையிற்
பாங்கி தன்னொடும் பாங்கியர் தம்மொடும்
அயலார் தம்மொடும் பயிலிடந் தன்னொடும்
தாங்கல ளாகச் சாற்றிய வெல்லாம்
பூங்கொடி நற்றாய் புலம்பற் றுரிய

**செவிலி நற்றாய்க் கறத்தொடுநிற்றல்.**

செவிலி நற்றாய்க் கறத்தொடுநிற்றல் — என்பது, தலைமகன் தீவினையின்றி நல்வினையொடுந் தேடிய பொருளைக் கொணர்ந்தளிக்க நாம் ஒருகாலத்தும் பொருளறியாரைப் போலக் கைக்கொண்டதும் மீண்டு இல்வயிற் செறித்தமையுங் கண்டு மனவருத்தத்தால் தூற்றப் பட்டு உயிர்போகா முன்னமே கற்புநெறியுடனும் உற்றார்க்குதவுவதாய் மனத்தைத் தறுக்காது சென்றாள் நமது தலைமகளெனச் செவிலி நற்றாய்க் கறத்தொடுநிற்றல்.

(340) ஒறுக்கையில் லாதளிக் கும்பொன்னை நாமொரு காலமுமே
வெறுக்கையில் லாதது போலக்கைக் கொண்டது மீண்டிலக்கண்
செறுக்கைகள் செய்தது கண்டடல் வேட்கொல்கிச் செல்வார்
பின்னே
தறுக்கையில் லாதுசென் றாள்நங்குற் றாலர் சயிலமின்னே.

1 கடம்பா-கடம்பமாலையையுடைய முருகன் 2 கோடு-கொம்பு.

கற்பியற் கையினற் பொற்புடைத் தலைவி
யற்பினர் பிற்புக லறத்தொடு கூறல்.

**நற்ருய் தன்னுட் புலம்பல்.**

நற்ருய் தன்னுட் புலம்பல் – என்பது, நேற்றுத் தினமெல்லாம் நின் ஐயர் முற்செல்வேனென்று சென்ருயே. பின்னுஞ் சென்று வந்து என் முன்பும் நின்ருயே. இன்றைத் தினத்துக்கு ஈதோர் நினைவையும் நினைத்தாயே. யாங்களுனைப் பெற்றதற்கு இதனையோ பலனகத் தந்தாய் மகளேயென நற்ருய் தன்னுள்ளே புலம்பாநிற்றல்.

(341) சென்றனை யேநும தய்யர்முன் னேற்றுப்பின் சென்றுவந்து
நின்றனை யேயின்றைக் கித்த நினைவு நினைத்தனையே
உன்றனை யேபெற்ற தற்கே பலனிது வோமகளே
முன்றனை யேயன்றி யொன்றில்குற் ருலர் முகில்வெற்பிலே.

இருந்ததும் போயதும் எண்ணி யெண்ணி
வருந்திய நற்ருய் வாயுட் புலம்பல்.

**நற்ருய் பாங்கி தன்னெடு புலம்பல்.**

நற்ருய் பாங்கி தன்னெடு புலம்பல் – என்பது, பொன்னையும் மணியையும் பிடி பிடியாகப் பிடித்து நம் தமர்களெல்லாங் கூடித் திரண்டு சீரிடும்படி பணத்தை முடித்துக்கொண்டோ அன்னத்தைப் பிடித்து அவட்கூட்டும்போது 'யான் வளர்க்கும் கிளியைப் பிடித்தூட்டு' என்னும் பேதை மகளைத் தலைமகனது கையிற் பிடித்துக் கொடுத்தாய். அவர் சென்றவழி அழலிறைக்கும் பாலை நிலமே எனத் தோழியைப் பார்த்து நற்ருய் புலம்பா நிற்றல்.

(342) [1]மெய்ப்பிடித் தந்தவ ருர்க்கருள் நன்னகர் வேந்தர்வெற்பின்
மொய்ப்பிடித் தேநம ரீக மணமுடித் தோவெள்ளன்னத்
தைப்பிடித் தூட்டிற் கிளிபிடித் தூட்டென்ப தையிறைவர்
கைப்பிடித் துக்கொடுத் தாயணங் கேசுரங் காய்கனலே.

கையடை கொடுத்தகற் பிதனையைப் பார்த்து
நைவுறு நற்ருய் நனிபுலம் பியது.

---

[1] மெய்—உண்மை.

### பாங்கியர் தன்னொடு புலம்பல்.

பாங்கியர் தன்னொடு புலம்பல் – என்பது, வையை அடைக்கும் போது பிட்டு இடுவாட்கு இரங்கிக் கொட்டும் கூடையுமாய் மண்சுமந்த ளவே கைதவன் அடியைக் குற்றால நாயகர் திருமேனியில் வாங்கும் போது சகல தோற்றங்களுக்கும் பட்டு அழுந்தின போல நம்மகள் மெய்வாடும்படி பாலை நிலத்து ஒரன்பர் பின் சென்றது கண்டோ முகம் வாடினீர் எனப் பாங்கியரைப் பார்த்து நற்றாய் வருந்தாநிற்றல்.

(343) ஓங்கி வழுதி யெறிகோல்குற் றாலர் உருவிலந்நாள்
வாங்கி [1]யிருவகைத் தோற்ற மெலாம்பெற்ற வாறெனமான்
ஏங்கிமெய் வாடத் தழற்பாலைக் கன்பர்பின் னேகலுற்றோ
பாங்கிய ரேமுகக் கோட்டமுற் றீரென்ன பாவமிதே.

நீங்கிய மகளை நினைத்தயர் நற்றாய்
பாங்கியர் வாட்டம் பார்த்தழு திரங்கல்.

### அயலார் தம்மொடு புலம்பல்.

அயலார் தம்மொடு புலம்பல் – என்பது, பேதைப் பருவத்துப் பொறிவெய்திக் கற்பது கடனெனக் களிறு கடிந்து உய்விக்கும் காதலன் ஒருவன் பின் எங்கள் குடிப்பிறந்தாள் உடன்போக, யாங்கள் வருத்தப் படுமாறே. எங்களைப்போலே குடியிருக்கிறபேரே! உங்கள் இற்பிறந்த பெண்கட்கும் இவ்வாறு உள்ளவோ? சொல்வீரென நற்றாயானவள் அயலாரொடு புலம்பாநிற்றல்.

(344) திங்கட் கினிய சடாடவி யார்பசுந் தேகநலந்
தங்கட் கினிய குழன்மொழி பாகன் றடவரைமேல்
எங்கட் கினியபெண் மாதால் வருந்துமிவ் வாறயலீர்
உங்கட் கினியபெண் மாதாலும் துன்பமுண் டோசொல்கவே.

எங்கள் மகளா லிடைவபோ லயலீர்
நுங்கள் பெண்களால் நோதலுண் டோவெனல்.

### பயிலிடந் தன்னொடு புலம்பல்.

பயிலிடந் தன்னொடு புலம்பல் – என்பது, எனது சிறியாள் கையினாலெடுத்துப் போற்றப் படா நின்ற பொன்னம்பாவாய்! பந்தா டல் செய்தற்கிடமாய் நிழலைப் பரப்பாநிற்கும் வாசந்திகாள்! பன்னளுஞ்

1 இருவகைத்தோற்றம் – உயர்திணை அஃறிணைப்பொருள்கள்.

சொற்பழக்குவிக்கும் பூவைகாள்! முன்போல் உங்களிடத்துப் பயிலும் படிக்கு வருவாளோ? தலைமகனது [1]அந்தவாரம்போய்ப் புகுந்த தலைமகளென நற்றாய் கேளாதனவற்றைக் கேட்பவாகப் புலம்பாநிற்றல்.

(345) [2]நாவாய்பொய் [3]வாரி நடத்தாத பேர்க்கருள் நல்கநல்ல
தேவாய் வருந்திருக் குற்றாலர் வெற்பின் சிறியவள்கைப்
பாவாய்பசுங் காடல் கிழல்[4]வாசந் தீசொற் பயிற்றிவளர்
பூவாய் வருகுவ ளோமன்னர் கோயில் புகுந்தவளே.

அயில்வலத் தவன்இல் லடைந்தவள் வரவு
பயில்இடத் தொடுதாய் பரிந்தது கேட்டது.

நற்றாய் புலம்பல் முடிந்தது.

## மனைமருட்சி.

நிமித்தம் போற்றலும் சுரந்தணி வித்தலும்
தன்மகண் மென்மைத் தன்மைக் கிரங்கலும்
இளமைத் தன்மைக் குளமெலிக் திரங்கலும்
அச்சத் தன்மைக் கச்சமுற் றிரங்கலும்
எனவிவை யைந்தும் மனைமருட்சிக் குரிய.

(ந. அ வரைவு 16)

### நிமித்தம் போற்றல்.

நிமித்தம் போற்றல் – என்பது, கூடைக்குத் தோற்குங் காலந் தோற்று வெல்லுங் காலம் அறிந்து வெல்லப்படா நின்ற கொடியினமே! யானும் என்மகளைத் தோற்குங் காலந் தோற்று அஃதறிந்தேன். இனி அவள் என்னிடத்து வருங்காலம் அறிந்து ஒரு நிமித்தஞ் சொல்லுவாய். போய திசையைப் பார்த்து நீ யழைத்தால் அவளும் ஒரு கொடியானதால் உன் அழைப்புக்கு வருகுவளே யென நற்றாய் மருளுற்று உரையாநிற்றல்.

(346) [5]இடங்கரை யீர்த்தசக் ராயுதர் போற்று மிறைவர்திரு
நடங்[6]கரை யின்றியே யாடுங்குற் றாலர் நளிவரைமேற்
[7]குடங்கரை வெல்[8]கரும் பிள்ளாய் பசும்பொற் கொடிவரவு
திடங்கரை வாய்விரை வாய்அவர் போன திசையெதிர்ந்தே.

---

1 அந்தவாரம் என்பது அந்தப்புரம் என்று பொருள்படலாம். 2 நாவாய்–நாவையுடைய வாய், தோணி. 3 வாரி–மொண்டு, சமுத்திரம். 4 வாசந்தி–குருக்கத்திமரம். 5 இடங்கர்–முதலை. 6 கரையின்றி–எல்லையில்லாமல் 7 குடங்கர்–கோட்டான், ஆந்தை. 8 கரும்பிள்ளாய்–கரிய நிறத்தையுடைய காக்கைப்பிள்ளாய்.

கொடியிடை வரவு கொடியிடைக் கேட்டுப்
படியிடை நற்றாய் பரிவான் மருண்டது.

**சுரந்தணிவித்தல்.**

சுரந்தணிவித்தல் — என்பது, யாவையுங் கூர்த்துணர்கின்ற தலைமகன் பின் சுரம்போகலுற்றவள் பின்னும் வருங்காலத்துக் கொடுங்கிரணத்தாற் கோட்டமுறப் பாராது கருணைப் பார்வையே பார்ப்பாயாக. நீ குற்றால நாயகர் திரிகூடவரைக்கு மேல் ஈழ்த்துப்போம் இரதத்தின் ஏழு புரவியினது கால்கள் அவ்விடத்துயர்ந்த பொழிலின்கட் பூங்கொத்துகளை இடறி உடைந்தெழுந் தாதுவாகிய தூள்களை என் சிரத்தின் மேற்கொள்ளா நிற்பேனென வணங்கி நற்றாயானவள் சுடரொடு இரவாநிற்றல்.

(347) கூர்க்கின்ற மன்னர்பின் பாலைசென் றாள்வரிற் கோட்டமுறப்
பார்க்கின்ற தின்றியருள் வாய்குற் றாலர் பனிவரைமேல்
[1]ஈர்க்கின்ற தேர்ப்பரிக் கால்சோலைப் பூங்கொத் திடறியெழுந்
தார்க்கின்ற தாதெனுந் தூள்சிரத் தேகொள்வன் ஆதவனே.

படர்வழி வரிற்பைங் கொடிக் கழலாது
சுடரினை யிரந்து சுரந்தணி வித்தல்.

**தன்மகண் மென்மைத் தன்மைக் கிரங்கல்.**

தன்மகண் மென்மைத் தன்மைக்கிரங்கல் — என்பது, நெஞ்சின்மேலே நிறீஇக்கொண்டு விளையாடுங்காலத்து அதனிடை மணியணி வகைகள் நெருஞ்சிப்பழம் போன்று தைக்கிறதென்றும் உரத்தன பாரங்கள் வெச்சென்றதென்றும் பொறுக்கமாட்டாமல் தவிசின்கண் விடச்சொல்வாளே. இப்போது உடன்போதற்கு இசைந்து செல்லுஞ் சுரத்தினது அக்கினி ஆலகால விடமொக்குமே அதனுள்ள பரல்களும் [2]கொடிதிறினும் கொடிதே. அங்ஙனம் நடந்தன்றோ நைவாள் மகள் என நற்றாய் மென்மைத் தன்மைக்கிரங்கா நிற்றல்.

(348) நெஞ்சே நிறுத்தி விளையாடும் போது நெருஞ்சிமுட்போ
லுஞ்சேர் மணிவடந் [3]தைக்கு தனங்[4]கொதிக் [5]கோவிடென்பாள்
மஞ்சே பொழிதிருக் குற்றாலர் வெற்பில் வன்பாலையழல்
நஞ்சே பரலுங் கொடிதே நடந்துநை வாள்மகளே.

---

1 ஈர்க்கின்ற-இழுக்கின்ற. 2 கொடிது-பற்றுக்குறடு. 3 தைக்கு—தைக்கிறது என்பதன் மரூஉ. 4 கொதிக்கு-கொதிக்கிறது என்பதன் மரூஉ. 5 ஓ—அழுகைக்குறிப்பு.

*மெத்தெனுந் தன்மையாள் மெலிந்தவள் நடந்தென*
*தத்தம் அநுமகள் தனக்கினைந் திரங்கல்.*

**இளமைத் தன்மைக் குளமெலிந்திரங்கல்.**

இளமைத் தன்மைக் குளமெலிந்திரங்கல் – என்பது, சுனையின் கட்புனல் குடைந்தாடச்சென்று அப்புனலிடைத் தோன்றிய விம்பாகாரத்தைக் கண்டு வெருவந்து எனக் கொப்பாக ஆயிடையிருந்தவள் யாரென்று என்னைக் கேட்டறிய நீராடலை விட்டு மனைக்குவருமே, அந்தப் பேதைமையை என் மனது நினைத்துத் துயருதே. அப்படிப் பட்டவள், ஓர் ஏதிலன் மனைக்கு உடன்போகப் பொருந்திய நினைவு யாதென்று நற்றாய் இரங்காநிற்றல்.

(349) சுனைக்கே புனல்படிந் தாடச்சென் றாங்குருத் தோன்றுமனை
எனைக்கேழுற் றங்கு மிருந்தவர் யாரென் றெனைவினவ
மனைக்கே வெருண்டு வருமான்குற் றாலர் வரையிலதை
[1]நினைக்கே இறைவர் மனைக்கேக வைத்த நினைவதென்னே.

*இன்னணம் புனற்கண் டியம்பிய பேதை*
*இன்னணம் போயதென் னென்றுள மிரங்கல்.*

**அச்சத்தன்மைக் கச்சமுற்றிரங்கல்.**

அச்சத்தன்மைக் கச்சமுற்றிரங்கல் — என்பது, சற்றுப்பராமுகமாய் நிற்குமிடத்து மெத்தென்றழையாது உரப்பி அழைக்கின் நடுக்குற்றிடும் அச்சத்தையுடைய தலைமகள் உடன்போம்பொழுது அவ்விடத்து எயினர்கள் கள்ளுண்ட செருக்கினால் துடிப்பறையை அறையுந்தொறும் அறையுந்தொறும் திடுக்குற்றுத் திடுக்குற்றன்றோ செல்வாள். செல்கின்ற தீச்சுரமும் காளிக்கோட்டமாகிய பேய்க்களமே. என நற்றாய் அவள் அச்சத்தன்மைக்கு அஞ்சி இரங்காநிற்றல்.

(350) நடுக்குற் றிடுஞ்சற் றுரங்கொண்டு பேசின்முன் னுளகன்ற
[2]கடுக்குற் றுறவுண்ட குற்றாலர் வெற்பினிற் கள்வர்கள்ளுண்
டடுக்குப் பறையறை யுந்தோறுந் தோறுமுள் ளஞ்சியஞ்சித்
திடுக்குத் திடுக்கென்று செல்வாள்வெம் பேய்க்களம் தீச்சுரமே.

---

1 நினைக்கே - நினைக்கின்றதே என்பதன் மரூஉ. 2 கடு - நஞ்சு.

உரப்பி யழைக்கிலஞ் சொண்ணுத லெயினர்
கரப்புறு பேய்க்களங் கடக்கரி தென்றல்.

மணைமருட்சி முடிந்தது.

## கண்டோரிரக்கம்.

ஆயமுந் தாயும் அழுங்கக் கண்டோர்
காதலின் இரங்கல் கண்டோர் இரக்கம்.

### கண்டோரிரக்கம்.

கண்டோரிரக்கம் — என்பது, கருப்பாசயத்துச் செனித்த நாண் முதல் முந்நூறு நாளுஞ் சுமந்து இரட்சித்து வருந்திய தாயினது வருத்தம் தெரியாது போயினளோ தலைமகனுடன் போதற்குற்றவ ளாகிய தலைமகள். பாங்கிமாரும் தாயரும், போனவழி பார்த்து 'வருவாளோ வந்து பின்னொரு முத்தத்தைத் தருவாளோ' என்று இரங்கா நிற்கிறார் இஃதென்ன பாவமென்று கண்டோர் பொறையின்றிரங்கா நிற்றல்.

(351) பொருவாள் விழியுமை பங்கர்குற் றலர் பொருப்பிலன்னை
[1]கருவாள் வருத்தந் தெரிந்தில ளோகடந் தேகலுற்றாள்
வருவாள்கொல் லோதன வாராள் முகந்துசெவ் வாயின்முத்தந்
தருவாள்கொல் லோவென நின்றேங்கு தாயமுந் தாயருமே.

ஆயமுந் தாயும் அழுங்கக் கண்டோர்
சேயகன் றவடன் செய்கைக் கிரங்கல்

செவிலி பின்றேடல்—

ஆற்றாத் தாயைத் தேற்றலும் ஆற்றிடை
முக்கோற் பகவரை வினாதலும் மிக்கோர்
ஏதுக் காட்டலும் எயிற்றியொடு புலம்பலும்
தூரொவாடு புலம்பலும் சுவடுகண் டிரங்கலும்
கலந்துடன் வருவோர்க் கண்டுகேட் டலுமவர்
புலம்ப றேற்றலும் புதல்வியைக் காணாது
கவலைகூர் தலுமெனா இவையொன் பானும்
செவிலிபின் தேடிச் சேறற் குரிய.

1 கரு—கருப்பம்.

### செவிலி யாற்றுத் தாயைத் தேற்றல்.

செவிலி யாற்றுத் தாயைத் தேற்றல் — என்பது, நான்மறைக் கடவுளானவன் பிறந்ததும் வளர்ந்ததும் மேற் குடியிருந்ததும் இஃ தெல்லாம் தாமரைப் பொகுட்டொன்றே. இவன் கையினுற் படைத்த பூதலத்தில் நமது பொன்போல்வாளைத் தேடிக் கண்டுவருதல் அரி தன்று. நீ வருந்தாதிருப்பாயாகென நற்றுயைக் கைத்தாய் தேற்று நிற்றல்.

(352) வருந்த லுறுதிரு வேதன் பிறந்து வளர்ந்துகுடி
யிருந்தவெல் லாமொரு பங்கயப் போதிவன் கைவருந்தித்
திருந்த வகுத்த புவியினம் பொன்னினைத் தேடிவிழி
பொருந்தவுங் காண்ப தரிதோகுற் றுலர் பொருப்பணங்கே

*கைத்தா யவளைக் காண்பது கூறிக்*
*கைத்தாய் நற்றய் கருத்தினைத் தேற்றல்.*

### ஆற்றிடை முக்கோற் பகவரை வினுதல்.

ஆற்றிடை முக்கோற் பகவரை வினுதல் — என்பது, அறம் பொருள் இன்பம் மூன்றையும் நீத்து, வீடுணர்வெய்தித் திரிகூடவரை யின் கண்ணே குகை வாசஞ் செய்தற்கு யாத்திரையாக வாரா நின்ற முக்கோற் பகவரே! ஒரு தலைமகன் என்மகளொருத்தியுடன் போகக் கண்டாற் சொல்வீரெனச் செவிலி வழியிடை வினுவாநிற்றல்.

(353) [1]அரிகூடப் [2]பாகலஞ் சூழல்கள் சூழுங்குற் றுலர்திருத்
திரிகூட வெற்பிற் குகைவாசஞ் செய்யத் தெரிமறைநூல்
விரிகூடக் கண்டு வருகுமுக் கோற்பக வீர்தனத்தாற்
[3]கரிகூடத் தேற்றவள் கோமான்பின் போகக்கண்
டாற்சொல்கவே.

*பரியுஞ் செவிலிதன் பாவையை நெறியிற்*
*றிரி[4]தண் டினர்முற் சென்று கேட்டது.*

### மிக்கோர் ஏதுக்காட்டல்.

மிக்கோர் ஏதுக்காட்டல் — என்பது, ஒரு பெருஞ்செல்வனுகிய தலைவன் பின்னே அன்னம் போன்று ஒரு பெண்மகள் செல்கிறுளோ வெனக் கேட்கின்ற கோதையுடையாளே! பருவகாலத்துக் கருக்

1 அரி–குரங்கு. 2 பாகல்–பலா. 3 கரி–யானை. 4 திரிதண்டினர்–முக்கோற்பகவர்.

கொண்ட மேகம் பொழிந்தாற் பூமியின்கண் விழுமன்றி இடையே தங்குவதொன்றில்லை. அப்படி பெண்ணென்று பிறந்ததும், ஓர் ஏதிலன் மனைக் குற்றேவல் செய்தொழுகப் பெறுமன்றி வேறில்லை யென ஏதுவும் திட்டாந்தமுங் காட்டாநிற்றல்.

(354) திருக்கொண்ட நன்னகர்க் குற்றால வெற்பொரு செல்வர் பின்னே
[1]குருக்கொண்ட மேனியன் னஞ்செல்லு தோவென்ற கோதை விண்ணிற்
கருக்கொண்ட கார்சொரிந் தாற்பார் விழுந்தறு காதலைபோல்
உருக்கொண்ட மாதும் பருவத் தயல்மனை யுட்புகுமே.

பெண்ணினுக் குவமை விண்ணெனச் செவிலிக்
கெண்ணமில் பெரியோர் ஏதுக் காட்டல்.

**எயிற்றியொடு புலம்பல்.**

எயிற்றியொடு புலம்பல் — என்பது, திருக்குற்றாலஞ் சிந்தியார்க்கு நல்குரவால் வருஞ் சாடராக்கினிபோல் எங்கணும் பரந்து தாவும் அழற்பாலையின்கண் [2]கமர்வழிக் கிடக்கும் சர்ப்பத்துக்குப் பயந்து ஒதுங்க ஒருபக்கத்துச் சாயும் நுண்ணிடையுடையாள் இவ்விடத்துச் செல்லக் கண்டதுண்டோ எனச் செவிலி அந்நிலத்து எயிற்றியரொடு வினவாநிற்றல்.

(355) காயுந் தழற்கண் ணுதலார்குற் றாலங் கருதலர்க்கே
தேயும் படிக்கு வறிதால் வரும்பசித் தீயினைப்போற்
பாயுந் தழற்கட் [3]கடுவா யரிக்கும் பயந்துபக்கஞ்
சாயுந் துடியிடை சென்றதுண் டோமறத் தையலரே.

[4]அரக்கண் டஞ்சியோர் ஆயிழை யிவணே
வரக்கண் டோவென மறத்தியைக் கேட்டல்.

**குரவொடு புலம்பல்.**

குரவொடு புலம்பல் — என்பது, முன்னே செல்கின்ற வேந்தன் பின் ஒரு மாதானவளைக் கண்ட திடமுண்டானாற் சொல்லுவாய். சொன்னால், அவளை விலக்கிக் கொண்டனையில்லையோவெனச் சொல்

---

1 குரு—நிறம். 2 கமர்—நிலப்பிளப்பு. 3 கடுவாய் அரி—விஷத்தையுடைய பாம்பு.
4 அர—அரா என்பதன் குறுக்கல் விகாரம்.

லேன் என அதற்கோர் ஐயந்தீர்த்துப் பேசாதனவற்றைப் பேசுவதாக எண்ணிச் செவிலி குரவொடு புலம்பாநிற்றல்.

(356) நல்குர வேசும்பி னூர்க்களி யாதுபொன் னூடுசெல்வம்
மல்குர வேதருங் குற்றாலர் வெற்பொரு மாதைமுன்னே
செல்[1]குர வோடிந்தப் பாலையிற் கண்ட திடமுளதேற்
சொல்[2]குர வேசொல் விலக்கிலை யோவென்று சொல்கிலனே.

விலக்கிலை யோவென விள்ளே னென்று
நலக்கொடி சேலைக் குரவொடு கேட்டல்.

**சுவடுகண்டிரங்கல்.**

சுவடுகண்டிரங்கல் — என்பது, பரலென்றும் முள்ளென்றும் மனஞ்சடிப்பாரது பதைப்பற நடந்திருப்பதால், முன்னே சென்றிருக்குந் தடம் தலைமகன் ஏகிய தடம். தளர்நடைகொண்டு தடம் புரண்டு காணலாற் பின்னே சென்றிருப்பது நம்மகட் போந்த தடம் எனச் செவிலி மனத்தைப் பார்த்து நடந்ததிற் பலன் யாது என்று நீங்காதே தேடிக் காண்மின் என்று சொல்லாநிற்றல்.

(357) நடந்தான தென்னென்று மாறுதை நன்னெஞ்ச மே[3]பறந்தான்
[4]இடந்தானுந் தேடிய குற்றாலர் வெற்பர்முன் னேகியதாங்
[5]கடந்தா னடிபற்றிக் காணு தலாற்பின் கடம்நடந்த
[6]தடந்தான் புரள்வுற்றுக் காணுத லாற்கன்னி தன்றடமே.

இருவர்தன் சுவடும் இஃதிஃ தென்னப்
பொருவிழி யறிந்து போதா நிற்றல்.

**கலந்துடன் வருவோர்க் கண்டு கேட்டல்.**

கலந்துடன் வருவோர்க் கண்டு கேட்டல் - என்பது, உனக்குப் பதியானவர் முன்செல்லப் பின் செல்கின்ற மகளே! இவ்வண்ணம் ஒரு தலைமகன் பின்னே என்மகள் பாலை நிலத்தையுங்கடந்து முல்லை நிலத்தளவிற் செலக் கண்டிலையோ? முன் பெற்றெடுத்தவள் அங்கும், வளர்த்தெடுத்த யான் இங்குந் தேடும்படி மறையா நின்றாள் எனச் செவிலி கலந்துடன் வருவோர்க் கண்டு கேளா நிற்றல்.

---

1 குரவு—அரசன். 2 குரவு—ஓர் மரம். 3 பறந்தான்—அன்னமாய்ப் பறந்த பிரமன். 4 இடந்தான்—ஏனமாய் இடந்த திருமால். 5 கடம்—அரிய வழி. 6 தடம்—அடிச்சுவடு.

(358) உன்னேந்தல் முன்செல்லப் பின்செல்லுங் கோதை யொருவர் பின்னே
என்னேந் திழைமுல்லை வாய்ச்செலக் கண்டிலை யோ[1]பயந்து
முன்னேந்து மானங்கும் யானிங்குந் தேட முகமறைந்தாள்
பொன்னேந்து கொங்கைக் குழன்மொழிப் பாகன் பொருப்பி டத்தே.

*அலந்த செவிலி யவண்மகட் சேறல்*
*கலந்துடன் வருவோர்க் கண்டு கேட்டது.*

### கலந்துடன் வருவோர் புலம்பல் தேற்றல்:

கலந்துடன் வருவோர் புலம்பல் தேற்றல் - என்பது, தேடுவார், சிந்திப்பார், உண்டென்று பின்னினைவு வையாதே தன்னழகைக் கண்கவர்ந்துகொண்டு செல்லும்படி வேட்கை விளைத்துக்கொண்டு அவர் முன்னும் அவள் பின்னுமாகச் சென்று இப்பொழுது எல்லாம் தமக்கு [2]அத்தாணியாகிய நகர்புகுவார் எனக் கலந்தெதிர் வருவார் செவிலியைத் தேற்றாநிற்றல்.

(359) பின்பார்க்கச் சிந்தைவை யாதேமின் னளவர் பேரழகை
முன்பார்க்க வேட்கைசெய் துந்தாம மென்னமுன் னளிறந்தோர்
என்[3]பார்க்க மார்பணி குற்றாலர் வெற்பரிந் நேரமெல்லாம்
தன்பார்க்கு முன்னக ராகிய நன்னகர் தான்செல்வரே.

*கதிர்மூலை யொடுந்தன் கடிநகர்ப் புகுவரென்*
*றெதிர்வரு வோரவ ரேகலை யுறுத்தல்.*

### செவிலி புதல்வியைக் காணாது கவலைகூர்தல்.

செவிலி புதல்வியைக் காணாது கவலைகூர்தல் - என்பது, நற்றா யானவட்கொரு தேற்றத்தைச் சொன்னாலும், எதிர்வந்து தேடிச் சென்றவாறு வினவியவிடத்துத் தமரார் அயலார்க்கொரு தேற்றத் தைச் சொன்னாலும், என்னைப் பிதற்றா நிற்கும் மன்பேய்க்கு என் மகள் வந்தே தேற்றஞ் சொல்ல வேண்டுமென்று புதல்வியைக் காணாது அங்ஙனங் கவலைகூராநிற்றல்.

---

1 பயந்து—பெற்று. 2 அத்தாணி—அரசிருக்கை. 3 அர்க்கம்—எருக்கம்பூ நீட்டல் விகாரத்தால் இது 'ஆர்க்கம்' என வந்தது.

(360) தாய்க்கொரு தேற்றமும் வந்தெதிர் கேட்குந் தமரயலார்
வாய்க்கொரு தேற்றமுஞ் சொன்னாலு மென்னை மயக்குமனப்
பேய்க்கொரு தேற்றமுஞ் சொலமகள் வேணும் பிறவியெனும்
நோய்க்கொரு தேற்ற மருந்தாங்குற் றாலமுன் னோன்வெற்பிலே

தேடா நின்ற செல்வியைக் காணாக்
கோடாய் கவலை கூர்ந்துபின் றயர்தல்.

முற்பட மொழிந்த முறையெழு மூன்றுங்
கற்பொடு புணர்ந்த கௌவையின் விரியே

(ந. அ வரைவு. 19)

செவிலி தேற்றுவார்க்கு எதிரழிந்து மொழிதல் முதலாகப் புதல்வியைக் காணாது கவலை கூர்தல் ஈறாகச் சொல்லிய இருபத்தொன்றும் கற்பொடு புணர்ந்த கௌவையின் விரியா மென்றவாறு ஆகச் செய்யுள் (360)

## மீட்சி.

தெளித்தல் மகிழ்ச்சி வினாதல் செப்பலென்
வெளிப்பட வுரைத்த மீட்சிநால் வகைத்தே

(ந. அ. வரைவு. 20)

தலைவிசே ணகன்றமை செவிலிதாய்க் குணர்த்தலும்
தலைவன் றம்மூர்ச் சார்ந்தமை சாற்றலும்
தலைவிமுன் செல்வோர் தம்மொடு தாம்வா
பாங்கியர்க் குணர்த்தி விடுத்தலு மாங்கவர்
பாங்கியர்க் குணர்த்தலும் பாங்கியர் கேட்டு
நற்றாய்க் குணர்த்தலும் நற்றாய் கேட்டவன்
உளங்கோள் வேலனை வினாதலு மெனவுடன்
விளம்பிரு மூன்றும் மீட்சியின் விரியே.

(ந. அ வரைவு 21)

### தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குணர்த்தல்.

தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குணர்த்தல் – என்பது, நாளைப் போதுந் தேடுவோமென்று காலத்தைக் கழியவிடாது யான் சென்ற விரைவிற்குக் கடுங்கால் எதிர்ந்த பூளைப்பூவுந் தோற்றுப்போம். கிட்டிச்சென்று ஒருவார்த்தை பேசா முன்னமே தலைவனுந் தலைவியும் முல்லை நிலங்கடந்து மருத நிலத்தைச் சென்றணைந்தார்கள் என்று செவிலி நற்றாய்க்கு வந்துணர்த்தாநிற்றல்.

(361) நாளையுந் தேடுவ மென்னுதி யானடத் தற்கெழுகாற்
பூளையுந் தோற்கும் அடுத்தோர் வசனம் புகலுமுன்னே
[1]காளையும் மானும் முடை[2]யண்டர் பாடி கடந்துசதா
வேளையும் இன்புறக் குற்றால நன்னகர் மேவினரே.

சேட்புகக் காளைச் செவிலிகற் றுய்த்த
மீட்பரி தான விதமி ஃதென்றல்.

**தலைவன் றம்மூர்ச்சார்ந்தமை சாற்றல்.**

தலைவன் றம்மூர்ச்சார்ந்தமை சாற்றல் — என்பது, திரிகூட வரையின்கண் தேம்பாயும் அருவி வீழா நின்ற சிவமது கங்கையென்றும். செண்பகாடவித்துறை யென்றும் இவ்விடத்தில் நவமணிகளைக் கொழியா நின்ற சித்திரா நதி யென்றும் பேர். இஃதெல்லாம் ஒவ்வோர் தீர்த்த கட்டம். ஏலமெல்லாமொன்றே. ஆதலால், அவ்விடம் பிறந்திடம் என்றும், இவ்விடம் புகுந்திடம் என்றும் பேதம் இல்லை. அவ்வூரே யிவ்வூர். இங்கு இருந்ததுபோல அங்கு மிருக்கலாம் எனத் தலைமகள் நோக்கமறிந்து தலைமகன் மீட்சிதோன்றக் கூறுநிற்றல்

(362) [3]பவவினை தீர்க்கும் பரன்றிரி கூடத்திற் பாயருவிச்
[4]சிவமது கங்கை செழுஞ்செண் பகாடவி சேர்துறைவாய்
நவமணி யாவுமிங் கேசிந்து சித்ர நதியெனப்பேர்
இவண்மனை நம்மனை யாமந்த வூரிந்த வூர்நம்மினே.

தம்மனை நினைந்த தலைமகட் கவப்ப
வெம்முனை வேலோன் மீட்சி கூறியது.

**தலைவி முன்செல்வோர் தம்மொடு தாம்வரல் பாங்கியர்க்குணர்த்தி விடுத்தல்.**

தலைவி முன்செல்வோர் தம்மொடு தாம்வரல் பாங்கியர்க்குணர்த்தி விடுத்தல் — என்பது, தலைமகன் மீட்சி அறியா நின்ற தலைமகள் முன்செல்லும் அந்தணரைப் பார்த்துத் துதிசெய்து அழைக்கின்ற களிற்றரசைக் காத்தவன் போற்றிய குற்றால நாயகர் மலரடி வணங்குகின்ற முந்நூலுடையீர்! நமது கையாலெழுப்பும் முத்தீப் போலும் எண்ணத்தையடைந்த என் பாங்கியர் கூட்டத்திற் சென்று நான் வருமாற்றினைச் சொல்வீரெனச் சொல்லாநிற்றல்.

---

1 காளையும் ஆனும்—காளையும் பசுக்களும் 2 அண்டர்பாடி—இடையர்களின் முல்லை நிலத்து ஊர். 3 பவம்—பிறப்பு. 4 சிவமது கங்கை—ஒரு தீர்த்தம்.

(363) [1]கூப்[2]போலத் தாற்கரி காத்தவர் போற்றுங்குற் றலர்கஞ்சப்
பூப்போலுந் தாள்பணி [3]நூலீர் நுமதுபொற் கைவளர்க்குந்
தீப்போலும் எண்ண முறுமாத ராயத்திற் செப்பு[4]மணிக்
காப்போ லிடநடந் தேவரு வாளுங்கள் கன்னியென்றே.

வருவல் மீண்டென்ன மறையீர் உரையீர்
பெருதுமா யத்தெனப் பெய்வளை யுரைத்தல்.

**ஆங்கவர் பாங்கியர்க் குணர்த்தல்.**

ஆங்கவர் பாங்கியர்க் குணர்த்தல் — என்பது, யான் அவ்விடம் விட்டு இவ்விடத்து வரும்போது தலைமகனுடனும் நுங்கள் தலைமகள் வருவதாகச் சொன்னாள். ஆதலால் முன்போல் அவளுடன் விளையாடும் படிக்கு அசோகவனத்தின் கண்ணே பொன்னம் பாவையும் கழங்கு முதலியனவுங்கொண்டு எதிரே நிற்பீரென அந்தணர் பாங்கியர்க் குணர்த்தாநிற்றல்.

(364) [5]சுரும்போது கீத முழவார்குற் றலர்தொல் வெற்பிலியான்
வரும்போது வேந்துடன் நுங்கள்மின் னாளை வரல்பகர்ந்தாள்
[6]கரும்போது மென்மொழி காள்பிள்ளைப் பாவை கழங்கொடுபந்
திரும்போ துகும்பிண்டி நீழலி லேகொண் டெதிர்நில்லுமே.

கற்பொடு புணர்ந்த கடிவடி வுடையாள்
அற்புடன் வரல்சென் றந்தணர் உரைத்தல்.

**பாங்கியர் கேட்டு நற்றாய்க்குரைத்தல்**

பாங்கியர் கேட்டு நற்றாய்க்குரைத்தல் — என்பது, பாங்கி யுடன் தினைப்புனங்காத்தற்குச் சென்று அவையொழிந்த நாண்முதல் பாங்கி வரைவுகடாவ வரைபொருட் கொடுத்த நாள்வரைத் தன்நகர்க் கொண்டு உய்ப்ப நினைந்தார்க்கு உடன்பாடாகப் போயவள் வருகிறாளென்று ஓரந்தணர் வந்து உணர்த்தினரெனப் பாங்கி நற்றாய்க்கு உணர்த்தா நிற்றல்.

---

1 கூப்பு—கை குவித்தல். 2 ஓலம்—அபயம். 3 நூலீர்—முந்நூலையுடைய அந்தணரே. 4 மணிக்காப்பு—ஒருவகைக் கைவளை. 5 சுரும்பு—வண்டு. 6 கரும்போது மென்மொழிகாள்—கரும்புபோன்ற இனிய மெல்லிய மொழியையுடைய பெண்களே.

(365) உரலாய காற்களி றீர்த்தகுற் றாலர் உயர்வரைமேற்
[1]குரலாய வண்டினைக் காப்பொழி நாண்முதற் கொண்டுகுறும்
பரலாய பாலை செலகினைந் தார்க்குடன் பாடிசைந்தாள்
வரலாய செய்தி உதித்ததோர் அந்தணர் வாக்கினிலே.

தலைமகள் வரவு சாற்றக் கேட்டுணர்
நலமிகு பாங்கியர் நற்றாய்க் குணர்த்தல்.

**நற்றாய் கேட்டு அவனுளங்கொள வேலனை வினுதல்.**

நற்றாய் கேட்டு அவனுளங்கொள வேலனை வினுதல் – என்பது, கொடாதொழியக் களவின்வழிக் கற்பாக உடன்போய்ப் புணர்ந்த தலைவன், கொடுக்கக் கொள்வதாய் வந்து எம் மனையின்கண் வரைந் தால் மற்றும் அப்போது உடன்போயது போலச் செல்குவரோ? இவ்விடத்துத்தானே யிருப்பரோ? அவர் உள்ளம் யாதென நற்றாய் தெய்வத்தை வினுவாநிற்றல்.

(366) தாதுடன் றேங்கமழ் கொன்றைக்குற் றாலர் சயிலத்திலே
மாதுடன் வந்தெம் [2]மனைவரைந் தால்மற்று மேயவரப்
போதுடன் போயது போற்செல் வரோஇங்ஙன் [3]புக்குவரோ
ஏதுடன் பட்டது வேலவ ரேயிறை யோர்நெஞ்சமே.

வரைந்திவண் வரைய வந்தவ ரிருத்தல்
இரங்கிய நற்றாய் இறைவனை வினுயது.

இவற்றுள், தலைவி சேணகன்றமை செவிலி தாய்க்குணர்த் தலும், தலைவன் றம்மூர்ச் சார்ந்தமை சாற்றலும் ஆகிய இரண்டும் தெளித்தற்கும், தலைவி முன்செல்வோர் தம்மொடு தாம்வரல் பாங்கி யர்க்குணர்த்திவிடுத்தலாகிய ஒன்றுஞ் செப்பற்கும், ஆங்கவர் பாங்கி கியர்க்குணர்த்தலும், பாங்கியர்கேட்டு நற்றாய்க்குணர்த்தலும் ஆகிய இரண்டும் மகிழ்ச்சிக்கும் நற்றாய் கேட்டு அவன் உளங்கோள் வேலனை வினுதலாகிய ஒன்றும் வினுதற்கும் உரிய வாமெனக் கொள்க.

மடந்தையை யுடன்போய் வரைந்து மீடற்றும்
அவண்மனை வரைதற்றும் தன்மனை வரைதற்றும்
இவையைந் துமுரிய செவிலிகூற் றெழித்தே.

(ந. அ. வரைவு. 22)

ஆகச்செய்யுள் (366)

---

1 குரல்—கதிர். 2 மனைவரைந்தால்—மனையின்கண் வதுவை செய்தால். 3 புக்கு வரோ—ஈண்டு, இருத்தல் செய்வாரோ

## வரைவு.

விறுதல் செப்பல் மேவலென் றிறைவன்
றனுதில் வரைவு தான்மூ வகைத்தே.
(ந. அ. வரைவு. 23)

பணிமொழி நற்றாய் மணனயர் வேட்கையிற்
செவிலியை வினுதலும் செவிலிக் கிகுளை
வரைந்தமை யுணர்த்தலும் வரைந்தமை செவிலி
நற்றாய்க் குணர்த்தலும் உற்றாங் கிறுவரும்
தலைவியில் வந்துழித் தலைவன் பாங்கிக்கு
யான்வரைந் தமைநுமர்க் கியம்புசென் றென்றலும்
தானது முன்னே சாற்றிய துரைத்தலும்
என்னுழிவ் வைந்தும் மின்னிலை வேலோன்
மன்னிய தன்மனை வரைதலின் விரியே.
(ந அ. வரைவு. 24)

### பணிமொழி நற்றாய் மணனயர் வேட்கையிற் செவிலியை வினுதல்.

பணிமொழி நற்றாய் மணனயர் வேட்கையிற் செவிலியை வினுதல் - என்பது, பூரணசந்திரோதயம் போன்ற முகத்தினையுடைய நமது மகளைத் தலைமகன் சுற்றத்தார் கொடுப்பதின்றித் தானே மணஞ்செய்து கொண்டான் ஆனுலும், இன்னம் நாம் கொடுப்ப வரைதற்காளுலும் தூதொன்று விடாதிருந்ததென்னே? என நற்றாய் செவிலியை வினுவாநிற்றல்.

(367) [1]நாளுலு துண்ட மதிமுகத் தாளை நமர்களின்றித்
தானுத ரித்து மணப்பினும் வந்தின்னந் தான்வரை தற்
காளுலுந் தூதொன் றனுப்பா திருந்ததென் னமுதே
ஊனு லுயிர்படைத் தாண்டகுற் றாலர் உயர்வெற்பரே.

வரைந்தோர் நம்பால் வரைதலை யறிய
விரைந்தோர் தூது விடாததென் னென்றல்.

### செவிலிக்கு இகுளை வரைந்தமை யுணர்த்தல்

செவிலிக்கு இகுளை வரைந்தமை யுணர்த்தல் — என்பது, உடன்போய்த் தன் ஊரின்கண்ணே மன்றல் விதியொன்றும் பிழை

1 நாளுலு துண்டமதி—பதினுறு கலைகள் பொருந்திய சந்திரன்

யாதே தலைமகளை வேட்டது இவ்வண்ணமென்று அந்தணர் வந்து உரைத்ததை நற்றாய்க்கு என்னென்று சொல்வேனெனப் பாங்கி செவிலிக் குணர்த்தா நிற்றல்.

)368) நதிப்படி யீர்ந்துறை நன்னகர் வாணர் நனிவிரும்பும்
துதிப்படி யார்க்கருள் வோர்திரி கூடத்துத் தூதரண்ணல்
விதிப்படி யொன்றுந் தவறா தவட்குச்செய் வேட்டல்வகை
யதிப்படி யென்றுரைத்தா ரென்னென் றன்னைக் கறைகுவதே.

செந்தழல் சான்றாய்த் திறலோன் வரைந்தமை
அந்தணர் உரைத்தல் கைத்தாய்க் கறிவித்தல்.

**தலைவன் றன்மனை வரைந்தமை செவிலி நற்றாய்க் குணர்த்தல்.**

தலைவன் றன்மனை வரைந்தமை செவிலி நற்றாய்க் குணர்த்தல்— என்பது, தன்னாணமே தனக்கு அணிகலமாகப் பூண்ட தலைமகட்கு அங்கியங் கடவுள் அறிகரியாகத் தலைமகன் மங்கல நாண் புனைந்தருளினாரென முன்னமே தூதர் வந்தனர். ஆனால் அந்த மணத்தை நம்மிடமாகச் செய்யக் கண்ணிற் கண்டோமில்லையென்று வரைந்தமை செவிலி நற்றாய்க் குணர்த்தா நிற்றல்.

)369) தங்[1]கல னாணைப் பூண்டாட்குப் [2]பாவக சாக்கியதாய்
[3]மங்கல நாண்புனைந் தாரென்று தூதுவர் வந்தனர்முன்
[4]தொங்கல நாண்மலர்க் கோதாய்கண் கண்டிலம் [5]தொண்டருக்கே
[6]பொங்கல னாணுற வெல்லுங்குற் றாலர் பொருப்பிடத்தே.

தம்மனைத் தலைவன் றானே வரைந்தமை
யம்மனைக் கவள்கோ டாயறி வித்தல்.

**உற்றாங் கிருவருந் தலைவியில் வந்துழித் தலைவன் பாங்கிக்கு யான் வரைந்தமை நுமர்க்கு இயம்புகென்றல்.**

உற்றாங் கிருவருந் தலைவியில் வந்துழித் தலைவன் பாங்கிக்கு யான் வரைந்தமை நுமர்க்கு இயம்புகென்றல் — என்பது, மணமுரசொலிப்பக் குழல் யாழிசை முதலிய மங்கல வாச்சியங்கள், பலருஞ் செவிக்கினிதாகக் கேட்ப அந்தணர் வளர்க்கின்ற அக்கினியினது புகை

---

1 கலன்—ஆபரணம். 2 பாவகர்—அக்நி. 3 மங்கலநாண் — திருமங்கல்யச் சரடு. 4 தொங்கல்—மாலை. 5 தொண்டர்—இங்கு பாணபத்திரன். 6 பொன்கலன்—ஏமநாதன் என்னும் யாழ்வல்லோன்.

வானிடை முகில்போன்றெழ நின் துணைவிக்கு யான் செய்த மணத்தினை நும் தமராகிய பேர்க்கு வரன் முறையாகச்சென்று சொல்வாயாகெனத் தலைமகன் தலைமகள் மனையின்கண் வந்திடத்துத் தோழிக்குணர்த்தாநிற்றல்.

(370) பறைமுழ வார்ப்பக் குழல்யா ழிசைபலர் கேட்பஅழல்
[1]நறைமுகில் போலெழ நாமங்கைக் கேசெய்த நன்மணத்தைப்
பிறைமுடி யார்திருக் குற்றால நாதர் பெருவரையில்
முறைமுறை யாய்ப்பகர் வீர்நுமர்க் கேசென்று மொய்குழலே.

இறைவநந் தலைவியில் வந்துழி இதனையைப்
பொறுவில் நமர்க்கிறை புகல்வா யென்றல்

**தானது முன்னே சாற்றின னென்றல்.**

தானது முன்னே சாற்றின னென்றல் – என்பது, உடன் போய நாள்முதலே நுமக்குரிய தமர்களோடு அக்கினிசான்றாக வலஞ்சூழ்ந்து தலைமகளை மணஞ்செய்துள்ள வரலாற்றினை என் அன்னைக்குச் சொன்னேனெனப் பாங்கி தலைவர்க்குச் சொல்லாநிற்றல்

(371) குடப்[2]பாகல் நற்கனித் தேறல்கள் பாயுங் குளநன்னகர்
விடப்பாகந் துய்த்தவர் குற்றாலர் வெற்பில் வியந்தனைக்கே
[3]நடப்பாக முன்னம் பகர்ந்தேன்செந் தீவலம் நண்ணியின்னை
இடப்பாகங் கொண்டு புணர்ப்பாக முற்ற திறையவரே.

உடன்போய் வரைந்தமை யுள்ளவை யெல்லாம்
முடன்தீர் பாங்கி வழுத்திய துரைத்தல்.

இவற்றுள், நற்றாய் மணனயர் வேட்கையிற் செவிலியை வினுதலாகிய ஒன்றும் வினுதற்கும், வரைந்தமை பாங்கி செவிலிக்குணர்த்தலும், வரைந்தமை செவிலி நற்றாய்க்குணர்த்தலும், பாங்கி தானது முன்னே சாற்றினேனென்றலுமாகிய மூன்றும் செப்பற்கும், தலைமகன் வரைந்தமை நுமர்க்கியம்புகென்றல் ஒன்றும் மேவற்கும் உரியவாமெனக்கொள்க.

ஆதியோன் றெழித் தல்லன நான்கும்
மாதினை யுடன்போய் வரைந்து மீடற்த
நீதியின் உரிய நினையுங் காலே.

(ந. அ. வரைவு. 25)

1 நறை–நறும்புகை. 2 பாகல்–பலாமரம். 3 நடப்பாக–வரன்முறையாக.

இருவரில் லிற்றும் இயைந்தபன் னென்றும்
ஒருவகை மீண்டு வரைதலின் விரியே.

(ந. அ. வரைவு. 26)

தன்மனை வரைதல் முடிந்தது. ஆகச்செய்யுள் (371)

## உடன்போக் கிடையீடு.

உடன்போக் கிடையீ டுற்று வரைதல்
போக்கறி வுறுத்தல் வரைவறி வுறுத்தல்
நீக்கம் இரக்கமொடு மீட்சி யென்றாங்
குடன்போக் கிடையீ டொருநால் வகைத்தே.

(ந அ வரைவு 27)



நீங்குங் கிழத்தி பாங்கியர் தமக்குத்
தன்செல வுணர்த்தி விடுத்தலுந் தலைமகள்
தன்செல வீன்றாட் குணர்த்தி விடுத்தலும்
ஈன்றாட் கந்தணர் மொழிதலும் ஈன்றாள்
அறத்தொடு நிற்றலின் தமர்பின் சேறலைத்
தலைவி கண்டு தலைவற் குணர்த்தலும்
தலைமகள் தன்னைத் தலைமகன் விடுத்தலுந்
தமருடன் செல்பவள் அவன்புற நோக்கிக்
கவன்றாற் றலுமென நுவன்றவை யாறும்
உடன்போக் கிடையீட் டுவிரியா கும்மே.

(ந. அ. வரைவு. 28)

**நீங்குங் கிழத்தி பாங்கியர்தமக்குத் தன் செலவுணர்த்தி விடுத்தல்.**

நீங்குங் கிழத்தி பாங்கியர்தமக்குத் தன் செலவுணர்த்தி விடுத்தல் - என்பது, உடன்போய் மீண்டு வந்தும் எனது ஆயக் கூட்டத்தைக் காணாது பின்னரும் தலைமகன் செல்லும் வழிக்கே செல்கின்றேன். இதை என் சொற்காக, அந்த ஆயக்கூட்டத்துச் சொல்வீராகவென, அங்ஙனஞ்செல்லும் அந்தணர்க்குத் தலைமகள் உபசரித்துரையாநிற்றல்.

(372) [1]உழிக்காயந் தீஞ்சுவைக் குற்றாலர் வெற்பொரு நாளெதிர்ந்தென்
[2]விழிக்காயம் வாங்கிய தாறு [3]ணறமெலி வித்தவர்போம்
வழிக்காயந் தீர்ந்துசென் றேனிதை யாயத்தென் மங்கையர்க்கென்
மொழிக்கா[4]யந் தீவளர்ப் பீர்தொழு தேன்கை மொழிந்திடுமே.

---

1 உழிக்காயந் தீஞ்சுவைகுற்றாலர்-பக்கத்திற் குழல்வாய்மொழி நாச்சியாரைக் கொண்ட குற்றாலநாதர். 2 விழிக்கு ஆயம் வாங்கியதால்-தோழியர் கூட்டங் கட்பார்வைக்கு இலக்காகாததினால் 3 நாண் அற மெலிவித்தவர்-தலைவர் 4 அந்தீ வளர்ப்பீர்-அக்நி காரியஞ்செய்யும் அந்தணரே.

மீண்டுவந் துடன்போழ் மெல்லியல் பாங்கியர்க்(கி)
யாண்டுசொல் கென்ன அந்தணர்க் குணர்த்தல்.

**தலைமகள் தன்செல வீன்றாட் குணர்த்தி விடுத்தல்.**

தலைமகள் தன்செல வீன்றாட் குணர்த்தி விடுத்தல் — என்பது, உடன்போய் மீண்டுவந்துழி, யானும் பெண்ணாகப் பிறந்தேன். என்னைப் பெற்றவளும் பெற்றுப் பின் மிகவுந் தவிக்கத் தக்கதே பெண் பிறந்தாள். யான் இங்குவந்து செல்வதை அவளுக்குச் சொல்வீரெனத் தலைவி அந்தணர்க்கு உணர்த்திவிடுத்தல்.

(373) பெண்பிறந் தேனெனைப் பெற்றாள்பெற் றும்பெருக் கத்தவிக்கப்
மண்பிறந் தாள்ஐய ரேமற் றோரெண்ணம்மை யாதின் றியான்
றண்பிறந் தேயிருக் குங்கா னகல்வ தனைப்பகர்வீர்
விண்பிறந் தார்கதிர்க் கண்ணார்குற் றாலத்தர் வெற்பிடத்தே.

ஈன்றாட் குணர்த்துவீ ரென்றந் தணர்க்குத்
தோன்றா தகலுஞ் சுடர்த்தொடி யுரைத்தல்.

**ஈன்றாட் கந்தணர் உரைத்தல்.**

ஈன்றாட் கந்தணர் உரைத்தல்—என்பது, .
(இதற்கு உரை காணப் படவில்லை .

(374) நான்மற வாதுனை வேனென்று பெற்றநற் றாய்செவிலி
தான்மற வாதிடை வார்யான் விதியுள தாற்செல்கின்றேன்
வேன்மற வாதகை யார்பின்ன ரென்றனள் வேத[1]னும்பர்
கோன்மற வாதநங் குற்றாலர் வெற்புக் குறுந்தொடியே.

தலைமகள் தன்றுயர் சாற்றின வெல்லாம்
நலனுடை யந்தணர் நற்றாய்க் குணர்த்தல்

**நற்றாய் தமர்கட்கு அறத்தொடு நிற்றல்.**

நற்றாய் தமர்கட்கு அறத்தொடு நிற்றல் – என்பது, தலைமகனுடன்போய்த் தன்னூரின் கண்ணே வரைந்து, மீண்டுவரைதலைக் கருதி வந்து நுங்கட் கறிவித்தற்கு ஐயுற்றுப் பின்னும் செல்கின்றார். நீவிர் அவளைச் சென்றெதிர்ந்து தடுத்துக்கொள்வீராகவென நற்றாய் தமர் கட்கு அறத்தொடு நில்லாநின்றது.

---

1 உம்பர் கோன்—தேவேந்திரன், திருமாலுமாம்.

(375) ஆள்கச்செய் தாரடி யார்தம்மைத் தம்மைநம் பார்பிறந்து
மாள்கச்செய் தார்திருக் குற்றால நாதர் வரையிடத்தே
நீள்கச்செய் தார்மூலை யாளையோர் கண்ணும்நில் லாதெதிர்ந்தே
மீள்கச்செய் வீரெமர் காள்மன்னர் தேர்விரைந் தேறுமுன்னே.

செல்லா தணங்கைத் திருப்புவ தாக
நல்லாய் தமர்க்கு நனிதுணர்த் தியது.

**தமர்பின் சேறலைத் தலைவி கண்டுரைத்தல்.**

தமர்பின் சேறலைத் தலைவி கண்டுரைத்தல் — என்பது, உள்ளங் கனிந்து ஒருப்பட்டு அன்புகளைச் செலுத்தியுஞ் சிறிது தவக்குறையினாற் குற்றாலநாயகர் திருவடிகளைக் கண்டு கடைகூடாதார், பின்னும் [1]தேகத்திரய சோதனைகளைப் பண்ணிச் சொரூபத்தை யுணர்ந்து உனக்கே பரமெனத் திருவருள் வசமாய் நிற்கும் உறுதியைப்போல உடன்போய் வரைந்து மீண்டு அவன் முன்னின்றுணர்த்தாது ஏகிய தெவ்வாறெனஎனது தமரானவர்கள் [2]கன்னுந்தமாக வாங்கிய சிலையுங் கணையுமாக ஒருதலை மோதிக்கொண்டு வந்த கொடுமை யாதெனத் தலைமகள் தலைவர்க்குக் கண்டுரையாநிற்றல்.

(376) கனிந்தன்பு செய்துங்குற் றாலர் பதங்கண் டிலருடலை
முனிந்துன் றனக்குப் பரமென் று நின்றென மோதிமன்ன
வனிந்தஞ் சிலைநுத லாளைக்கொண் டேகலெவ் வாறெனவே
குனிந்தம்பு கொண்டவில் லோடெமர் வந்த கொடுமையென்னே.

அமர்வெஞ் சிலைவளத் தகலவி டேமெனத்
தமர்பின் சேறலைத் தலைவிகண் டுரைத்தல்.

**அவன் விடுத்தகறல்.**

அவன் விடுத்தகறல் — என்பது, தலைமகன் ஒருவன் தமர்கள் அனேகர் என்பதோர் அச்சம் உனக்கு வேண்டுவதில்லை. முற்காலத்து இராமர் ஒருவர்; மூல பலம் அனேகம். அவர் அதனைச் செயங்கொண்டதுபோல, இவர்களை நானொருவனே செயங்கொள்வேன். நீதியன்று. இராக்கதர் மணமாம். உனக்கும் குறைச்சலாம். ஆதலால் அத்தமர்களுடன் விரைந்து செல்வாயாகெனத் தலைவியை அவன் விடுத்தகலாநிற்றல்.

---

1 ஓர்கண்ணும் நிலலாது—ஓரிடத்தும் நில்லாது என்றிருத்தல் நலம். 2 தேகத்திரயம்—மனம்வாக்கு காயம். 3 கன்னுந்தமாக—காதளவும்.

(377) மன்ன ரொருவர் நமர்பல ரென்னு மனதுனக்கென்
முன்ன ரிராமர் ஒருவ ருடனெதிர் மூலபெலம்
என்ன ரதம்நடத் திப்பொரு வேனுனக் கேகுறையாம்
மின்ன ரவப்பணிக் குற்ருலர் வெற்பில் விரைந்துசெல்லே.

இராக்கத மணம்போன் றிடுமென் றிறைவியைப்
பொராக் கதனுகப் புரவலன் விடுத்தல்

**தமருடன் செல்பவள் அவன் புறம் நோக்கிக் கவன்ருற்றல்.**

தமருடன் செல்பவள் அவன் புறம்நோக்கிக் கவன்ருற்றல் — என்பது, வரைபொருட் கொடுக்க வாங்கிய அன்பினுல் ஒரு பெண் மகட் கொடுத்தற்கு உரியாரைச் சேதித்தல் நீதியன்றென இரங்கி இத் தலத்திடைச் சுரத்தே விட்டகன்ருரெனச் செல்கின்றவன் [1]புறஞ் சாய்த்துப் போதலை நோக்குங் கவற்சியையுடைய தலைமகள் தமருடன் சென்று ஆற்ரு நிற்றல்.

(378) தொடுத்[2]தாரைக் கொன்றையைத் தும்பையைச் சூடித் தொழுதிருதாள்
அடுத்தாரை யாண்டருள் குற்ருலர் வெற்பிலன் பாயொருபெண்
கொடுத்தாரைக் கோறல் கொலையென் றிரங்கி நம் கோனும் நம்மை
நடுத்தாரை விட்டகன் ருர்அறங் காக்கின்ற நல்லறிவே.

தமருடன் செல்வோள் தலைவனை நோக்கி
அமராக் கவலைகொ டாற்ற நிற்றல்.

இவற்றுள், முன்னைய மூன்றும் போக்கறிவுறுத்தற்கும், அறத்தொடு நிற்றலிற் றமர் பின்சேறலைக்கண் டுரைத்தல் ஒன்றும் வரவறிவுறுத்தற்கும், அவன் விடுத்தல் ஒன்றும் நீக்கத்திற்கும் தமரு டன் செல்பவள் அவன் புறம் நோக்கிக் கவன்ருற்றல் ஒன்றும் இரக் கத்திற்கு முரியவாமெனக்கொள்க.

---

1 புறஞ்சாய்த்து—முதுகு சாய்த்து, வீரங்கெடுத்து எனினுமாம்.
2 ஆர்—ஆத்திப்பூ.

## வரைதல்.

தன்றார் வரைதலும் தன்மனை வரைதலும்
என்னுமிவ் விரண்டொழித் தெவற்றினும் கிழவோன்
அந்தணர் சான்றோர் முன்னிட் டருங்கலம்
தந்தனன் வரைத றதுதி யென்ப.

(ந. அ. வரைவு 29)

அஃதாவது, உடன்போய்த் தன்னூரின் கண்ணே வரைதலும் மீண்டுவந்தவுடன் மனையின் கண்ணே வரைதலும் ஆகிய இரண்டும் ஒழித்து அல்லாதவெல்லாம் வரைவின்கண்ணும், தலைமகன் அந்தணரையுஞ் சான்றோரையும் முன்னிட்டு அருங்கலன் கொடுத்து வரைதல் உலகியற்கை யென்று சொல்லுவர் புலவர் என்றவாறு. அவ்வாறு வரைந்து கொண்டுழிக் கண்டோர் மகிழ்ந்துகூறி உடன் போக்கு இடையீடுற்று வரைதல் முடிந்தது. ஆகச் செய்யுள் (378)

**அவ்வாறு வரைந்து கொண்டுழிக் கண்டோர் மகிழ்தல்.**

அவ்வாறு வரைந்து கொண்டுழிக் கண்டோர் மகிழ்தல் — என்பது, நகரி அலங்கரித்து மணமுரசு முதலாய அனேக வாச்சியங்கள் முழங்கத் தலைமகன் கைக்கொள்ளும்படி அவர்க்குரித்தாகிய அந்தணரையுஞ் சான்றோரையும் முன்னிட்டருங்கலனுதியாக அனேகம் கைமாறுகளும் கொடுத்துத் தலைமகளையும் உதகஞ்செய்து கைப்பற்றக் கொடுக்கக் கண்டோமென இருவழியிலுள்ள சுற்றத்தாரும் நகரி நாட்டுள்ளோர்களும் கண்டு மகிழ்ச்சியடையா நிற்றல்.

(379) [1]வெறியா ரணிதிருக் குற்றாலர் வெற்பண்ணல் வேண்டஅவர்
அறிஞோ ரையுமந் தணரையு முன்னிட் டருங்கலன்கள்
செறிவாக நல்கி மணமுர சார்ப்பவித் தேமொழியை
நெறியாக நீரிற் கொடுக்கக்கண் டோமிவர் நீளிக்கவே.

கையினீர் பெய்யக் கலந்திந் தரவோர்
செய்யுமா மணத்திறங் கண்டோர் மகிழ்தல்.

ஆகச் செய்யுள் (379) வரைவியல் முடிந்தது.

வரைவியல் முற்றும்.

---

1 வெறி-வாசனையுள்ள மலர்.

## மூன்றாவது கற்பியல்.

பொற்பமை சிறப்பிற் கற்பெனப் படுவது
மகிழ்வும் ஊடலும் ஊட லுணர்த்தலும்
பிரிவும் பிறவும் மருவிய தாகும்

(ந அ கற்பு 1)

அவற்றுள்,

இல்வாழ்க் கையே பரத்தையிற் பிரிவே
ஓதற் பிரிவே காவற் பிரிவே
தூதிற் பிரிவே துணைவயிற் பிரிவே
பொருள்வயிற் பிரிவெனப் பொருந்திய ஏழும்
வளமலி கற்பிற் கிளவித் தொகையே.

(ந. அ கற்பு. 2)

இவற்றுள்,

### இல்வாழ்க்கை.

கிழவோன் மகிழ்ச்சி கிழத்தி மகிழ்ச்சி
பாங்கி மகிழ்ச்சி செவிலி மகிழ்ச்சியென்
றீங்கு நால்வகைத் தில்வாழ்க் கையே

(ந அ கற்பு 3)

தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தலும்
தலைவனைப் பாங்கி வாழ்த்தலும் தலைவியை
வரையுநாள் அளவும் வருந்தா திருந்தமை
உரையா யென்றலும் பெருமக ளுரைத்தலும்
தலைவனைப் பாங்கி வரையுநா ளளவும்
நிலைபெற வாற்றிய நிலைமை வினவலும்
மன்றன் மனைவருஞ் செவிலிக் கிருவர்
அன்புற வுணர்த்தலும் வாழ்க்கைநன் றறைதலும்
மணமனைச் சென்று வந்த செவிலி
பொற்றொடி கற்பியல் நற்றாய்க் குணர்த்தலும்
நன்மனை வாழ்க்கைத் தன்மை யுரைத்தலும்
அன்னவர் காதல் அறிவித் தலுமென
இன்னவை பத்தும் இல்வாழ்க்கை விரியே.

(ந. அ கற்பு. 4)

### தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தல்.

தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தல் — என்பது, கொடாமற் கொண்ட களவின் வழிவந்த கற்பொழிந்துழிக் கொடுக்கக்கொண்ட

களவின் வாராக் கற்பு முடிந்திடத்து இல்வாழ்க்கையை யடைந்த தலைவன் தலைவியைப் பார்த்துக் களவு வெளிப்படாமுன்னுங் களவு வெளிப்பட்ட பின்னும் அனுபவித்த துன்பத்தின்கண் இன்பமெல்லாம் ஒழிந்து குரவரிற் புணர்ச்சியாகிய இன்பத்தை நாமிருவரும் அடைந்து இல்வாழ்க்கையைப் பெற்றோம் இவையெல்லாம் நமக்கு வந்தவை தனக்கு வந்ததாக நின்னுயிர்ப் பாங்கி யுள்ளத்தில் வைத்த கருணை யெனத் தலைவன் மகிழாநிற்றல்

(380) காமுற் றுழந்தப் படுமிடுக் கண்ணுங் களைந்தின்பமே
நாமுற்று நன்மனை வாழ்வெய்தி னோமிவை நம்புதொண்டர்
[1]தோமுற் றிடாதருள் குற்றாலர் வெற்பினத் துன்பமெலாந்
தாமுற்ற தாகநின் பாங்கிவைக் கின்ற தயாவதுவே.

இணைபெற அணைமேல் இல்லிடை யிருக்கத்
துணைநலன் அடைந்தோன் தோழியைப் புகழ்தல்.

**தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.**

தலைவனைப் பாங்கி வாழ்த்தல் – என்பது, தலைமகளுடன் நீவிர் இருவீரும் எக்காலமும் இளமையும் யாக்கையும் ஒருபடித்தாயிருக்கவும் நாளுக்கு நாள் செல்வம் மிக்குமிக்கு உயர்ந்தோங்கவும் இந்தப் புவியிடத்துச் சந்திராதித்தருள்ளளவும் குமர நாயகனும் வள்ளி நாச்சியாரும் போல வாழ்ந்திருக்கக் கடவீரெனப் பாங்கி வாழ்த்தாநிற்றல்.

(381) விடம்பான மாக்குன்குற் றாலர்வெற் பீர்மின் னெடுமிளமை
யுடம்பான தையுறச் செல்வமெந் நாளு முயர்ச்சிபெற்றுத்
தடம்பா னுவுஞ்சந் திரனு முளவரை காலத்துநீர்
[2]கடம்பானும் வள்ளியும் போல்வாழ்ந் திருக்கக் கடவதுதே.

இல்வாழ் வடைந்த இறைவனை நோக்கி
நல்வாழ் வுறுகநற் பாங்கி வாழ்த்தல்.

**பாங்கி தலைவியை வரையு நாளளவும் வருந்தா திருந்தமை யுரையா யென்றல்**

பாங்கி தலைவியை வரையு நாளளவும் வருந்தா திருந்தமை யுரையா யென்றல் —என்பது, தலைமகன் இருமுது குரவோரும் அறிய மாலையிட்டு மன்றற் புணர்ச்சியாகாமுன் அணிவளை உண்டி அனைத்தும்

---

1 தோம்–தோஷம் என்பதன் மரூஉ. குற்றம். 2 கடம்பன் - முருகன், நீட்டல் விகாரம் பெற்றது. (எதுகை நயம் நோக்கி)

பொருந்தா வண்ணமே; மன்மதன் போர்செய்ய அது மயக்கத்தை என்னென்று தாங்கலுற்றாய்? எனக்குச் சொல்வாயாகென தலைவியைப் பாங்கி வினவா நிற்றல்.

(382) அடிமா [1]லையற்குமெட் டாதகுற் றாலர் அணிவரையார்
[2]கடிமா லையிட்டுக் கலவாமுன் வேள்பொற் கலனிருகைத்
தொடிமாலை யுண்டி விரும்பாமற் போர்புரிந் துங்குறப்பெண்
கொடிமாலை யென்னென்று தாங்கலுற் றாய்கொடி தாமுரையே.

மணம்புரி யளவும் மதன்பகை தடிந்த
துணம்புரி வளையை இதளையுரை யென்றல்.

**பெருமகளுரைத்தல்.**

பெருமகளுரைத்தல் - என்பது, மன்மத வருத்தத்தாற் சரீரம் நொந்தேனென்று நீ சிந்திக்க வேண்டியதன்று. குமரநாயகனைப் போல தலைமகன் வந்து கையுறை தந்தருளிய பெலத்தினாலே அந்த முறைமையைக் குறித்துப் பஞ்ச பாணங்களால் நோவப் போர்செய்யா திருந்தானெனத் தலைமகள் வருந்தாதிருந்தமை பாங்கிக்குச் சொல்லா நிற்றல்.

(383) நீயாக நொந்தன னென்றெண்ண வேண்டில நேரிழையே
தாயாக வெம்மைப் புரந்தகுற் றாலத் தலைவர்தருஞ்
[3]சேயாக வந்தன்பர் மாலை கொடுத்த திறனறிந்தே
நோயாக மாரன் பொராதிருந் தான்முறை நோக்கியுமே.

அண்ணல் தன்முறை யால்அனங் கன்பொராத்
திண்மை பாங்கிக்குத் தெரிய வுரைத்தல்

**தலைவனைப் பாங்கி வரையுநாளளவு நிலைபெற ஆற்றிய நிலைமை வினுதல்.**

தலைவனைப் பாங்கி வரையுநாளளவு நிலைபெற ஆற்றிய நிலைமை வினுதல் — என்பது, மன்மதன் புட்பபாணங்கள் தைத்த புண்ணினை மாற்றுதற்கு இந்த மருந்துபோன்றதோர் தலைமகள் இவ்வண்ணம் வாரா முன்னமே அந்த விதனம் பொறுத்தருளியது எவ்வாறெனப் பாங்கி தலைவனை வினவா நிற்றல்.

1 அயன்-பிரமன். 2 கடிமாலை-மணமாலை. 3 சேய்-முருகனுகிய குழந்தை. திருமாலின் புத்திரனை மன்மதனுக்கு அம்மாலின் மருமகனை முருகன் அத்தான் முறை ஆதலின் அத்தான் மதினியை எய்யலாகாது என்றிருந்தனள்.

(384) முதனம் பரமர்நங் குற்ருல நாதர் முகில்திளைக்கச்
[1]சதனம் திகழ்செண் பகாடவி சூழூந் தடவரையீர்
[2]மதனம் புதைத்தபுண் மாற்றற்கிவ் வல்லி வருமுனந்த
[3]விதனம் பொறுத்தவை யெவ்வா றெனக்கு விளம்புகவே.

*மின்றலெய் தளவும் மின்னனை மதனை*
*வென்றதெவ் வாறென மெல்லியல் வினையது.*

**மன்றன் மனைவருஞ செவிலிக்கு இருளை அன்புறவுணர்த்தல்.**

மன்றன் மனைவருஞ் செவிலிக்கு இருளை அன்புறவுணர்த்தல் — என்பது. பெருமை பொருந்திய மணமனைச் சென்று பார்க்க வந்தருளிய தாயானவளே! நினது பெண்மகள் கொண்டைச்சொருக்கினில் வாடாத பூவும், நெற்றிக்கண் அழியாத திலதமும், தலைவனது குற்றேவற்கு ஒன்றில்லையெனத் தேடாத சிந்தையும் பெற்றிருக்கிருள். இதனைப் பார்த்து அறிக அவர் செய்தருளிய அன்பையெனப் பாங்கி அவட்கு அன்புறவுணர்த்தாநிற்றல்.

(385) [4]கோடாருஞ் சித்ர நதியார்குற் ருலர் குளிர்வரைவாய்ப்
[5]பீடார் மணமனைக் கண்வரும் அன்னைநின் பெண்முடிமேல்
வாடா மலரும் அழியாத் திலதமு மற்றுமொன்றைத்
தேடா நினைவுமுற் ருளிநிற் காணன்பர் செய்யுமன்பே.

*மணமனை வந்த மாதினுக் கிதனை*
*துணைவர் தயவு கூற நிற்றல்.*

**பாங்கி வாழ்க்கை நன்றறைதல்.**

பாங்கி வாழ்க்கை நன்றறைதல் — என்பது, தலைமகனது பேரழகைக் கவர்ந்தொழுகத் தக்கது அடிக்கடி அதிசயித்து மெல்லென நோக்கா நின்ற கண்களும் குற்றேவல் வழுவாது செய்தொழுகி நின்று பாதுகாத்தலும் விருந்துகள் வந்துழி அதனை ஓம்புதற்குரியதோர் உவப்பும் பார்த்தளவில், அருந்துதி நாச்சியார்க்கு இணையாகவே பெற்றிருக்கிருள். ஆதலால் இவள்தானே இந்தப் பூலோகத்துக்கு மாதாவாமெனத் தன் மாதாவுக்குப் பாங்கி தலைமகள் வாழ்க்கைச் சிறப்புரையாநிற்றல்.

---

1 சதனம்- இலை. 2 மதன் + அம்பு 3 விதனம்—வேதனை 4 கோடு-கரை.
5 பீடு—பெருமை.

(386) திருந்து [1]திவாகரக் கண்ணார்குற் றாலர் சிலம்பிடத்தே
பொருந்து[2]திர்க் காலன் பரைமெல்ல நோக்கலும் போற்றுதலும்
விருந்துதி காலத் துவகையும் ஐயமென் பார்க்கிடலும்
அருந்துதி யாகப்பெற் றாளிவ ளேபுவிக் கன்னையன்னே.

*பெருந்தகைக் குரிய பெண்மகள் வாழ்வை*
*அருந்துதிக் கிணையென் றவளைக் குணர்த்தல். (அனை-அன்னை)*

**மணமனைச் சென்று வந்த செவிலி பொற்றொடி கற்பியல் நற்றாய்க் குரைத்தல்.**

மணமனைச் சென்று வந்த செவிலி பொற்றொடி கற்பியல் நற்றாய்க் குரைத்தல் - என்பது, குற்றேவல் செய்தொழுகுந் திறனில், தலைமகன் செய்யெனச் சொல்லிய தொன்றையும் பிழையாது செய்வதனால், நின்மகள் பெய்யென்ற காலமெல்லாம் பெய்யத் தகும் நல்ல மழையென, சென்று வந்த செவிலித்தாய் நற்றாய்க் குணர்த்தா நிற்றல்.

(387) மெய்யென்ற தொண்டர்க்கு மெய்யர்குற் றாலர் வியன்கிரிமேல்
மையென்ற வார்குழல் மாதேகுற் றேவலின் மன்னவர்தாம்
செய்யென்ற தொன்றையும் எள்ளாது சொற்படி செய்வதனாற்
[3]பெய்யென்ற காலத்திற் பெய்யுநன் மாரியும் பெய்வளைக்கே.

*செய்யெனல் பிழையாத் திறனால் நன்மழை*
*பெய்யெனப் பெய்யும் பெய்வளைக் கென்றல்.*

**நன்மனை வாழ்க்கைத் தன்மை யுரைத்தல்.**

நன்மனை வாழ்க்கைத் தன்மை யுரைத்தல் - என்பது, பஞ்ச தருக்களும் நீங்காது நின்று ஏவல் செய்தொழுகிய தேவேந்திரனது பெருவாழ்வானாலும் இந்தப் பூலோகத்துக்குத் தெய்வ வடிவாகத் திருவுருக்கொண்டருளிய நின்மகள் மனைவாழ்க்கைச் சிறப்புக்கு ஒப்பாகா தெனச் செவிலித்தாய் நற்றாய்க்குணர்த்தாநிற்றல்.

(388) [4]பொருவுடை யார்தமக் கேதம்மை வெம்மைப் புலியதளின்
திருவுடை யார்திருக் குற்றாலர் வெற்பிற் சிறக்கும்[5]பஞ்ச
தருவுடை யான்மிக்க வாழ்வா கினுமித் தரையிற்றெய்வ
உருவுடை யான்மனை வாழ்க்கை நலத்துக்கொவ் வாதனையே

1 திவாகரன்-சூரியன். 2 திர்க்கு-கண். 3 தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் மழை. திருக்குறள் 55. 4 பொரு-ஒப்பு. 5 பஞ்சதருவுடையான்-இந்திரன். பஞ்சதரு-கற்பகம் முதலிய தெய்வ விருக்ஷங்கள் ஐந்து.

*இந்திர வாழ்வும் இணையல தலைவி*
*மந்திர வாழ்வின் வளமைக் கென்றல்.*

**அன்னவர் காதல் அறிவித்தல்.**

அன்னவர் காதல் அறிவித்தல் - என்பது, உலகோற்பத்தி பண்ணுவித்தற்குப் பிரமா முதலாகிய ஐவர்கள் தொழிற்கும் அநிக்கிர கத்தைச் செய்யக் குழல்வாய்மொழி நாச்சியாரான திருவருளை திருமேனியாய்க்கொண்ட குற்றால நாயகருண்மையைக் குறித்து, இக் கற்புடையாளைப் பிரியாதிருந்தால் நமது செங்கோன்மை தானே நடக்குமெனத் தலைமகன் தலைமகளைப் பிரியாது இருக்கும் விருப்பத்தை நற்றாய்க்குச் செவிலி வந்து அறிவியாநிற்றல்.

(389) அழகு புவிசெய்ய வை[1]யைந் தொழிற்கு மநிக்கிரகக்
குழன்மொழி யைப்பிரி யாதிருந் தார்நங்குற் றாலரென
மழலையங் கிள்ளை மொழியைப் பிரிவின்றி வாழ்ந்தனர்மன்
நிழல்வை யகத்துச்செங் கோன்மை தனுதின் நிகழுமென்றே.

*கற்பருந் தவத்துங் கவினெனத் தலைவன்*
*இற்பிரி யாமை யீன்றாட் குணர்த்தல்.*

இவற்றுள், தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தலாகிய வொன்றும் கிழவோன் மகிழ்ச்சிக்கும், தலைவனைப் பாங்கி வாழ்த்தல் முதலாகச் செவிலிக்கு வாழ்க்கை நன்றறைதலீறாகச் சொல்லப்பட்ட ஆறனுட் பெருமக ளுரைத்தலாகிய வொன்றும் கிழத்தி மகிழ்ச்சிக்கும், அல்லாத ஐந்தும் பாங்கி மகிழ்ச்சிக்குஞ், செவிலி நற்றாய்க்குக் கற்பியல் உரைத்தல் முதலாகிய மூன்றுஞ் செவிலி மகிழ்ச்சிக்கு முரியவாமெனக் கொள்க. ஆகச்செய்யுள் (389) இல்வாழ்க்கைமுடிந்தது.

## பரத்தையிற் பிரிதல்.

*வாயில் வேண்டல் வாயில் மறுத்தல்*
*வாயில்நேர் வித்தல் வாயில் நேர்தலென்*
*றாய பரத்தையின் அகற்சிநால் வகைத்தே.*

(ந. அ. கற்பு 5)

---

1 ஐந்தொழில்-சிருட்டி, ஸ்திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரஹம்.

*காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்*
*கேதுவி தாமவ் விறைவிக் கென்றலும்*
*தனித்துழி யிறைவி துனித்தழு திரங்கலும்*
*ஈங்கிது வேதெனப் பாங்கி வினாதலும்*
*இறைமகன் புறத்தொழுக் கிறைமக ளுணர்த்தலும்*
*தலைவியைப் பாங்கி கழறலுந் தலைவி*
*செவ்வணி அணிந்து சேடியை விடுப்புழி*
*அவ்வணி உழையர்கண் டழுங்கிக் கூறலும்*
*பரத்தையர் கண்டு பழித்தலும் பரத்தையர்*
*உலகியல் நோக்கி விடுத்தலிற் றலைவன்*
*வரவுகண் டுவந்து வாயில்கள் மொழிதலும்*
*வரவுணர் பாங்கி யரிவைக் குணர்த்தலும்*
*முதிரா முகிழ்முலை எதிர்கொண்டு பணிதலும்*
*புணர்ச்சியின் மகிழ்வுமென் றுரைத்தபன் னொன்றும்*
*உணர்த்த வுணரும் ஊடற் குரிய*

(ந அ. கற்பு 6)

**காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்கேது விதாம் இறைவிக் கென்றல்.**

காதலன் பிரிவுழிக் கண்டோர் புவிக்கேது வீதாம் இறைவிக்கென்றல்— என்பது, மன்றல் கொண்டியற்றி மணப்பள்ளிக் கெழுந்தருளியிருந்த தன் பின்னர்த் தலைமகளது மணிமாளிகையை விட்டு விழாப்போந்த இடத்து அருங்கலை விநோதனாகிய தலைமகன் தன்னை வந்து சேவியா நிற்கும் கணிகையார் அபிநய பெந்தனத்துட் கட்டுப்படக் கண்டோம். இஃதெல்லாம் அவட்கு ஒரு புலவிக்கேதுவாம் எனக் கண்டோர்கள் எண்ணா நிற்றல்.

(390) துணிகை யதாகத் துறந்தோர்க் கொருதுணை தூய்மலர்தூப்
பணிகைசெய் வார்க்கருள் செல்வர்குற் றாலர் பனிவரைமேல்
அணிகை வளைச்சி இல் விட்டே உலாவந் தருங்கலைமான்
[1]கணிகை வலைப்படக் கண்டோ மிதுகறுப் பாமவட்கே.

*வீதியிற் போந்தோன் விருப்பினைக் கண்டோர்*
*மாதினுக் கூடல் வருமெனக் குறித்தல்.*

1 கணிகை—விலைமாது

### தனித்துழி இறைவி தனித்தழுதிரங்கல்.

தனித்துழி இறைவி தனித்தழுதிரங்கல் — என்பது, நாணுத லாலும் பேணுதலாலும் இதுவரைத் தலைமகன் திருமேனியழுந்தப் புல்கிற்றறியேன் இப்பால் வரைவின் மகளிர், தோள் சேருங்காலத்து உடையவர்க்கடிமையாகச் சுட்டதோர் சூலமுத்திரைக் காய்ப்பு அழுத்த வுஞ் செய்யும். அன்றியும் கைவளைகள் தலைமகன் வெரிநிடை யீர்ப்பவும் புல்குமெனத் தலைமகள் நினைத்தழுங்கா நிற்றல்

(391) விரி[1]சூலத் [2]தாதெனை யாண்டகுற் றூலர் விளங்கொளிசேர்
திரிசூலத் தார்வெற்பர் மெய்யுற் றழுந்திடச் சேர்ந்திலன்யான்
எரிசூலக் காய்ப்பழுத் துந்தோள் அணையில் இறைவரைக்கைச்
[3]சரி[4]சூலத் தாள்புறங் கட்டி யலையுந் [5]தனப்பெண்டிரே.

நாணுப் பரத்தையர் நணிதணை வாரெனப்
பேணு திறத்தும் பெய்வளை யிரங்கல்.

### ஈங்கிது வேதெனப் பாங்கி வினுதல்.

ஈங்கிது வேதெனப் பாங்கி வினுதல் - என்பது, மிகவுங் கொடிய தொரு தாபாக்கினி பற்றியெரிவதுபோலும் நினது திருவுள்ளத்திற்கு ஓர் சந்தாப முற்றதியாது? அதனை யெனக்குத் தோன்றச் சொல்வாயா கெனப் பாங்கி தலைமகளைக் கேளாநிற்றல்.

(392) [6]பந்தா பரணத் தனத்தி குழன்மொழி பாகன்மனச்
செந்தா பதர்தவஞ் செய்திரி கூடத்திற் சேயிழையே
வெந்[7]தாபம் பற்றி யெரிவது போலு மிகவுநெஞ்சிற்
[8]சந்தாப முற்றதென் னேபுகல் வாயிது தானெனவே.

அழுதிரங் கியது யாதெனப் பாங்கிப்
பழுதில் நன்மகளைப் பரிந்து வினுதல்.

### இறைமகன் புறத்தொழுக் கிறைமக ளியம்பல்.

இறைமகன் புறத்தொழுக் கிறைமக ளியம்பல் — என்பது, காட்சி முதலாகச் சாக்காடு ஈறாய் உள்ள பத்து அவத்தைக்கும் இடப்

---

1 சூல்—கருப்பம் 2 தாது—சப்த தாதுக்கள், அவை இரதம், இரத்தம், எலும்பு, சுக்கிலம், தசை, தோல், மூளை, என்பன. 3 சரி—கைவளை. 4 சூலம்- ஆயுதம். 5 தனப்பெண்டிர்—பொருட் பெண்டிராகிய பரத்தையர். 6 பந்து—பந்துபோன்ற. 7 தாபம்—வெப்பம். 8 சந்தாபம்—துன்பம்.

பட்டு மறவாது வந்துவந்து நின்னைத் தன்கைக்கண்ணியும் தழையும் ஏற்கச் செய்வித்து என்னை அந்தக் கண்ணிக்குள்ளாக்கி மணந்ததுமன்றி நம் ஐயரும் அன்னையுங்கொடுக்க அவர் ஐயரும் அன்னையும் வாங்க வதுவைச்சடங்கொடு மணஞ் செய்து கொண்டவர் அந்தப்புரத்திலே என்னைத் தனியே வைத்துப் பரத்தையர் சேரிக்குஞ் செல்லலுற்றார். இது நான்செய்த பாவமெனத் தலைமகள் பாங்கிக்குச் சொல்லாநிற்றல்.

(393) புரத்தையந் நாள்வென்ற குற்றால நாதர் பொருப்பிடத்தே
[1]யுரத்தை யராதுவந் தேதன்கைக் கண்ணிக்குள் ளாக்கியென்னைக்
கரத்தை யுறப்பிடித் தேமணஞ் செய்தவர் காரிகையே
பரத்தையர் சேரிக்குஞ் சென்றார்முன் நான்செய்த பாவமிதே.

களவினுங் கற்பினுங் கலந்தனை இல்வைத்
துளர்புற வொழுக்கத் துவந்தா ரென்றது

தலைவியைப் பாங்கி கழறல்.

தலைவியைப் பாங்கி கழறல் — என்பது கிருட்டிணாவதாரத்துத் திருமாலானவர் பதினாறாயிரங் கோபால மங்கையருடனுஞ் செய்த லீலா விநோதத்துக்குத் திருமகளானவள் ஊடல் செய்ததுண்டோ? அஃதில்லை. ஆதலால், தலைமகன் பொருட்பெண்டிரிடத்துச் சென்றாலும் நொந்தமை நின் கற்புக்கு நன்றல வென்னத் தலைவியைப் பாங்கி கழறாநிற்றல்.

(394) [2]அடையிடை தண்பனி முத்தாகச் சிந்துங்குற் றாலர்வெற்பில்
[3]முடையிடை மங்கையா மால்சேர்ந்த மே[4]பொன் முனிந்ததுண்டோ
மடையிடை சங்கந் தவழ்புன லூரன்[5]பொன் மாதர்மனைக்
கடையிடை செல்லினும் நோதல்நன் றல்லநின் கற்பினுக்கே.

மாலிடை மங்கையர் மணந்தமை கூறி
நூலிடை மங்கை நோதலைக் கழறல்

செவ்வணி யணிந்து சேடியை விடுத்தல்.

செவ்வணி யணிந்து சேடியை விடுத்தல் — என்பது, காவியும் தாம்பிரமும் குருமுத்திரையாகத் தரித்துக்கொண்டு சித்திரசபை நிருத்

1 உரத்து + அயராது—ஊக்கம் தளராது. ஐசாரியை. 2 அடை—இலை. 3 முடையிடை மங்கையர்—முடைநாற்றத்தையுடைய கோபஸ்திரீகளை. 4 பொன்—இலக்குமி 5 பொன்மாதர்—விலைமகளிர் ஆகிய பரத்தையர்.

தர்க்கு ஆளடிமையானவர்களைச் சிறிதறிவின்மையர் மதியார். அதனாலே அடிமைகொண்டருளிய அக்கடவுளர் இகழாது இரட்சிப்பார். அவைபோலச் சேரிக்கட் பரத்தையர் நாவினாற் பழிப்பார். பழித்தது கொண்டென்னும்? நீ செவ்வே செவ்வணி யணிந்து செல்லக் கடவாயெனத் தலைவி அவ்விடத்துத் தலைவன் முன்னர்ச் சேடியை விடுப்பியாநிற்றல்.

(395) மா[1]வடுப் பூண்செந் துகில்புனை வாரைவன் றீம்பரெண்ணார்
[2]கா[3]வடு சித்ர சபையினர் தானிக ழார்புரப்பார்.
நா[4]வடுக் கூறுவர் சேரியர் கூறிலென் னுமவர்முன்
போவடுப் போன்றகண் ணிசெவ் வணியும் புனைந்துகொண்டே.

வாடிய மனத்தை மறைத்தாள் மனைவி
சேடியை விடுத்துச் செம்மற் றுணர்த்தல்.

**அவ்வணி உழையர் கண்டழுங்கக் கூறல்.**

அவ்வணி உழையர் கண்டழுங்கக் கூறல் – என்பது, தலைமகள் தலைமகன் வருவதாகச் செவ்வணியணிந்து விடுத்த சேடியை அவ்விடத்துப் பரத்தையர் கண்டால் நகைப்பாரென இளையர் கண்டழுங்காநிற்றல்.

(396) சங்கோ டிசையுங் கமுகு மெனுங்[5]கந் தரத்திநன்[6]றொ
கங்கோடி பாய்பொழிற் குற்றாலர் வெற்பர்கண் டேவருகச்
செங்கோ டிகஞ்செம் மலர்புனைந் தேவிடுஞ் சேடியைக்கண்
டங்கோ டிசைதன வேசியர் தானகைப் பாரெளிதே.

சேடியை விடுப்பச் செவ்வணி கண்டு
நாடிய இளையர் நனிதழுங் கியது.

**செவ்வணி பரத்தையர் கண்டு பழித்தல்.**

செவ்வணி பரத்தையர் கண்டு பழித்தல் – என்பது, தலைமகள் கையினாற் செவ்வணி யணிந்து இவ்விடத்துய்ப்ப ஓர் சேடிவந்து 'எங்களை இவ்வண்ணங் கண்டவர் எங்கே' எனக் கண்டோம் இதனை யாதென்று சொல்லலா மெனப் பரத்தையரிகழாநிற்றல்.

---

1 வடு–இளங்காய். 2 கா–காவி. 3 வடு-தாம்பிரம். 4 வடு-குற்றம். 5 கந்தரம்–கழுத்து. 6 நாகம்–குரங்குகள்.

(397) ஐவ்வண்ணங் கொண்டெழு மைம்பூத நாதர்குற் றாலர்வெற்பில்
மைவ்வண்ணங் கொண்ட குழலாள்கை யார வணிந்துவிடச்
செவ்வண்ணங் கொண்டொரு சேடியிங் கேவந்து சேரியரே
இவ்வண்ணங் கண்டவ ரெங்கேயென் றாளிதை யென்சொல்வதே

*செவ்வணி யணிந்து சேடியை விடுப்ப*
*அவ்வணி பரத்தையர் அந்நகண் டிகழ்தல்.*

**பரத்தையர் உலகியல் நோக்கி விடுத்தல்.**

பரத்தையர் உலகியல் நோக்கி விடுத்தல்-என்பது, வடவாக்கினி போன்ற விகாராக்கினியினன் நம்மனைவியானவர் செவ்வணி யணிந்து ஒரு சேடியை இவ்விடத்துச் செல்ல விடுத்தார். அங்ஙனஞ் செல்லாதிருக்கில் உலகியற்கையன்று. செல்லுவீராகவெனப் பரத்தையர் தலைமகனை விடுத்தல்.

(398) [1]துடவையுஞ் சோலையுஞ் சூழுங்குற் றாலத்தர் தொல்வரைமேல்
[2]வடவைய தாகு மனவேட்கை யால்நம் மனைவிசெய்ய
புடவையும் பூவையும் வேய்ந்தொரு சேடியைப் போக்கினள்மால்
விடவை யகத்தியற் கேலாது சென்றிட வேல்மன்னரே.

*சேடியைக் கண்ட சேரிய ருலகின்*
*நீடிய லறிந்து நிருபனை விடுத்தல்.*

**வரவு கண்டுவந்து வாயில்கள் மொழிதல்.**

வரவு கண்டுவந்து வாயில்கள் மொழிதல் — என்பது, சேரிப் பரத்தையர் காணும்படிச் சேடியொருத்தி செவ்வணி கொள்ள அங்ஙனங்கண்டு தலைமகன் வாராநின்றானென வாயில்கள் தலைவிக்கு வந்து வந்து சொல்லாநிற்றல்.

(399) கூரிய சூலப் படையார்குற் றாலநங் கோன்வரைமேற்
சேரியர் காணுறச் சேடியங் கேகச்செங் கோலங்கொண்டே
[3]தூரியம் ஆர்க்கும் கடைத்தலைக் கேவந்து தோன்றலுற்றார்
ஆரியர் நாட்டன்பர் மின்னே யநுபவிப் பாயின்பமே.

*தாயினு மினிய தலைவிக் கிறைவர்*
*வாயில்கள் பலவும் வந்துவந் துரைத்தல்.*

---

1 துடவை-பூந்தோட்டம். 2 வடவை-ஊழித்தீ 3 தூரியம்-முரசு.

**வரவுணர் பாங்கி யரிவைக் குணர்த்தல்.**

வரவுணர் பாங்கி யரிவைக் குணர்த்தல் — என்பது, பெறு பொருட்கு உவந்து தோள் பலர்க்கீயும் பரத்தையரைப்பிரிந்து தலைவர் இங்ஙனே வந்தார். எதிர் சென்று போற்றச் செய்வாய். இதுவே கற்புக்கியற்கை யெனப் பாங்கி வரைவுணர்ந்து உரையாநிற்றல்.

(400) அதிர்கொண்டு பாரில் விழவே யமனை யடர்த்தடியார்
சதிர்கொண்ட நாயகர் குற்றாலர் வெற்பிற் றனவிருப்பால்
[1]வெதிர்கொண்ட தோள்பலர்க் கீவாரை விட்டுநம் வேந்தர்வந்தார்
எதிர்கொண்டு போற்றல்செய் மின்னேசொன் னேன்கற் பினுக்கியல்பே.

வரவுணர்ந் தெதிர்செல் வாயெனப் பாங்கி
அரவக லல்குற் கன்பொடு பகர்தல்.

காதற் பரத்தையுங் காமக் கிழத்தியுங்
கற்புக்கே யுரியார் அக்குடிப் பிறப்பினால்
ஊடற் குரியார் பழித்துக் கூறவென்(றறிக).

**முதிரா முகிழ்முலை யெதிர்கொண்டு பணிதல்.**

முதிரா முகிழ்முலை யெதிர்கொண்டு பணிதல் — என்பது, உலகின்கண்ணுள்ளார் சில நாள் மழை மறுத்துப் பின்பு பெய்யுங் காலத்து முன்னமே கெடுத்தமை மறந்து கொடுத்ததையே யுவந்தது போலத் தலைமகன் பரத்தையிற் பிரிந்தும், வந்ததனால் ஊடலை நீங்கி யுணர்தலை யுவப்பதே கடனெனத் தலைவி பாங்கிக்குச் சொல்லாநிற்றல்.

(401) பூமேவும் வெள்ளைப் புகழார்குற் றாலர் பொருப்பின்[2]மண்ணோ
மாமேக வாரி வறந்துபின் னல்கினும் [3]வாய்த்திதென்பார்
தாமே பரத்தையில் நீங்கியு மன்னர்வந் தாற்பணிதல்
நாமே செயுத்தகு மின்னேயவ் வாறு [4]நகையுடைத்தே.

பாங்கி யுணர்த்தப் பரிந்துவந் தூடல்
நீங்குங் கிழத்தி நெடுந்தகைப் பணிதல்.

**புணர்ச்சியின் மகிழ்தல்.**

புணர்ச்சியின் மகிழ்தல் — என்பது, திருப்படை வீட்டின் கண்ணே மலரணைமேற் கூடியிருக்குங் காலந்தோறும் இன்பத்தை

---

1 வெதிர்—மூங்கில். 2 மண்—உலகத்தோர். 3 வாய்த்திது—தப்பாமையையுடையது.
4 நகை—இன்பம்.

அறிக வியப்பு வியப்பாகக் கொடுத்தமையால் உனக்கு உவமை யாதென்று சொல்லலாமெனத் தலைவன் கலவியின் மகிழாநிற்றல்.

(402) [1]பணையொன்று தோளி குழன்மொழி பாகர்[2]பற் றார்புரத்தைக் கணையொன்றி னால்வென்ற குற்றாலர் வெற்பிற் கலந்துமலர் அணையொன்று காலந் தொறுந்தொறு மின்பதி கந்தந்தாரால் இணையொன் றுனக்கெவற் றைப்பகர் வேனினி யேந்திழையே.

அணையுந் தொறுந்தொறு மதிகமின் புறலால்
இணையின் றுனக்கென் றிறைவியைப் புகழ்தல்.

உணர்த்த வுணரும் ஊடல் முடிந்தது.

## உணர்த்த வுணராவூடல்.

வெள்ளணி யணிந்து விடுப்புழிப் புள்ளணி
மாலைவேல் அண்ணல் வாயில் வேண்டலும்
தலைவிநெய் யாடிய திதனை சாற்றலும்
தலைவன் தன்மனத் துவகை கூர்தலும்
தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றலும்
தலைவி யுணர்ந்து தலைவனொடு புலத்தலும்
பாணன் முதலாப் பாங்க ளீறாப்
பேணிய வாயில்கள் பெரியோன் விடுத்துழி
மறுத்தலும் விருந்தொடு வந்துழிப் பொறுத்தல்கண்
டிறையோன் மகிழ்தலும் இறைமகள் விருந்துகண்
டொளித்த வூடல் வெளிப்பட நோக்கிச்
சீறே லென்றவன் சீறடி தொழலும்இஃ(து)
எங்கையர் காணின் நன்றன் றென்றலும்
அங்கவர் யாரையும் அறியே னென்றலும்
காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தலும்
தாமக் குழலியைப் பாங்கி தணித்தலும்
தணியா ளாகத் தலைமகன் ஊடலும்
அணிவளை பாங்கி அன்பிலை கொடியையென்
றிணர்த்தார் மார்பனை யிகழ்தலும் பிறவும்
உணர்த்த வுணரா வூடற் றுறைய.

(ந. அ. கற்பு 7)

1 பணை—மூங்கில். 2 பற்றார்—பகைவர்.

**வெள்ளணி யணிந்து விடுத்தல்.**

வெள்ளணி யணிந்து விடுத்தல் – என்பது, திருமகட்போன்ற தலைமகள் புண்யபுத்திரனைப் பெற்றருளினளென்பதறியப் பரத்தையிற் பிரிந்த தலைவர்க்குச் சரசோதி போலும் நிறத்தவாய வெள்ளணி யணிந்து ஒரு சேடியை வாயில்கள் விடுப்பக் கண்டோர் மகிழ்ந்துரையா நிற்றல்

(403) உன்போ லொருதுணை யாரெமக் கென்றுள் ளுருகியன்பர்
அன்[1]போல மேயிட் டழைக்கவந் தாண்டகுற் றாலர்வெற்பிற்
பொன்போலு மான்மைந் தனைப்பயந் தாளெனப் பொற்பினிற்[2]பா
மின்போ லொருமின்னை மன்னர்முன் னேக விடுத்தனரே.

புத்திர னுதயம் புரவல னறியச்
சித்திரம் போலொரு சேடியை விடுத்தல்.

**புள்ளணி மாலைவேலண்ணல் வாயில் வேண்டல்.**

புள்ளணி மாலைவேலண்ணல் வாயில் வேண்டல் — என்பது, இம்மையினும் மறுமையினும் ஆகவேண்டியதோர் பலத்தை மிகவுந் தருதற்குரியதோர் மைந்தன் உதித்தமையால் இம்மைக்கு இழுக்குடைத்தாய பரத்தையர் வேட்கையை நீங்கினேன். யான் வருங்காலத்துச் சீறேலென்று தலைமகட்குச் சொல்வாயாகெனத் தலைமகன் பாங்கியை வேண்டாநிற்றல்.

(404) இகத்திற் [3]பரத்தை விருப்பொழிந் தேனிகத் தைப்பரத்தை
மிகத்தரு மைந்த னுதித்தமை யாலுமின் னேகமல
முகத்தொளி யாட்குப் பகரியான் வரின்முனி யேலெனவே
[4]மகத்தொழில் நாளும் புரியுங்குற் றாலர் வரையிடத்தே.

இகபர மிரண்டினு மின்ப மேதரு
மகவுதித் திடவவர் வாயில் வேண்டல்.

**தலைவி நெய்யாடியது இகுளை சாற்றல்.**

தலைவி நெய்யாடியது இகுளை சாற்றல் — என்பது, வருத்தமின்றி நுமது புண்ணிய குமாரனைப் பெற்று இரண்டு கையும் நிறையத் தக்கது எடுத்தவள் உவகையடைந்து இற்றைத்தினம் நெய்பெய்து நீரா

1 ஓலம்–கூப்பாடு. 2 பாமின்–கலைமகள். 3 பரத்தை–வேசி. 4 மகம்–யாகம்.

டியிருக்கிறாள். இது நீவிர் அறிவீரெனப் பாங்கி தலைவர்க்குச் சொல்லா நிற்றல்.

(405) [1]செய்யார மீனிற் றயங்கிய நன்னகர்ச் செல்வரெழு
[2]மையால நீள்வனத் தார்திரி கூட வரையண்ணலே
கையார மைந்தனைப் பெற்றெடுத் துள்ளங் களித்துமெய்யே
நெய்யாரப் பெய்துநன் னீராட லுற்றனள் நேரிழையே.

நெய்ப்பெய் தணைந்த நீராடி னள்வந
தெய்ப்புந் தவிர்கவென் றேந்தற் றுரைத்தல்.

**தலைவன் தன்மனத்துவகை கூர்தல்.**

தலைவன் தன்மனத்துவகை கூர்தல் — என்பது, தலைவி நெய்யாடியிருப்பக் கேட்டு அமைந்திருக்குந் தலைவன், பொன்மலை மேலே ஓர் வல்லி பசுங்கொடி யெடுத்து நீண்டு படர்வதுபோலும் இரண்டு கொங்கையின்கண் நெறித்தெழுந்த பச்சை நரம்புக்கும், அந்தக் கொங்கைச் சுரப்பு அருத்துவிப்பதாக மைந்தனை யணைத்தெடுத்திருக்குங் கைகட்கும் ஒருவரை ஒப்பாகச் சொல்லப்போமோ? சொல்லப் படாது இவளைக் களிகூரக் காணுநிற்பதென்றைக்கு? என்று மகிழ்ந்து ஆற்றாநிற்றல்.

(406) திருவரை வின்றி வளர்வள நன்னகர்ச் செல்வர்பொன்னம்
பருவரை மீதிற் பசுங்கொடி யோடிப் படர்வதுபோல்
இருவரைக் கொங்கைப் பசு[3]நாடிக் கும்மக வேந்துகைக்கும்
ஒருவரை யொப்பிடப் போமோகண் கண்டுவப் பாவதென்றே.

நெய்யா டியதோர் நேரிழை யொளிவைக்
கையா ரயிலோன் கருத்தினுள் ளுவத்தல்.

**தலைவிக்கவன் வரல் பாங்கி யுணர்த்தல்.**

தலைவிக்கவன் வரல் பாங்கியுணர்த்தல் — என்பது, கருப்பாசையத்துச் சென்ற நாளும் நாழிகையும் நிறைந்து பூலோகச் செனனேதயனாக மைந்தனைக் காணு முன்னமேயிருந்த வயாவும், வருத்தமும், பிறவி நோக்குற்றிடத்து நோதலும், பூமியின்கண் பிறந்தளவுள்ள மகிழ்ச்சியும், யாதென்று உன்னை வினவியறிதற்கு நின் வாயிலிடைக் குமரநாயகனைப் போலே தலைமகன் வந்து நின்றானெனத் தலைவிக்குப் பாங்கி யுணர்த்தா நிற்றல்.

1 செய்யார்—வயல் நிறைய. 2 மை—கருமை. 3 நாடி—நரம்பு.

(407) சிந்தனைத் தொண்டர்க் கருளுங்குற் றாலர் சிலம்பிடத்தே
[1]அமந்தனைக் காணுமுன் வருத்தமும் காண்பின் மகிழ்வுமென்னென்
றுந்தமைக் கேட்க மிகவு மவாவுற்றுள் வாயிலினிற்
கந்தனைப் போல்வந்து நிற்கலுற் றார்மன்னர் காரிகையே.

மைந்தனைப் பெறுங்கால் வருத்தமு மகிழ்வு
முந்தமை கேட்கமன் னுற்ற தென்றது.

### தலைவி யுணர்ந்து தலைவனொடு புலத்தல்.

தலைவி யுணர்ந்து தலைவனொடு புலத்தல் - என்பது, நாடகக் கணிகையர் விரும்புவார்க்கு உவப்பக் கச்சிறுற் பூட்டித் திறக்கின்ற தனங்களைத் தொட்டு அளைகின்ற கையினுல் எனது முலை யுண்ணு நின்ற பாலகன் உச்சிக் கிட்ட நெய்யுங் கண்ணுக் கிட்ட மையும் ஒன்று படப் புரட்டி யுண்டு உச்சிட்டமாகிய கொங்கைகளைத் தலைமகன் தீண்டுதல் செய்யாரெனத் தோழிக்குத் தலைவி புலவி யுரையாநிற்றல்.

(408) நச்சி லமுதுசெய் குற்றாலர் வெற்பில் நடனமின்னார்
கச்சி லடைத்துத் திறக்குந் தனந்தொட்ட கையின்மைந்த
னெச்சிலு முச்சியின் நெய்யுங்கண் மையுமெல் லாமுவட்டி
மிச்சி லெனத்தருங் கொங்கை தொடாரன்பர் மெல்லியலே.

பாங்கி யுணர்த்தப் பரிந்துணர்ந் திறைவன்
நீங்கெடுத் தியம்பிச் சேரா தூடல்.

### தலைவன் மக வேந்தல்

தலைவன் மக வேந்தல் - என்பது, பாங்கியின் உணர்த்தியும் உணராது ஊடலைக்கண்டு புலவிதீர்த்தலைச் சற்று நிறுத்தி, தேனுவும் வெள்ளிய நெல்வித்தும் அந்தணர்க் களித்துக் குற்றால நாயகர் திருவடிகளே துணையெனத் துறந்து தவஞ் செய்வார்க்குக் காவலும் கிரகாச்சிரமத்தார்க்கு நீதியும், வணங்கலர்க்கு வீரமாகிய திறமுஞ் செய்வாயாகெனத் தலைவன் மகவேந்தாநிற்றல்.

(409) கறந்தா ரமுதுண்ணத் [2]தேனுவெண் ணெற்கன கங்[3]குலத்திற்
சிறந்தார்க் களித்தண்ணல் குற்றாலர் பாதம் தெரிசிக்கவே
துறந்தார்க்குக் காப்புமில் வாழ்வோர்க்கு நீதியுந் துன்னலராய்
மறந்தார்க்கு வீரமுஞ் செய்வா யெனமக வேந்தினரே.

1. 'வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோயும் கவாஅன் மகற்கண்ட தாய் நீங்கியாங்கு' ஒப்பு நோக்கற்பாலது 2 தேனு-பசு. 3 குலத்திற் சிறந்தார்—அந்தணர்.

பிறைநுத லூடல்பிற் நீர்ப்ப வதன்முன்
இறைமகன் றன்மக வேந்தா நிற்றல்.

**பாணன் முதலாகப் பாங்கன் ஈறுப் பேணிய வாயில்கள்
பெரியோர் விடுத்துழிப் பாணன் வாயில் வேண்டல்.**

பாணன் முதலாகப் பாங்கன் ஈறுய்ப் பேணிய வாயில்கள் பெரியோர் விடுத்துழிப் பாணன் வாயில் வேண்டல் — என்பது, தலைமகனைப் புலந்து நீ சிறப்பார்த்த கண்ணினுற்றுனே குளிரவும் பார்க்கவேண்டும். நினது சன்னிதானத்துக்கு அவர் வருவதாக நினைந்து, எங்களைப் புரக்குந்தாயே! திருவாய் மலர்ந்து ஒரு சொல்லருளிச் செய்வாயா கெனப் பாணன் வேண்டாநிற்றல்.

(410) [1]வேயேயுந் தோளி குழன்மொழி பங்கர்தன் வெற்பர்தம்மை
நீயே சினத்தகண் ணலாற வேணும் நினைந்துதிரு
வாயே மலர்ந்துநின் சன்னதிக் கேவரு மாறொருசொல்
தாயே யருளிச்செய் வாய்பணிந் தேனின் றளிரடியே.

நீண்மனத் துனியார் நெடிதகல் புலவி
பாண்மகன் தீர்க்கப் பணியா நிற்றல்.

**பாணன் வாய்மறை**

பாணன் வாய்மறை — என்பது, எரியுண்டு கரிந்த காட்டிற் கொளுத்திய தீப்போல் எரியும் தீ ஆற்றுவித்தற்கு ஒரு சிறு காற்றும் செய்யுமாக வந்தனையோ? இதனலாறுது அதிகரிக்குமல்லது வேறில்லை யெனத் தலைவி பாணன்வாய் மறுத்தல்.

(411) கரிகின்ற வான்புனத் தூடே கொளுத்துங் கனலதுபோல்
எரிகின்ற தீக்கிளந் தென்றலும் செய்யும் எனவந்தையோ
விரிகின்ற யாழிசைப் பாணகுற் றாலர் விமலர்முத்தஞ்
சொரிகின்ற வெள்ளருவித்திரி கூடத் தொடர்வெற்பிலே.

தென்றலும் செய்யுந் தீயாற் றுவதோ
என்றதி கரிக்கு மென்றவள் மறுத்தல்.

**தலைவி பாணனை முனிதல்.**

தலைவி பாணனை முனிதல் — என்பது, குற்றாலக்கூத்தர் சன்னிதானத்துக்கு இனியதோர் யாழ்நரம்புளர்ந்து வருடாது இங்ஙு

1 வேய்—மூங்கில்.

னம் புண்பட்டிருக்கும் என்னை நாவினுல் வருடித்தனிவைத்தகன்ருர்க் காக வந்தவனே! பொருட்பெண்டிருடைய மயக்கம் அவர்க்கு ஒழியாது; ஆதலின் நீ தூரச்செல்வா யெனத் தலைவி பாணனை முனியாநிற்றல்.

(412) பனிமை தவழ்திருக் குற்ருலக் கூத்தர்க்குப் பாணியினுல்
இனிமை இயாழ்வரு டாதிங்ங னேவந் தெனைவருடத்
தனிமை யளாக்கினர்க் காய்வந்த பாண[1]கைத் தாற்புணர்வார்
[2]துனிமை யகும்விட் டகலாத வர்க்ககல் தூரவுமே.

மெல்லியல் பாணன் வேண்டலை மறுத்து
நல்லனன் றகலென நனிமுனிந் தகற்றல்.

பிறவும் வருவதோர் வாயில்கட்கும் இவ்வாறே யொட்டிக்கொள்க. பிறித்துரைக்கினுமாம்.

**பாங்கன் வாயில் வேண்டல்.**

பாங்கன் வாயில் வேண்டல் — என்பது, பாணன், கூத்தன், விறலி, பரத்தை, உழையர், கண்டோர், இவர் முதலிய வாயில்கள் வேண்டுமிடத்து அவர்களை முனிந்தமைபோல என்னையும் வெகுளவேண்டியதில்லை. என்வார்த்தையும் மறுக்கச்செய்வதன்று. உம்மைக் காணுவதாய்த் தலைமகன் இவ்விடத்து வருங்காலத்து ஊடலை விளையாது சிறிது உமது கருணைசெய்வீரெனப் பாங்கன் வேண்டாநிற்றல்.

(413) பாணன் முதலிய பேரை முனிந்தபண் பாயெமையும்
[3]மாண முனிவுசெய் யேலென் மொழியு மறுக்கச்செய்யேல்
காணவந் தாலன்பர்க் கூடாது சற்றுன் கருணைசெய்வாய்
பூண்வெள் ளென்பணி கொண்டகுற் ருலர் [4]பொருப்பிடத்தே.

மற்றுள வாயில் மறுத்தென எனது
பற்றுவி டீரெனப் பாங்கன் வேண்டல்.

**தலைவி பாங்கன் றன்னெடிரங்கல்.**

தலைவி பாங்கன் றன்னெடிரங்கல் — என்பது, என்னைப் பாலென்று பாராது வஞ்சித்து மோரினும் போதாப் பரத்தையரொடு ஒன்ருய் மதித்தவர்க்காக உமதுஅருமைபொருந்திய வாக்குச்செலவழித்தீர். அதனுற் பேச்சொன் றெனக் கேதிருக்கிறது? நானுட்பட்டேன்.

---

1 கைத்தாற் புணர்வார்–பொருட்பெண்டிர். 2 துனி மையல்–மிக்க மயக்கம்.
3 மாண்–மிகுதியாக. 4 பொருப்பு–மலை.

என் மனத்தினது குணம் எவ்வாறோ? இவ்விடத்து வரச்சொல்வீ ரெனத் தலைமகள் நேராகிற்றல்.

(414) பஞ்சிற் சிவந்த பதத்தி குழன்மொழி பங்கர்வெற்பில்
வஞ்சித்துப் [1]பாலொடு மோருமொன் றாக மதித்தவர்க்கே
கெஞ்சிற் றருமைநின் வாக்கிழந் தாலென் கிளத்துகமற்
றென்சித்தம் நேரென வோவர வேசொல்லு மில்லினுக்கே.

நின்மொழிக் கிசைந்தேன் சேர்ந்தவர் வருக
என்மன மறியேன் என்றவள் நேர்தல்

**பாங்கன் தலைவர்க்கில்வர வுணர்த்தல்.**

பாங்கன் தலைவர்க்கில்வர வுணர்த்தல் — என்பது, நீவிர் நேர்வித்த வாயில்களைக் கண்டு கண்டு ஊடல் தணிந்ததுந் தணியாததுமாயின. யாம் வேண்டற்குச் சற்று நேர்ந்து தம்மிடத்தின்கண் வருவதாகத் திருவாய் மலர்ந்தருளினார். அங்ஙனம் விரைதலின்றி மெல்லென எழுந்தருள்வீரெனப் பாங்கன் தலைவர்க்கு வரவுணர்த்தாநிற்றல்.

(415) [2]பணியா பரணர்குற் றாலவெற் பீர்பல வாயில்கண்டு
தணியா ததுந்தணி வானது மூடலென் றன்மொழிக்காய்
மணிமா ளிகைக்குள் வருமாறுக் கேதிரு வாக்குரைத்தாள்
அணியார் [3]பயோதரத் தாள்முன் னெழுந்தருள் வாய்மெல்லவே.

இல்வர வுரைத்த திறைவர்க் குணர்த்தி
மெல்லெனப் பாங்கன் மேவுமின் என்றல்.

**விருந்தொடு வந்துழிப் பொறுத்தல் கண்டு தலைமகன் மகிழ்தல்.**

விருந்தொடு வந்துழிப் பொறுத்தல் கண்டு தலைமகன் மகிழ்தல் என்பது, குற்றாலக்கடவுளே பரமெனக் குறித்து உறுதியாகத் தலைவிக்கு உவப்பாகுமென்று விருந்தினரை வந்தோம். அவ்வண்ணமே கலுழ்ந்து சிவந்தன கண்ணும் வெகுள்வுற்ற நெஞ்சும் திருந்தப் பெற்றாள். முன்னமே நாம் தவஞ்செய்ததும் உள்ளது இப்போது தபோபலத்தைப் பெறச்செய்ததுமுள்ளதெனத் தலைமகன் நெஞ்சொடு கூறி மகிழாநிற்றல்.

---

1 பாலொடு மோரும் ஒன்றாக மதித்தவர்-என்பதனால் எல்லாவற்றானுஞ்சிறந்த குணமுடைய தலைவியாகிய யானிருக்க, பல்லாற்றானும் இழிந்த பொருட்பெண்டிரை விரும்பிய தலைவர் என்பது பெற்றாம் 2 பணி—பாம்பு. 3 பயோதரம்—முலை.

(416) [1]பவப்பேறு நீர்க்குங்குற் றூலர்தம் மேற்பரம் வைத்துமின்னாட்
குவப்பேறு மென்று விருந்தால்வக் தோமுத் துருண்டிரண்டு
சிவப்பேறுங் கண்ணுங் கறுப்பான நெஞ்சுந் திருந்தலுற்றாள்
தவப்பேறு நாமுனஞ் செய்ததுண் டாந்துணி தங்குநெஞ்சே

விருந்தாய் வருக மெல்லியல் பொறுப்ப
வருந்தா திறைவன் மகிழா நிற்றல்.

**இறைமகள் விருந்து கண்டொளித்த ஊடல் வெளிப்பட நோக்கிடுதல்.**

இறைமகள் விருந்து கண்டொளித்த ஊடல் வெளிப்பட நோக்கிடுதல் — என்பது, யான்படு துயரத்தை நினைத்து 'அன்னோ' என்றிரங்காது நான் பிரிந்தவற்றாடலினாற் றனக்குள்ள துயரத்தையே சிந்தித்து அழுந்துமாயின் யான் செய்த தீவினைப் பயனெனத் தலைமகன் வருந்தாநிற்றல்

(417) துன்ன[2]வ லத்தைச்செய் தன்பர்தன் பாதந் தொழக்கருத்தில்
உன்[3]னவ லத்தை யொழிக்குங்குற் றூல ருயர்வரைமா
தென்னவ லத்தை நினைத்திரங் காம லியான்பிரிந்த
தன்னவ லத்தைவைத் தின்னமு மேங்கிலென் றன்வினையே.

விடுத்தொளி யூடல் வெளிப்படத் தலைவன்
அடுத்தது தீவினை யாமென வாடல்.

**விருந்து கண்டு ஒளித்தவூடல் வெளிப்படநோக்கிச் சீறேலென்றவன் சீறடிதொழுதல்.**

விருந்து கண்டு ஒளித்தவூடல் வெளிப்படநோக்கிச் சீறேலென்றவன் சீறடிதொழுதல் — என்பது. 'நினது வாழ்க்கைத் துணைநலத்துக்கென்றே உருக்கொண்டேனை வெகுண்டொழிதல் நன்றல்ல. முடிமேலே கைகுவித்து ஏத்தாநின்றேன். நான்செய்த பிழையைப் பொறுத்தருளாநின்மின்' எனத் தலைவன் வணங்காநிற்றல்.

418) [4]பையெடுத் தாடும் பணியணி யார்கயல் பாயவெள்ளஞ்
[5]செய்யெடுத் தோடுங்குற் றூலர்வெற் பேநின் திருத்துணைக்கே
மெய்யெடுத் தேனை வெகுண்டால்நன் றல்லமின் னேமுடிமேல்
கையெடுத் தேன்பொறுப் பீர்தமி யேன்செய் கடும்பிழையே.

---

1 பவம்–பிறவி 2 வலத்தைச்செய்து–பிரதக்ஷிணஞ்செய்து. 3 அவலம்–வருத்தம். 4 பை–படம். 5 செய்–வயல்.

சீறு வண்ணஞ் சீறடி தொழுது
மாறு நின்று வசித்தற் குரைத்தல்.

**இஃதெங்கையர் காணின் நன்றன்றென்றல்.**

இஃதெங்கையர் காணின் நன்றன்றென்றல் — என்பது, நீவிர் வேண்டுமென்று விரும்பிய அவயவங்கள் வேண்டாவளவே. அவ்வுறுப்புக்கள் எனக்கென்பதில்லை. இப்போதனுபவிக்க வேண்டிச் செய்த வந்தனை எனக்கன்று. இவையெல்லாம் என் தங்கைமார் கண்டால் நன்றல்ல. இங்ஙனம் எழுந்து அகன்றிருப்பீராகவெனத் தலைமகள் உணராநிற்றல்.

(419) சங்கை யணிகுழைக் குற்றால நம்பர் சயிலத்தென்பாற்
கொங்கை யணையக் குறித்துள்ளத் தேயன்பு கொண்டுமது
செங்கை யதுகுவித் துத்தொழு தீரிந்தச் செய்கையதும்
[1]எங்கையர் காணின் [2]மிகவுநன் றுமிங் கெழுந்திருமே.

தொழுவது மெழுவதுந் துணைவியர் காணிற்
பழுதெழுந் திறமெனப் பைந்தொடி கூறல்.

**நின்னலதங்கவர் யாரையு நினையேனென்றல்.**

நின்னல தங்கவர் யாரையு நினையேனென்றல் — என்பது, கைப்பொருளுள்ளாரை இனியராகவும், அஃதில்லாதாரை நஞ்சாகவும் நினைக்கின்ற விலைமாதரைக் கண்ணிற் கண்டாலும் சித்திரா நதியாடி அந்தப் பாவத்தை நிவர்த்திசெய்துகொண்டு மனையின்கண் வருவேன். அவருடைய சேரியை நினைக்கிலேன். சித்தமிரங்குவாயாகெனத் தலைமகன் வேண்டாநிற்றல்.

(420) [3]கைத்தவர் தம்மை யினித்தவ ராய்க்கைத் திலாரை[4]யர
வத்தினஞ் சாய்நினை வோரைக்கண் டாலும் வழுவறவே
முத்தர்குற் றாலர் நதியாடி நின்மனை முன்வருவேன்
சித்த மிரங்குமின் னேநினை யேனவர் சேரியுமே.

செல்லேன் சேரியிற் றிருவுள மிரங்கென்
றலலார் குழலிக் கவனிச முறுத்தல்.

---

1 எங்கையர்—என் தங்கைமார். 2 மிகவும்நன்றும்—நன்றல்ல என்னும் பொருளைத் தந்தது. 3 கைத்தவர்—கையிற் பொருளுடையார், கசப்பையுடையார். இதில், கைத்தவர் இனித்தவர் என்பதில் முரண்தொடை நயங்காண்க. 4 அரவத்தின்—நஞ்சாய்.

### காமக்கிழத்தியைக் கண்டமை பகர்தல்.

காமக்கிழத்தியைக் கண்டமை பகர்தல் — என்பது, 'தாயினும் உற்றதோர் தமரில்லை. யானும் உனக்குத் தாயாகும். மகனே! எனக்கு ஒரு முத்தம் தருவாயா'கெனக் காமக்கிழத்தியானவள், நங்குமாரனை வந் தெடுத்தணையக் கண்டேன் எனத் தலைவி தலைவன்முற் கூறுநிற்றல்.

(421) தாயிற் சிறந்த தமரிலை யானுநின் றாய்மகனே
வாயிற் சிறந்த மணிமுத்தந் தாவென வந்தெடுத்தாள்
வேயிற் சிறந்தமென் றோளி யொருத்திமெய் யன்பருள்ளக்
கோயிற் சிறந்தகுற் றாலர் நகர்நங் குமரன்முன்னே.

சேயிப் பொருளாஞ் செல்வனை யெடுத்த
காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தல்.

### தாமக் குழலியைப் பாங்கி தணித்தல்.

தாமக் குழலியைப் பாங்கி தணித்தல் — என்பது, மாலுற்று வருந்திய பின்னைப் பிராட்டியாரை மணஞ்செய்தருளிய திருமாலானவர் பின்னுந் திருமகளை மணந்திருக்கவில்லையோ? அது நிற்கட்டும். பொருள் கொள்வாரது சேரியிற் சென்றவர் உன்னை வேண்டிவந்தால், ஊடலைத் தவிராது நெடிதூடுதல் என்னும்? எனப் பாங்கி தலைவிக்குச் சொல்லா நிற்றல்.

(422) [1]முன்னையும் [2]பின்னையு மில்லார்குற் றாலர் முகில்வெற்பில்[3]மா
லின்னையும் [4]பின்னையு மேவிய மாத வரிந்நிலத்திற்
[5]பொன்னையும் பின்னையு மேவலை யோபொருள் மாதைமணந்
துன்னையும் பின்னையு மேவநங் கோன்வரி னூடலென்னே.

பொன்னைப் பின்னையைப் புணர்ந்தவர்க் கூறி
மின்னைப் பாங்கி வெதுட்சி தணித்தல்.

### தணியாளாகத் தலைமகனூடல்.

தணியாளாகத் தலைமகனூடல் — என்பது, என்னைப் பாலெனக்குறிக்க நான் அவரைத் தேன் எனக் குறித்துத் தேனும் பாலுமாகச் சில நாளிருந்தோம். அந்தத்தேன் பாகந் தப்ப வேறோர் கும

1 முன்—முன்பு, ஈண்டு, ஆதி. 2 பின்—பின்பு, ஈண்டு இறுதி. 3 மாலின் னையும்—மயக்கத்தால் வருந்தும். 4 பின்னை—நப்பின்னைப் பிராட்டியார். 5 பொன்—இலக்குமிதேவி.

ரிப்பால் கலந்ததெனப் பகர்ந்து என்மேல் வைக்கப்படாத வன்கண்மை வைத்தாள் யான் வணங்கியதற்கு அன்பு செய்யாததே கொலை செய்ததோடொக்குமெனத் தலைமகனூடல் செய்யாநிற்றல்.

(423) கையாத தேனுங்கைப் பாமோர் குமரி கலக்கவென்றே
பொய்யாத வாழ்வினர் குற்றாலர் வெற்பிலிப் பூவைசொல்லி
வையாத [1]வன்கண்மை வைத்தாள்கை கூப்பி வணங்கற்கன்பு
செய்யாத தேகொலை செய்ததொப் பாமினிச் செய்வதென்னே.

வணங்கியு மிணங்கா வன்மையி னன்மின்
அணங்குசெய் வித்தல் அறக்கொடி தென்றது.

**அணிவளைப் பாங்கி யன்பிலை கொடியை யென்றிணர்த்தார் மார்பனை யிகழ்தல்.**

அணிவளைப் பாங்கி யன்பிலை கொடியை யென்றிணர்த்தார் மார்பனை யிகழ்தல் — என்பது, விலைமாதர்கள் செய்யும் அபிநய லீலா விநோதங்களைக் கண்டறிந்த வெள்ளறிவினர்க்கு அந்தரங்கத்து நாணி நாணிப் புணருந் தன் மனைவியுடன் கலந்திருக்கக் கருத்தாகுமோ? ஆகாது. அறவுங்கொடியதே யுன்செய்கை யென்னப் பாங்கி தலைவனை யிகழாநிற்றல்

(424) மடனறத் தேர்ந்தவர் போற்றுங்குற் றாலர் வரையிடத்தே
[2]நடனமின் னார்கள்தந் தக்குறி யுங்கை நகவழுத்துந்
தடனமுங் கண்டவர்க் கொல்கியொல் கிப்புணர் தன்மனைவி
யுடனணை யக்கருத் தொவ்வா தறக்கொடி துன்செயலே.

உன்செய லறக்கொடி துனக்குநின் மனைவி
தன்செயல் உவப்பத் தகுமோ வென்றல்.

உணர்த்த வுணரா வூடல் முடிந்தது.

---

1 வன்கண்மை—பொறாமை. 2 நடனமின்னார்—கூத்தியர், வேசியர், பரத்தையர்.

## பிறவு முணர்த்த வுணரா வூடல்

ஆயிழை மைந்தனும் ஆற்ற மையும்
வாயி லாக வரவெதிர் கோடலும்
மணந்தவன் போயபின் வந்தபாங் கியொடு
இணங்கிய மைந்தனை யினிதிற் புகழ்தலும்
தலைவனைப் புகழ்தலும் சிலைநுதற் பாங்கி
மனைவியைப் புகழ்தலும் இனையன பிறவும்
அனைவகை யொழிந்த வதன்பாற் படுமே.

(ந. அ. கற்பு 8)

இதுவும் அத்தன்மைத்தாகிய உணர்த்த வுணரா வூடற்குரியவாமெனக் கொள்க.

**ஆயிழை மைந்தனும் ஆற்றுமையும் அவர்வாயிலாக வரவெதிர்கோடல்.**

ஆயிழை மைந்தனும் ஆற்றுமையும் அவர்வாயிலாக வரவெதிர் கோடல் - என்பது, "பரவா வெளிப்படா பல்லோர் கட்டங்கா, உரவோர் கட் காமநோய் ஓகொடிதே". என்பதாற் புன்காமப் புகற்சி யவர்க் குரியதன்று இப்போது பொன்மலை போன்ற திருப்புயங்களில், நமது மைந்தனது மழலைவாயமிர்தம் வழிந்தொழுகத் தக்கது மார்போட ணைத்தெடுத்துக்கொண்டு வாராநின்றார். ஆகலான், மைந்தனைத் தருவ தாகவெனக் கையினில் வாங்குமளவே யின்பங் கூரத் தழுவிக்கொள் வோமெனத் தலைமகள் நினைந்து மகனும் ஆற்றுமையும் வாயில்களாகத் தலைமகன் வந்துழி யெதிர்கொள்ளாநிற்றல்.

(425) மலைபோற் புயத்தி லருவிகள் போன்மைந்தன் வாயமிர்தம்
நிலையாச் சுரந்து வழிந்தோட வேயன்பர் நேர்ந்துவந்தார்
கொலையார் மழுவினர் குற்றாலர் [1]வெற்பெதிர் கொண்டுசென்றே
தலையாய மைந்தனைத் தாருமென்[2]றங்கை தழீக்கொள்வமே.

உணர்த்த வுணரா தொநவகைத் துணர்ந்து
மணத்தார் தழலி வரவெதிர் கோடல்.

**மணந்தவன் போயபின் வந்த பாங்கியொடு இணங்கிய மைந்தனை யினிதிற் புகழ்தல்.**

மணந்தவன் போயபின் வந்த பாங்கியொடு இணங்கிய மைந் தனை யினிதிற் புகழ்தல் - என்பது, திருப்பள்ளியின்கண் வந்து என்னி

1 வெற்பு-மலை. 2 அங்கை-அகம் + கை.

டத்துக் கலந்த தலைமகன் எனதரசுரிமைக் கருகனாக என்னைப் போலுனக்கு வந்த மைந்தன், எனக்குன்னினும் தொழுதற்குரிய தெய்வம் வேறுண்டோவெனச் சொல்வதாகப் பெற்றுக்கொண்டனையே என்றானென்று அவர் போயபின்னர் இப்பரிசாய் நமக்கு ஒரு புத்திரன் உதயமானதை யாதுசொல்லிப் புகழலாமெனத் தலைவி பாங்கி வந்தவிடத்துப் புகழாநிற்றல்.

(426) வானாக நின்றருள் குற்றாலர் வெற்பினர் மைந்தனுனக்(கு)
யானாக வந்துனை யல்லாதோ ராலயம் யாதுளவென்
பானாகப் பெற்றனை மாதேயென் றாரிப் பரிசுபெறு
வேனாக மைந்த னுதித்ததென் சொல்கமின் னேவியந்தே.

மைந்தனைத் தலைவன் மகிழ்ந்துரைத் ததனைத்
தந்துணைக் குவந்த தையல்முற் புகழ்தல்.

### தலைவனைப் புகழ்தல்.

தலைவனைப் புகழ்தல் - என்பது, பூவைக்கும் கிளிக்கும் அமுது அருத்திச் சொற்பயிற்றி அதனையோர் பிள்ளையாகப் போற்றிச் சொற் கேட்ட செவிக்கும் பொற்பாவையைப் பிள்ளையென்றேந்திய கைகட்கும் மழலைச் சொல்லும் தீண்டல் இன்பமும் பெற, இந்த மைந்தனை உலோக பரிபாலனனாகத் தந்தருளிய பெருமானைத் தவிர எனக்கோர் பற்றுக்கோடுளதோ? வெனத் தலைமகள் பாங்கிமுற் றலைவனைப் புகழாநிற்றல்.

(427) [1]பூவையுங் [2]கிள்ளையும் பிள்ளைய தாய்வைத்துப் போற்றியொரு
[3]பாவையு மேந்திய கையினி லேயிந்தப் பாலகனை
[4]மாவைய கம்புரக் கத்தந் தெனைமனை வாழ்க்கைசெய்த
[5]கோவையல் லாற்றஞ்சம் வேறேகுற் றாலநங் கோன்வெற்பிலே.

ஐம்பொறி கட்டு மரிதினி தடைய
மைந்தனைத் தந்த வள்ளலைப் புகழ்தல்.

### சிலைநுதற் பாங்கி மனைவியைப் புகழ்தல்.

சிலைநுதற் பாங்கி மனைவியைப் புகழ்தல் — என்பது, "பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும், திண்மையுண் டாகப் பெறின்"

1 பூவை—நாகணவாய்ப்புள். 2 கிள்ளை—கிளி. 3 பாவை—பொம்மை.
4 மாவையகம்—பெரிய பூமி. 5 கோ—அரசன்.

என்று வேதவழிப் பிறந்த நூல்களிற் பேசியதெல்லாம் பத்தாபத்தினி ஞாயத்துக்கன்றோ? இந்த நிறையுனக்குத்தானே பொருந்துமாயின் உனக்கு யாரை யொப்பிடலாமெனப் பாங்கி தலைவியைப் புகழாநிற்றல்.

(428) [1]பெண்ணிற் பெருந்தக்க யாவென வேதத்திற் பேசியதை
யெண்ணிற் பெருங்கற் பினுக்கல்ல வோவிந் நிறையுனக்கே
நண்ணிற் பெருமக ளேநின்னைப் பாரியார் ஞானவருட்
கண்ணிற் பெரியவர் குற்றால நாதர் கனவெற்பிலே.

கற்பினைக் கூறிக் கனிமொழிப் பாங்கி
அற்புத மாமென் றரிவையைப் புகழ்தல்.

இவற்றுள், உணர்த்த வூணரும் ஊடல் பன்னொன்றினில் காதலன் பிரிவுழிக் கண்டோர், புலவிக் கேதுவீதாம் இவ் இறைவிக் கென்றலும், தனித்துழி இறைவி தனித்தழுதிரங்கலும், இறைமகன் புறத்தொழுக்கு இறைமகள் உணர்த்தலும், பாங்கி கழறலும், செவ்வணி யணிந்து சேடியை விடுத்தலும், விடுத்துழி அவ்வணி உழையர் கண்டு அழுங்கக் கூறலும் ஆகிய ஐந்தும் வாயில் நேர்தற்கும், ஈங்கிது வேதெனப் பாங்கி வினாதலாகிய வொன்றும் வாயில் வேண்டற்கும், பரத்தையர் கண்டு பழித்தலாகிய வொன்றும் மறுத்தற்கும், பரத்தையர் உலகியல் நோக்கி விடுத்தலிற் றலைவன் வரவு கண்டுவந்து வாயில்கள் மொழிதலும், வரவுணர் பாங்கி அரிவைக்குணர்த்தலும், முதிராமுகிழ்முலை யெதிர்கொண்டு பணிதலும், புணர்ச்சியின் மகிழ்தலுமாகிய நான்கும் வாயில் நேர்வித்தற்கும் உரியவாமெனக்கொள்க.

பிறவும் உணர்த்தவுணரா வூடல் பன்மூன்றினும் வெள்ளணி யணிந்து விடுத்துழிப் புள்ளணி மான வேல் அண்ணல் வாயில் வேண்டலும், தலைமகன் தன்மனத்துவகை கூர்தலும் பாணன் முதலாய்ப் பாங்கன் ஈறாய்ப் பேணிய வாயில்கள் பெரியோர் விடுத்தலுமானவை வாயில் வேண்டற்கும், தலைவி நெய்யாடியது இகுளை சாற்றலும், தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றலும், அணிவளைப் பாங்கி அன்பிலை கொடியையென்றலும், விருந்தொடு வந்துழிப் பொறுத்தல்கண்டு இறையோன் மகிழ்தலும் தாமக்குழலியைப் பாங்கி தணித்தலுமானவை வாயில் நேர்வித்தற்கும், தலைவியுணர்ந்து தலைவனொடு புலத்தலும், பேணிய வாயில்கள் பெரியோர் விடுத்துழி மறுத்தலும், அங்கவர் யாரையும் அறியேனென்றலும், காமக்கிழத்தியைக் கண்டமை பகர்தலுமானவை வாயில் மறுத்தற்கும், தலைமகள் விருந்துகண்டு ஒளித்தவூடல் வெளிப்

1 திருக்குறள்—54.

படநோக்கிச் சீறேலென்று அவன் சீறடிதொழுதும், தணியாளாகத் தலைமகனூடலும், எங்கையர் காணின் நன்றன்றென்றலுமானவை வாயில் நேர்தற்கும் உரியவெனக்கொள்க. அத்தன்மைத்தாகிய உணர்த்தவுணரா வூடலில் ஆயிழை மைந்தனும் ஆற்றாமையும் வாயிலாக வரவெதிர்கோடல் முதல் நான்கும் வாயில் நேர்தற்கு உரியவாமெனக்கொள்க (ஆகச்செய்யுள் 428)

*மூன்றுகூத் திரத்து மொழிந்தவை யெல்லாம்*
*ஆன்ற பரத்தையி னகற்சியின் விரியே.*

(ந. அ. கற்பு 9)

*பிரிவறி வுறுத்தல் பிரிவுடன் படாமை*
*பிரிவுடன் படுத்தல் பிரிவுடன் படுதல்*
*பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை*
*வருவழிக் கலங்கல் வந்துழி மகிழ்ச்சியென்*
*றொருமையிற் கூறிய ஒன்பது வகைய*
*கல்வி முதலா வெல்லாப் பிரிவும்.*

(ந. அ கற்பு 10)

இது, நிறுத்த முறையானே கல்வி முதலிய பிரிவின் வகை இத்துணைத் தென்கின்றது. இதன்பொருள், பிரிவறிவுறுத்தலும், பிரிவுடன் படாமையும், பிரிவுடன் படுத்தலும், பிரிவுடன் படுதலும், பிரிவுழி வருந்தலும், ஆற்றுவித்தலும், பொறுத்தலும், வருவுழிக் கலங்கலும், வந்துழி மகிழ்ச்சியும், என்று ஒருமையிற் கூறப்பட்ட ஒன்பது வகையினையுடையவாம் கல்வி முதலாகிய ஐவகைப் பிரிவுமென்றவாறு; ஒருமையிற் கூறுதல்—ஒருதன்மை பற்றிக் கூறுதலென்பதாம். ஒரு தன்மைபற்றிக் கூறுதலான் ஒன்பது வகையாமெனவே பல தன்மை பற்றிக் கூறின் பலவேறு வகையாமென்பது பெற்றாம். பெறவே, வகைவேறுபாடே விரியாகலின், அவற்றின் விரியுமுடன் கூறினாராயிற்று. பிரிவறிவுறுத்தல் ஒரு தன்மைக் கூறுமிடத்தில் ஒன்றாயினும், தலைவன் பாங்கிக்குப் பிரிவறிவுறுத்தலும், அவள் அதனைத் தலைவிக்கு அறிவுறுத்தலுமெனப் பல தன்மைபற்றிக் கூறுமிடத்துப் பலவாமாறு காண்க. ஏனையவற்றிற்கும் ஏற்புழி இவ்வாறே உய்த்துணர்க.

### கல்விப்பிரிவு பாங்கிக்குத் தலைவன் அறிவுறுத்தல்

கல்விப்பிரிவு பாங்கிக்குத் தலைவன் அறிவுறுத்தல் – என்பது, கல்வி முதுணர்வில்லாத வேந்தனைப்பார்க்கத் தண்டத்தைச்செய்கின்ற

றகூற்று நன்றென்று முற்காலத்துக் கற்றுணர்ந்த நல்லோர்கள் சொல்லாத நூல்களில்லை. ஆதலான் நாற்பயனும் உணர்ந்து வரச் செல்குவேன். வருந்துணையுந் தலைமகளைக் காத்தருள்வாயாகெனப் பாங்கிக் குணர்த்தித் தலைமகன் ஓதற்குப் பிரியா நிற்றல்.

(429) [1]கல்லாத வேந்தனிற் கூற்றுநன் றென்றுமுன் கற்றுணர்ந்தோர்
சொல்லாத நூலில்லை யான்செல்கு வேன்றென்மை நாலுணர
நல்லா தரவுசெய் தேவைத் திருமின்னை நண்ணிலர்பாற்
கில்லாத நம்பர்நங் குற்றாலர் வெற்பினி லேந்திழையே

காதற் றலைவன் கற்றதூஉ மின்றி
ஓதற் கிகத்தல் ஒண்ணுதற் குரைத்தல்.

### கல்விப் பிரிவு பாங்கி தலைவிக்கு அறிவுறுத்தல்

கல்விப் பிரிவு பாங்கி தலைவிக்கு அறிவுறுத்தல் — என்பது, தர்மார்த்த காமமென்னும் புருஷார்த்தம் மூன்றையும் நின்னை வரையா முன்னமே உணர்ந்து தம்மிற் றாழ்ந்தார்க் குணர்வித்தும் ஒத்தார்க்கு ஒத்துணர்ந்து தேறியும் இன்னும் மிக்கோர்பாற் சென்று வீடுணர் வாகிய புருடார்த்தமும் உணர்ந்து அறம் பொருள் இன்பங்களையும் நிறீஇக் கதி கூடுவதாக, பற்றற்றோர் சிந்தைக்குத் துணையாயதோர் குற்றால நாயகர் வரையிடத்துத் தலைவர் சென்றாரெனப் பாங்கி தலைவிக் குணர்த்தாநிற்றல்

(430) கற்றார்க்கல் லாற்புகழ் புண்ணியம் நீதி கதியெவையும்
மற்றார்க்கு மில்லென்று [2]நானூலுங் கற்கநம் மன்னர்சென்றார்
[3]அற்றார்கள் சிந்தைக் கொருதுணை யானகுற் றாலர்வெற்பில்
நற்றார் மலர்க்குழல் மாதே யிவையு நமக்குநன்றே.

மிக்கோர் தன்பால் மெய்யுணர் வெய்தத்
தக்கோர் ஏகல் தையற் குணர்த்தல்.

### இவையிரண்டும் பிரிவறி வுறுத்தற்குரிய.

### கல்விக்குப் பிரிந்துழித் தலைவி கார்ப் பருவங் கண்டுவருந்தல்.

கல்விக்குப் பிரிந்துழித் தலைவி கார்ப்பருவங்கண்டு வருந்தல் — என்பது, 'மின்னுக்களைத்தோற்றி நினது பெண்படைகளைக் கூட்

---

1 'கல்லாத வேந்தனிற் கூற்று நன்று' என்பது பழமொழி. 2 நானூல்—நால்வகை யுறுதிப்பொருள்களைக் கூறும் நூல்கள். 3 அற்றார்—ஆசையற்ற முனிவர்.

டென்றும், இந்திர தனுவைக்கொண்டு நினது கருப்புச்சிலையை வளைத்துப் புட்ப பாணத்தைப் பூட்டென்றும் மன்மதனுக்குச் சொல்லிக் கொண்டு எழுந்ததுபோல எழுந்துவந்த கார்ப்பருவம் இனிமைகளைச் செய்யாதே இடுக்கணே செய்யும், தலைவரில்லாமையால் எனத் தலைமகள் வருந்தாநிற்றல்.

(431) [1]மின்களைக் காட்டிநின் [2]மின்களைக் கூட்டென்றும் வில்லையுங்கொண்
டுன்[3]கழை வில்லையும் பூட்டென்று மாரற் குரைத்தெழுங்கார்
[4]இன்களைச் செய்வதன் றின்னற் செயுமன் பரின்மையினால்
நன்[5]கழை சூழ்திருக் குற்றாலர் வெற்பினின் நன்னுதலே.

*தேர்வநங் கல்வியிற் சென்றார் வருமுன்*
*கார்வநத் தியதைக் காரிகை யுரைத்தல்.*

**பருவங்கண்டு வருந்திய தலைவியைத் தோழி ஆற்றுவித்தல்.**

பருவங் கண்டு வருந்திய தலைவியைத் தோழி ஆற்றுவித்தல்-என்பது, வருடம் பொழிய, சந்திரக் கடவுளானவன் காய, மனத்தின்கண் விரக வித்து அங்குரித்து மேன்மேலும் பயிராகி விளைவதைக் கருதி உன்னிடத்துப் பலன் கொள்வது காரணமாகத் தலைமகன் இற்றைத் தினம் வருவரெனப் பாங்கி தலைவியைத் தேற்றாநிற்றல்.

(432) [6]புத்தேளிர் போற்றிய குற்றாலர் வெற்பிற் புயல்பொழிகா
லத்தே [7]பசுங்கதிர் காயப் படுநெஞ் சகம்[8]விரக
வித்தே முளைத்துப் பயிராய்மேன் மேலும் விளைவுதெண்ணி
முத்தே பலன்கொள்ள இன்றே வருவர் முடிமன்னரே.

*வருந்தின கண்டு வரவது கூறித்*
*திருந்திழைக் கிதனை தேற்றமு தாக்கல்.*

இது ஒன்றும் வன்புறைக்குரித்து. பிறவு மன்ன.

**காவற்பிரிவறிவுறுத்தப் பாங்கி காவற்பிரிவுக்கு உடன்படாமை.**

காவற்பிரிவறிவுறுத்தப் பாங்கி காவற்பிரிவுக்கு உடன்படாமை என்பது, அறம் பிழையாவண்ணம் நாடு காத்தற்கு நீவிர் பிரிந்தால் தலைமகட்கு உயிர் வாழ்ந்திருத்தற்கு ஓர் உறுதி உண்டோ? உண்டாமாகில் அவட்குத் தேற்றத்தைச் சொல்லி மகிழ்வித்துக் கொண்டு செல்வீரெனப் பாங்கி தலைவர்க்குப் பிரிவுடன்படாது நிற்றல்.

---

1 மின்-மின்னல். 2 மின்-பெண். 3 கழை-கரும்பு. 4 இன்-இனிமை. 5 கழை—மூங்கில். 6 புத்தேளிர்-தேவர். 7 பசுங்கதிர்-சந்திரன். 8 விரகம்-காமநோய்.

(433) வையத்தை நீதி வழுவாமற் காக்கமன் னேபிரிந்தால்
உய்யத்தை யற்கோ ருறுதியுண் டோவுண் டெனிலவட்கே
[1]ஐயத்தை யேற்றுண்ட குற்றாலர் வெற்பில் அகமகிழ்வு
செய்யத் தயாவுடன் நீடநில் லேனென்று செல்லண்ணலே.

அறங்காத் தலினகன் றலிவட் காக்கு
திறங்கா ணேனெனச் செழுமற் றுரைத்தல்.

இது ஒன்றும் பிரிவுடன்படாமைக் குறித்து.

**பாங்கியைத் தலைவன் காவற் பிரிவுக்குடன்படுத்தல்.**

பாங்கியைத் தலைவன் காவற் பிரிவுக்குடன்படுத்தல் – என்பது நாடுகாத்தலில், விசேடித்துக் குற்றால நாயகர் திருவடிகளைத் துணைக் கொண்டு தனித்தோர் துறவறத்தைக் காக்கச் சென்றால், என்னை விட்டுத் தனித்த தலைமகள் மீதே மன்மதன் பயஞ்செனித்துக் கணை களைத் துரவானெனத் தலைவன் பிரிவுடன் படுத்தாநிற்றல்.

(434) செனித்தோர் கருவிற் புகாதெனை யாண்டருள் செய்தவர்தண்
பனித்தோ டலர்கொன்றைத் தாமர்குற் றாலர் பதத்துணைக்கே
தனித்தோர் துறவறங் காக்கச்சென் றூற்றனிப் யாமங்கைமேற்
குனித்தோர் சிலைக்கணை யேவான் மதன்பயங் கூர்ந்துமின்னே.

அருந்தவ முறுத்தி யவனி காக்கப்
பெருந்தகை தோழியைப் பிரிவுடன் படுத்தல்.

இது ஒன்றும் பிரிவுடன்படுத்தற் குறித்து.

**பிரிவுக்குடன்பட்ட தோழி தலைவிக்கறிவுறுத்தல்.**

பிரிவுக்குடன்பட்ட தோழி தலைவிக்கறிவுறுத்தல் — என்பது, கோக்காத்தல் முதல் அந்தணர் வரையுள்ளனவுங் காத்து வருகிறே னெனத் தலைமகன் பிரிந்தமை தோழி தலைவிக்கறிவுறுத்தாநிற்றல்.

(435) [2]ஆவையு மந்தணர் தம்மையுங் கற்புடை யார்களெனும்
[3]பாவையுங் காத்து வருவேன்மின் னுட்குப் பகரெனத்[4]தேர்
மாவையும் பாகன் நடாத்தச்சென் றார்முடி மன்னர்[5]எழு
நாவையும் போல்வளர் மெய்யர்குற் றாலர் நளிவெற்பிலே.

---

1 ஐயம்-பிச்சை. 2 ஆ-பசு. 3 பாவை-பெண். (உவமை ஆகுபெயர்) 4 தேர்மா-தேர்க்குதிரை. 5 எழுநா-எழுநாக்கு, அக்கி.

உலகியல் காத்தற் குயர்ந்தோர் சேறல்
இல்லிழைக் கிதனை யினிதறி வுறுத்தல்.

இது ஒன்றும் பிரிவறி வுறுத்தற்குரித்து.

**காவற்குப் பிரிந்துழித் தலைவி கூதிர்ப்பருவங் கண்டிரங்கல்.**

காவற்குப் பிரிந்துழித் தலைவி கூதிர்ப் பருவங் கண்டிரங்கல் — என்பது, நாட்டுள்ள நீதி காத்தற்குச் சென்ற ஓர் தலைமகன், வாடைக் காற்றுக்கு நொந்து இரண்டு கொங்கைகளினும் நெருங்கத்தக்க கைகளை யணைத்துக்கொண்டு பொய்வைத்துச் செறிக்குந் தனியாட்கு உய்யுமாறு எவ்வாறென்றெண்ணுரோ? எனத் தலைவி பாங்கியைக் கேளா நிற்றல்.

(436) ஆடைக் [1]கதளை யுடுத்துங்குற் றலர்பொன் னம்புயஞ்சேர்
ஓடைக் குழாங்கள் செறிநாடு காத்தற் குவந்துசென்றார்
வாடைக்கு நொந்திரு கொங்கையிற் செங்கையை வைத்திறுக்கும்
**பேடைக்கெவ் வாறு பிழைப்பென்றே எண்ணுர்கொல் பெய்வளையே.**

[2]உடங்கைக் கடைந்தார் உயர்கடி செல்ல
[3]வடங்கைத் துடைந்து வால்வளை யுயங்கல்.

இது ஒன்றும் பிரிவுழிக் கலங்கற்குரித்து

**வினை முற்றி மீண்டமை பாங்கி தலைவிக் குணர்த்தல்.**

வினை முற்றி மீண்டமை பாங்கி தலைவிக் குணர்த்தல் – என்பது ஈர்க்கிடை செலுத்தச் செல்லாது இணை நெருங்கி யெழுப்பட்ட கொங் கையுடையாளே! கூதிர் காலமாயது உனக்குக் கொடியபகையென்று அதனைவெல்லும்படி விரையத் தேர் நடத்திக் கொண்டு தலைமகன் வந் தானெனப் பாங்கி தலைவிக்குச் சொல்லாநிற்றல்.

(437) போர்க்[4]கால கால ருயர்திரி கூடப் பொருப்பிலண்ணல்
கார்க்காலம் போய்ப்பின் வருங்குளிர் வாடை கடினமென்றே
தேர்க்கால் விரைய நடாத்திவந் தார்மன்னர் தேறச்செய்வாய்
ஈர்க்கா லிடைவிடச் செல்லா தெழுங்கொங்கை ஏந்திழையே.

கூதிரை வெல்லக் கொடிநுடங் கிரத
மீதிறை வந்தார் வினைமுற்றி யென்றல்.

இது ஒன்றும் வன்பொறைக்குரித்து. பிறவுமன்ன.

---

1 அதள்–தோல். 2 உடங்கை–கூட்டுறவு, துணை. 3 வடங்கை–வடகாற்று.
4 கால காலர்–காலனுக்குக் காலனனவர் – குற்றாலநாதர்.

### பாங்கி தூதிற்பிரிவுக்குடன்படுதல்

பாங்கி தூதிற்பிரிவுக்குடன்படுதல் — என்பது, இரண்டு வேந்தர்கள், ஒருவருக்கொருவர் சமமில்லாதே தண்டஞ்செய்தலால், உலகு அதிரா நிற்பதைச் சமஞ்செய்தற்குப் போயினரென யான் சொல்லுங்காலத்து, அந்தச் சொல் அவளுக்கு இடியேறு போன்று காட்டும். நீவிர்தானே "விரைய வருவே"னெனச் சொல்லிச் செல்வீரெனப் பாங்கி தூதிற்பிரிவுக்கு உடன்படாநிற்றல்.

(438) இருமன்னர் போர்க்கு நடுத்தீர்க்க வேங்கெழுந் தார்எனுஞ்சொல்
[1]உருமன்ன தாகுமின் னட்குரைத் தாற்சென் றொருப்படுத்திப்
பெருமன்ன ரேவரு வேன்விரைந் தென்னப் பிரிந்துசெல்வீர்
திருமன்ன நல்லறஞ் செய்கின்ற நன்னகர்ச் செல்வர்வெற்பே.

தூதிற் பிரிவு சொலினவ ளிரங்கும்
நீதிப் படியே நீபுக லென்றல்.

இது ஒன்றும் பிரிவுடன்படுதற்குரித்து.

### தூதிற் பிரிந்துழித் தலைவி, முன்பனிப் பருவங்கண்டிரங்கல்

தூதிற் பிரிந்துழித் தலைவி, முன்பனிப்பருவங் கண்டிரங்கல் — என்பது, தூதிற் பிரிந்த தலைவர்க்கு நம்மை நினைக்கின்ற காலமில்லையோ, நமக்கானலோ பனிக்காலந் துன்புறுங் காலமாயிற்று. அமளியின் மேலொருத்தியாயிருக்கப் பொறையிலேன். இது விதிவண்ணமே யெனத் தலைவி வருந்தாநிற்றல்

(439) [2]துனிக்காலந் தூதுசென் றூர்க்கில்லை யோபசுந் தோகைமுன்[3]நான்
முனிக்கால நீழற் பொருள்காட்டு நன்னகர் மூர்த்திவெற்பிற்
பனிக்காலந் துன்பப் படுங்கால [4]மாச்சினிப் [5]பாயலின்வாய்த்
தனிக்காலம் போக்கி யிருக்கப்பொ றேனென் றலைவிதியே.

அன்பனிக் காலம் அளியின் மையினால்
முன்பனிக் காலம் மொய்குழல் வருந்தல்.

இதுவும் பிரிவுழிக் கலங்கற்குரித்து.

---

1 உரும்-இடியேறு. 2 துனி—துன்பம். 3 நால்முனிக்கு ஆல நீழல்-சனகாதியர் நால்வர்க்குக் கல்லாலின்கீழ். 4 ஆச்சு-ஆயிற்று என்பதன் மரூஉச்சொல். 5 பாயல்—படுக்கை.

### வினைமுற்றி மீண்டமை தோழி தலைவிக்குணர்த்தல்.

வினைமுற்றி மீண்டமை தோழி தலைவிக்குணர்த்தல் — என்பது, முன்னமே தூதிற் பிரிந்த தலைமகன் அந்த வினை முடித்துப் புற்பனிப் பற்று ஒழிதற்கு இரவி யுதயமானது போல, இந்த இரவிற் பனியைத் தவிர்த்தற்கு இரதத்தின் மேற்கொண்டு தலைமகன் வந்தமை தோழி தலைவிக்கு உணர்த்தாநிற்றல்.

(440) [1]மற்பனி வார்பொழில் சூழுங்குற் றாலர் வரையிடத்தே
நற்பனி யார்மொழி மாதேமுன் றூதின் நடந்துசென்றார்
[2]புற்பனி காயக் கதிரிர தத்திற் புறப்படல்போல்
[3]அற்பனி தீர்க்க ரதமேறி யிங்குவந் தாருவந்தே.

வினையது முடித்து மீண்டா ரென்ன
நனைபனிக் கிடைந்த நன்னுதற் குணர்த்தல்.

இதுவும் வன்பொறைக்குரித்து. பிறவு மன்ன.

### தலைவன் துணைவயிற் பிரிவறிந்த தோழி தலைவிக் குணர்த்தல்.

தலைவின் துணைவயிற் பிரிவறிந்த தோழி தலைவிக்கு உணர்த்தல்- என்பது, தமக்குற்ற ரொருவர்மேற் பகைத்தாரை வென்று அவர்க்கு உதவி செய்தற் பொருட்டாகச் சென்றாரெனப் பாங்கி தலைமகன் போக்கறிவுறுத்தாநிற்றல்.

(441) பொற்றாரும் பூமலர்த் தாருநல் லோர்கள் புனைந்துபணி
குற்றால நாயகர் பொன்மலை யாந்திரி கூடத்திலே
உற்றா ரொருமன்னர்க் கோர்வேந்தர் சீற்ற முறும்பகையைச்
[4]செற்றா ரெனப்புகழ் கொள்ளநின் னன்பர்சென் றாரணங்கே.

உற்றுழி யுதவிக் குயர்ந்தோ ரிகந்ததை
நற்றுணைப் பாங்கி நன்னுதற் குணர்த்தல்.

இதுவும் பிரிவறிவுறுத்தற் குரித்து.

---

1 மற்பனி-மிகுந்தகுளிர்ச்சி. 2. புற்பனி-புன்மையான பனி. 3 அற்பனி-இரவின் நடுக்கம். 4 செற்றார்-அழித்தார்.

**தலைவன் துணைவயிற் பிரிந்துழித் தலைவி பின்பனிப் பருவங்கண்டு இரங்கல்.**

தலைவன் துணைவயிற் பிரிந்துழித் தலைவி பின்பனிப் பருவங் கண்டு இரங்கல் - என்பது, தமக்குத் துணையானவர்க்குப் பகையானவர் மண்கொண்டு அவரை முழுவதுந் துரத்துவிப்பதாக நமது துணைவர் பிரிந்தமை கண்டபின், பின்பனிக்காலம் அத்துணைவரைக் காணுமுன் னென்செய்குமோ வெனத் தலைமகள் அஞ்சிப் பாங்கிக்கு உணர்த்தாநிற்றல்.

(442) [1]மின்றுணை யோர்பக்க நீங்காக்குற் றாலத்தர் வெற்பினிலோர்
[2]மன்றுணை வேண்டி மறுமன்னர் வாழ்மதில் [3]வாங்குதற்கே
தன்றுணை விட்டுப் பிரிந்தா ரெனக்கண்ட தண்பனிதான்
என்றுணை காண்முன்ன மென்செய்கு மோகண் டிலமணங்கே.

வன்பனித் துணைக்கு டாற்றிவ ராமுனம்
பின்பனிக் கிடைந்து பெய்வளை வருந்தல்.

இதுவும் பிரிவுழிக் கலங்கற்குரித்து.

**தலைவியைப் பாங்கி யாற்றுவித்தல்.**

தலைவியைப் பாங்கி யாற்றுவித்தல் — என்பது, சத்துருக்களது பகையையுந் தடிந்து உற்றார்க்கு உதவியைச் செய்து நின்னுடைய தலைவர் பாசறைவீடு விட்டு நம்மூர்க்கு மீளாநின்றார். மனத்தைச் சலியாவண்ணம் தேற்றுவாயாக எனப் பாங்கி தலைமகளைத் தேற்றியது.

(443) [4]ஒட்டார் பகைதடிந் துற்றார்க் குதவிசெய் துன்னுடையார்
விட்டார் படைக்களம் மீண்டார்நம் மூர்மிசை நோக்கலுற்றார்
எட்டார் எவருக்கு மென்பார்குற் றால ரியல்வரைவாய்
[5]மட்டார் மலர்க்குழ லேதேற்றி யாற்று மனந்தனையே.

ஒட்டலர் பகைதடிந் துற்றவர்க் குதவி
விட்டனர் படைக்களம் மீண்டா ரென்றது.

இதுவும் வன்பொறைக்குரித்து. பிறவுமன்ன.

1 மின்றுணை - மின்னுகிய துணை, குழல்வாய்மொழி. 2 மன்றுணை—மன்னனின் துணை 3. வாங்குதற்கு-வளைப்பதற்கு. 4 ஒட்டார்-பகைவர். 5 மட்டு-தேன்.

**தலைவன் பொருள்வயிற் பிரிவறிந்த தோழி தலைவிக்குணர்த்தல்.**

தலைவன் பொருள்வயிற் பிரிவறிந்த தோழி தலைவிக்குணர்த்தல் - என்பது, பொருட்செல்வத்தினுற் கல்விச்செல்வம் பெற்றுக் கல்விச் செல்வத்தாற் றவமும் புகழும் முதிர்ந்துதேறிய பின்னர், சித்திரசபை நித்தராகிய மெய்ப்பொருளையும் மனத்தினுற் றியானித்து, இகபர சாதகமிரண்டும் பெறலாமென்று உன்னுடைய அன்பரானவர் பொருள்வயிற் பிரிவேனென்று ஏகாநின்றார் எனப் பாங்கி தலைவிக் குணர்த்தியது.

(444) பொருள்கொண்டு நூற்பொருள் கொண்டே தவமும் புகழுமுற்றித்
தெருள்கொண்டு சித்ர சபைமெய்ப் பொருளையுஞ் சிந்தைசெய்தால்
அருள்கொண் டிகபர மும்பெற லாமென் றுன் னன்பர்பொருட்
கிருள்கொண்ட [1]வார்குழ லேபிரி வேனென் றெழுந்தனரே.

இகபர மிரண்டு மிதுநிதி யாலென்
றகல்வது நுவன்ற ரண்ண லென்றது.

இதுவும் பிரிவறிவுறுத்தற்குரித்து

**பொருள்வயிற் பிரிந்துழித் தலைவி வேனிற் பருவங்கண்டு இரங்கல்.**

பொருள்வயிற் பிரிந்துழித் தலைவி வேனிற் பருவங்கண்டு இரங்கல் - என்பது, அறங்களனைத்துக்கும் கற்பகத் தருவைப் போலே கொடுத்தற்குப் பொருண்மேல் விரும்பிச் சென்ற தலைமகன், முன்னை நாள் காயும்படி போரின்கண் மறைந்த சூரபன்மன் கடற்குள்ளொளித்து எடுத்ததோர் வடிவமாகிய மரத்தின் வாயிருந்து இளவேனிலைக் கொணர்ந்து எனது செவியில் ஊதாநின்ற தீவாயினையுடைய குயிலுக்குப் புகலேது சொல்லிப் போயினரெனத் தலைமகள் பாங்கியைக் கேட்டுவருந்தாநிற்றல்.

(445) கோவாய்ச் [2]சுடரொரு மூன்றையுங் கொண்டகுற் றாலர்வெற்பிற்
[3]காவாய் உதவப் பொருட்கே கினரவர் காய்ந்திடுஞ்[4]சூர்
[5]மாவாய் இருந்திள வேனிலை யென்செவி வாய்ப்புகட்டுந்
தீவாய்க் குயிற்குப் புகலென்சொன் னூர்சொல்லு தேமொழியே.

மயில்தந தகித்த மாவிநுங் திசைக்குங்
குயில்இசைக் கேது கூறின ரென்றல்

இதுவும் பிரிவுழிக் கலங்கற் குரித்து.

---

1 வார்-நீண்ட 2 சுடர்மூன்று-சூரியன், சந்திரன், அக்னி. 3 கா-கற்பகதரு, 4 சூர்-சூரபன்மன். 5 மா-மாமரம்.

## வேனிற் பருவங் கண்டிரங்கிய தலைவிக்குப் பாங்கி தலைவன் வரவுணர்த்தல்.

வேனிற் பருவங் கண்டிரங்கிய தலைவிக்குப் பாங்கி தலைவன் வரவுணர்த்தல் - என்பது, பொருள் வகை யாதுண்டோ அவ்வளவுங் கொண்டு வருவதாகத் திவுகடோறுஞ் சென்ற கப்பல்களெல்லாம் அந்தந்தக் கரை துறைகளில் வந்து வந்திறங்க அவற்றை யெல்லாம் கொணர்ந்து ஒரு துறைமுகப் படுத்தினர். ஆதலால் இந்த நேரமே தலைமகன் வருவதற்குச் சந்தேகமில்லை. பறை முழக்கமும் வலம்புரி நாதமுங் கேட்கிறது பாராயென்னப் பாங்கி தலைவிக்கு வரவுணர்த்தா நிற்றல்.

(446) மறைவாய் விளங்கிய நம்பர்குற் றாலர் மகேசர்[1]முந்நீர்த்
துறைவாய் தொறுஞ்சென்ற நாவா யொருதுறை வந்திறங்க
நிறைவாய்ப் பொருண்முடித் தார்வரு வாரிந்த நேரத்தன்பர்
பறைவாய் முழக்கமுஞ் சங்கமுங் [2]கேட்குது பாரணங்கே.

பொருள்பல முடித்த புரவலர் வரவு
சுருள்குழற் கிளை தோன்ற வுரைத்தல்.

இதுவும் வன்புறைக்குரித்து.

## மீளுந் தலைவன் சுரத்திடைப் புலம்பல்.

மீளுந் தலைவன் சுரத்திடைப் புலம்பல் — என்பது, உயர்திணை அஃறிணையாகத் தோன்றிய உயிரெல்லாங் குற்றாலத் தெய்வமாகிய ஒரு முதலின்றிச் செயற்படா தென முத்தர்கள் நிச்சயிக்குங் கருத்தினைப் போல, யான் வருவழிக் காண்பவை யெல்லாம் என்னுள்ளத்துக்கு அவளைப்போலவே தோன்றிய தென்னத் தலைமகன் சுரத்திடைப் புலம்பாநிற்றல்.

(447) [3]இருவழித் தோற்றமுங் குற்றாலத் தெய்வ[4]மன் றில்லையென்றே
கருவழித் தோற்ற மொழிந்தாருணருங் கருத்தினைப்போல்
வருவழித் தோற்றத்திற் கண்டதெல் லாமென்றன் மாதுதிரு
[5]உருவழித் தோற்றம தாய்நின்று தோன்றுதென் னுள்ளத்துக்கே.

கான்றெளி றிழைபோற் காண்பவை யெல்லாம்
தோன்றிய தென்னச் சுரத்திடைப் புலம்பல்.

இது வொன்றும் வருவழிக் கலங்கற் குரித்து.

---

1 முந்நீர்-கடல். 2 கேட்குது-கேட்கிறது என்பதின் மரூஉச்சொல். 3 இருவழித் தோற்றம்-உயர்திணை அஃறிணையாகிய இருவகைப் பிறப்புக்கள். 4 அன்றி-என்னும் சொல்லின் இறுதி இகரம் செய்யுள்விகாரத்தாற் கெட்டது. 5 உருவழி-உருவெளி என்பது எதுகைக்காக இவ்வாறு வந்தது.

### புலம்பும் தலைவனைப் பாகன் தேற்றல்.

புலம்பும் தலைவனைப் பாகன் தேற்றல் — என்பது, எனது இரதத்திற் பூட்டிய புரவிகள் ஓரடிக்கோர் காதங் கடந்து செல்லும். ஆதலால் என் தேரானது மாத்திரைப் போதுக்கு ஒவ்வொரு யோசனை செல்லும். நம்மூரைக் கிட்டிக் கொண்டோம்; திருமேனி வாடும்படி புலம்ப வேண்டியதில்லை எனத் தலைவனைப் பாங்கன் தேற்றாநிற்றல்.

(448) அடிக்கொரு காதம் நடக்குமென் றோர்ப்பரி யாதலினல்
நொடிக்கொரு யோசனை செல்லுமென் றேர்நும் புரமடுத்தோம்
படிக்கொரு பார்த்திப ரேமெலி வென்[1]பற்ற லாரைவெல்லத்
[2]தடிக்கொரு குன்றைக் குனித்தகுற் றாலர் சயிலத்திலே.

நும்புர மடுத்தோம் நொடியிலென் றிறைவர்க்
கிம்பரிற் பாகன் இனிதுறத் தேற்றல்.

இதுவொன்றும் பாகனுற்றுவித்தற் குரித்து. இதுவும் வன்புறையின் பாற்படும்.

### வந்துழித் தலைவன் பாகனை மகிழ்தல்.

வந்துழித் தலைவன் பாகனை மகிழ்தல் —என்பது, "தேர் அலங்கரித்துத் தேரின்மேலே வந்திருக்கச் சொன்னதுஞ் சொன்னதின் பின்னர்த் தேரூர்ந்தது தெரியாமல் நம்மூரின்கண் வந்திறங்கி நின்றதுங் கண்டோம். ஆதலால் உனது தேரினுடைய கதி சொல்லுதற்கரிது. அந்தத்தேர் பூமியின் கண்ணே வந்ததோ? விண்ணின் கண் வந்ததோ?" எனத் தலைவன் பாங்கனைக் கேளாநிற்றல்

(449) [3]கார்வந் திறங்கும் பொழில்சூழ்குற் றாலர் கனவரைமேற்
றேர்வந் திருவென்று சொன்னதும் பாகநின் டேரிறங்கி
யூர்வந்து நின்றதுங் கண்டோம் அரிதுன் னுடைநெடுந்தேர்
பார்வந்த தோவிண்ணின் மேல்வந்த தோபக ராயெனக்கே.

தேர்மிசை யேறித் திருநகர் வந்த
பார்புகழ் மன்னன் பாகனை மகிழ்தல்

### தலைமகன் வந்துழித் தலைமகள் மகிழ்தல்

தலைமகன் வந்துழித் தலைமகள் மகிழ்தல்—என்பது, முன்னும் பின்னும் சேனைகள் சென்றுவர, முடிவேந்தரும் பாவேந்தரும் இருமருங்கும் நெருங்கி வர, யானையுந் தேரும் பரியும் எம் மருங்குஞ் சூழ்ந்து

---

1 பற்றலர்–பகைவர். 2 தடி-வில். 3 கார-மேகம்.

வர, நமது தலைவரானவர் வருகின்ற அலங்கரியா நின்ற தோரணம் பொருந்திய வீதியைப் பார்ப்பீரெனத் தலைவி தோழிமார்க்குச் சொல்லாநிற்றல்.

(450) முன்னரும் பின்னரும் [1]தானைகள் செல்ல முடிபொறுத்த
மன்னரும் பாவலரும் [2]புடை யார்ப்ப வயக்களிறுந்
துன்னருந் தேரும் [3]புரவியுஞ் சூழ்வரத் தோன்றல்வரும்
பொன்னருந் தோரண வீதியைப் பாருமென் பூவையரே.

*நிலமிசை யடங்கா நிதிபல தேடித்*
*தலைமகன் வந்துழித் தலைவி மகிழ்தல்.*

**தலைமகளோடிருந்த தலைமகன் கார்ப்பருவங் கண்டு உவந்து சொல்லியது.**

தலைமகளோடிருந்த தலைமகன் கார்ப்பருவங் கண்டு உவந்து சொல்லியது – என்பது, தலைமகளானவள் செந்தாமரை போன்ற கைகளால் வளம் பெறக் கட்டியணைத்துத் தனது உரத்தன பாரங்களை நெஞ்சினுக்குள்ளே குளிரவும் புறத்தே [4]வெச்செனப் பருவங்காட்டவும் கொடுத்து அணையலுற்றாளாதலால், திரிகூடவரையினது குடுமியிற் கவிந்து, கங்கையைத் தரித்தருளிய குற்றால நாயகர் கருணைக் கண்களைப்போல நிலமகட்குக் குளிரும்படி பொழிவாயாக. பொழிந்திட்டு நீடு வாழ்ந்திருப் பாயாகென முகிலைப் பார்த்துத் தலைமகன் வருடருதுவை வாழ்த்தாநிற்றல்.

(451) செங்கை குளிர அணைத்தாவிக் கட்டித் திருந்திழையாள்
கொங்கை குளிரக் கொடுத்தணைந் தாள்திரி கூடவெற்பிற்
கங்கை குளிரச் சடைக்கணிந் தானருட் கண்ணெனப்பூ
மங்கை குளிரப் பொழிவா ழியநெடு வான்முகிலே.

*தலைமக ளிடத்துத் தலைமக னமர்ந்து*
*நிலைபெற நதுவை நீடுவாழ் கென்றல்.*

இவை மூன்றும் வந்துழி மகிழ்ச்சிக்குரிய. ஆகச் செய்யுள் 451.
ஐவகைப் பிரிவும் முடிந்தது.

**கற்பியல் முற்றும்.**

களவியல் 291, வரைவியல் 88, கற்பியல் 72 ஆக இயல் 3 க்குச் செய்யுள் 451.

**குற்றாலக் கோவை முற்றுப்பெற்றது.**

---

1 தானைகள்-சேனைகள் 2 புடை-பக்கம் 3 புரவி-குதிரை 4 வெச்சென-வெப்பமாக

மகர மதியினிற் பூசநக் கத்திர மாந்தினத்தில்
அகலுங்கொள் ளாயிர நாற்பத்து மூன்றெனும் ஆண்டதனிற்
பகர்சது நூற்றைம்பத் தொன்றெனுங் கோவையின் பாடல்கொண்டார்
புகர்முக வேழத்தைப் பெற்றகுற் றாலத்துப் புண்ணியரே.

ஏதுவு தாரண மாந்துறை தூக்கிவற் றுக்குமுன்னம்
ஓது மிவற்றினுக் கோர்செய்யுள் பின்னுமொன் றுய்த்தொடுத்து
மூதுணர் வோர்நகை நாலு துரைத்தமொய்ம் பாலிதமிழ்த்
தாதுகு வேணியர் குற்றாலர் தாட்கிது தானுவப்பே.

"973-ஞு காலயுத்தி ௵ வைகாசி மீ 7 உ குருவாரமுந் துதிகையும் உரோகணி நக்கத்திரமும் இடபலக்கனமும் இராசத வேளையும் அருக்கவோரையும் கூடின சுபதினத்தில் திருக்குற்றாலக் கோவைக்கு முன்னமுஞ் செய்யுளும் எழுதி முடிந்தது.

முற்றும். குருபாதம் முன்னிற்க.

சிவகாமியம்மன் பாதார விந்தமே கதி.

இவ்விடத் திம்மொழி யிவரிவர்க் குரியவென்
றவ்விடத் தவரவர்க் குரைப்பது முன்னம்—

என்பது, யாதோரிடத்தானும், யாதானும் மொழி தோன்றியக்கால் அம்மொழி சொல்லுதற்குரியாருங் கேட்டற் குரியாரும் இன்னாரின்னா ரென்று அறியுமாற்றான் அங்ஙனம் அறிதற்கோரிடம் நாட்டி, அக் கூறுவார்க்கும் கேட்பார்க்கும் ஏற்றவுரை செய்யுட்கீடாகச் சொல்லுவது முன்னம் என்றறிக."

(முற்றும்)

# செய்யுள் முதற்குறிப்பகராதி.

# முன்னத்தின் முதற்குறிப்பகராதி.

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 33 | பொழி | பொழில் |
| ,, | 36 | கடிவண | கடிவன |
| ,, | 36 | நீக்கவன | நீக்குவன |
| 5 | 2 | சிகமபடைத் | சிகம்படைத் |
| 13 | 13 | தோன்றுதென்று | தோன்றுயென்று |
| 19 | 30 | 6 | 5 |
| 24 | 28 | பெருந்த்கை | பெருந்தகை |
| 32 | 21 | கூரல் | கூறல் |
| 35 | 24 | பேணி | பைணி |
| 38 | 6 | நிளா | நிரை |
| 52 | 24 | நின்றன | நின்ற |
| 53 | 13 | நாய்ச்சியாரைக் | நாச்சியாரைக் |
| 56 | 17 | வாக் | வாக |
| 58 | 19 | அவை | அது |
| 62 | 31 | பிரமன | பிரமன் |
| 63 | 25 | தலைவன | தலைவன் |
| 64 | 4 | அதின் | அதன் |
| ,, | 6 | அதின் | அதன் |
| ,, | 18 | வருத்திய | வருந்திய |
| ,, | 33 | தனிக்கும் | தணிக்கும் |
| ,, | 17 | வருத்திய | வருந்திய |
| 71 | 1 | எதுக்கு | எதற்கு |
| ,, | 23 | நயப்பித்ததற்கும் | நயப்பித்தற்கும் |
| ,, | 26 | திருப்பரற் | திருப்பாற் |
| 73 | 9 | சாத்தி | சார்த்தி |
| 74 | 19 | தன்னகைக் | தன்கைக் |
| 77 | 28 | தனகிரியால் | தனக்கிரியால் |
| 78 | 31 | பிரிந்தாரொடுப்போர் | பிரிந்தாரொடுபோர் |
| 79 | 4 | நண | நண் |
| 81 | 21 | ணிரணடும் | ணிரண்டும் |
| 84 | 2 | முகவனசம | முகவனசம் |
| ,, | 21 | மெய்யன்பாகள் | மெய்யன்பர்கள் |
| 89 | 15 | வறுஙகளம் | வறுங்களம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 91 | 9 | இருவரையும | இருவரையும் |
| 94 | 19 | தெனிமை | தெளிமை |
| 96 | 32 | பாகுபோன்ற | பாகு |
| 98 | 29 | பாஙகி | பாங்கி |
| 100 | 26 | நாய்ச்சியார் | நாச்சியார் |
| 101 | 20 | த்ரிவை | தரிவை |
| 109 | 9 | கண்டவளா | கண்டவள் |
| 114 | 3 | இந்நகரத்துந் | இந்நகரத்துக் |
| ,, | 6 | நிததர்சது | நித்தர்சதுர் |
| 119 | 18 | விழிதத | விழித்த |
| 120 | 7 | அவை | அது |
| 121 | 29 | நிலப்பொருளும | நிலப்பொருளும் |
| 129 | 23 | ஒருவர் சதுப் | ஒருவர் சதுர்ப் |
| 131 | 28 | செப்பல | செப்பல் |
| 135 | 7 | செல்வுடன் | செலவுடன் |
| 141 | 17 | (270) | (270). |
| 142 | 31 | கண்ணையுடையவளா | கண்ணையுடையவள் |
| 145 | 6 | நிற்ருல் | நிற்றல் |
| ,, | 25 | வளை | வரை |
| 147 | 30 | கார்ப்பவம் | கார்ப்பருவம் |
| 148 | 31 | தனனை | தன்னை |
| 150 | 9 | தமிழ் | தமிழ்ச் |
| 157 | 3 | பார | பரா |
| 162 | 29 | நீப்பிற் | நீப்பில் |
| 163 | 20 | நாய்ச்சியாரை | நாச்சியாரை |
| ,, | 31 | குரைத்தல | குரைத்தல் |
| 175 | 32 | நுசபபு | நுசப்பு |
| 177 | 30 | படசிததிரம் | படசித்திரம் |
| 178 | 25 | தோயந்தில்வே | தோய்ந்திலவே |
| 179 | 15 | வெல்லாம் | வெல்லாம் |
| ,, | 29 | முருகன் | முருகா |
| 180 | 15 | பலம்பல் | புலம்பல் |
| ,, | 29 | மெய் | 1. மெய் |
| 191 | 10 | யென்றும். | யென்றும், |
| 192 | 27 | ஓலம | ஓலம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 193 | 23 | பாங்கி | பாங் |
| 194 | 13 | பணிமொழி | புனிமொழி |
| 195 | 30 | பொன்கலன் | பொங்கலன் |
| 199 | 31 | நிலலாது | நில்லாது |
| 202 | 3 | தாகும் | தாகும். |
| 204 | 32 | என்றிருந்தனள் | என்றிருக்தனன் |
| 207 | 29 | அநுககிரஹம் | அநுக்கிரஹம் |
| 209 | 27 | முதல்ாக | முதலாக |
| ,, | 28 | இரததம் | இரத்தம் |
| 210 | 9 | கணணிக்குள் | கண்ணிக்குள் |
| ,, | ,, | ளாககி | ளாக்கி |
| ,, | 22 | மங்கையா | மங்கையர் |
| ,, | 32 | விலைமகளிர | விலைமகளிர் |
| 220 | 29 | மோரும | மோரும் |
| ,, | ,, | மதிததவா | மதித்தவர் |
| ,, | ,, | எலலா | எல்லா |
| 228 | 17 | திறுத்த் | திறுத்த |
| 229 | 1 | றகூற்று | கூற்று |
| 231 | 19 | தோழியைய் | தோழியைப் |
| 234 | 9 | பேர்ல் | போல |
| 236 | 10 | தெ்ருள் | தெருள் |
| ,, | 29 | மாவிநுங் | மாவிருங் |
| ,, | 30 | ரென்றல் | ரென்றல். |
| 237 | 28 | தாயநின்று | தாய்நின்று |
| ,, | 32 | கேடகிறது | கேட்கிறது |
| 238 | 32 | காா | கார் |

# பாட்டின் திருத்தம்.

| பாட்டின் எண் | அடி | திருத்தம். |
| --- | --- | --- |
| 3 | 2-வது | பெருமான்குற் றுலக் |
| 32 | 2 ,, | வையென் னிறையனைத்து |
| 41 | 4 ,, | சுழற்றிநச் சிட்டனவே. |
| 48 | 2 ,, | பூதல மோவந்தப் |
| 134 | 2 ,, | சுடுந்தண் ணளியினர் |
| 161 | 3 ,, | துறைந்து விடாதன் பிறைவுன்னைத் |
| 179 | 1 ,, | ருப்பா வையரகட் டெய்தாமல் |
| 194 | 1 ,, | சந்திரவி லோசனர் |
| 199 | 3 ,, | மழைக்கேணி சூழ்நன் |
| 235 | 3 ,, | உறையூரெம் மன்னை |
| 240 | 1 ,, | லெடுத்துரைக் கத்தன்னைச் |
| 246 | 4 ,, | தமர்க ளினுமறைத் |
| 347 | 2 ,, | தின்றி யருள்வாய்குற் |
| ,, | 4 ,, | தாள்சிரத் தேகொள்வன் |
| 348 | 3 ,, | வெற்பில்வன் பாலையழல் |
| 368 | 4 ,, | யென்றுரைத் தாரென்னென் |